## அழைப்பு...!

பாவேந்தர் பாரதிதாசனுர் அவர்களுடைய பாக்கள் இனிக்கும் என்பதோடு அறிவையும் தூண்டிவிடக் கூடியது ஆகும். மேலும் அவர்கள் மிகப் பழைய சங்க இலக்கியமான சிலப்பதிகாரத்தைத் தனக்கே உரிய புரட்சிக் கண்கொண்டு பார்த்து நயம்பட உரைத்த நல்ல கவிதைத் தேனுறுதான் இந்த நூலாகிய கண்ணகி புரட்சிக் காப்பியம்.

இது படிக்கப் படிக்கத் திகட்டாத புதுமை மிளிரும் காவியத்தின் படப் பிடிப்பு. வெகு அற்புதம்! அழகு!

தமிழ் மக்களே படித்து இன்பம் பருகுங்கள் என்றழைக்கிறோம்.

பதிப்பகத்தார்.

# கண்ணகி புரட்சிக் காப்பியம்

## பதிகம்

### இயல் 1.

[வேள்குன்றத்தில் ஒரு நாள் கண்ணகி, அங்கிருந்த குன்றவர்பால் தன்நிலை கூறி அழுது உயிர் விடுகின்றாள். அக்குன்றவாணர் கண்ணகியின் உடலைப் புதைத்தலாகிய அறத்தைச் செய்து புறத்திற் செல்கின்றார்கள். என்றவை இவ்வியல்காண்க!]

மலைநாட்டு நெடுவேள்குன் றத்தின் வேங்கை
மரநிழலில் கண்ணகிதான் வந்து நின்று
கலக்கலெனக் கண்ணீரால் அருவி செய்து
குறவர்களின் மனமதுவும் கரையச் செய்தாள்!
கொலைசெய்யப் பட்டான்என் கணவன் கண்டீர்
குற்றமொன்றும் செய்தறியான்; குன்றத் தோரே!
இலைஉலகில் பருவுடல்தான் எனினும் அன்னோன்
என்னுள்ளத் துள்ளிருத்தல் காணு வீரோ

இல்-இல்லை. 1

முலைதோன்றி முற்றுமுன் தொட்டுச் சென்றோன்
முறையில்லா ளிடம்கிடந்தான், இறுதி யாய்என்
தலைவாயி லிற்கண்டேன் தாவ லானேன்;
தன்வறுமை கூறினன். என்செய் வேன்நான்!
கலைச்செல்வி மாதவியின் முத்தம் வாங்கக்

கைப்பொருள்கேட் டான்போலும் என்றே எண்ணி
நலம்பெய்த என்சிலம்பு தரஇ சைந்தேன்.
நாமிருவர் இன்புற்று வாழ்வோம் என்றான்.
முறையில்லாள்-மாதவி. 2

மதுரையிலே வாணிகமே புரிவோம் நீயும்
வாராயோ எனஅழைக்க:விரைந்து சென்றேன்
இதன்பின்னர் என்காதல் நோய் மருந்தை
இருதுண்டாய்க் கண்டவள்நான்; வாழேன்
என்றாள் !

எதிரேறும் இளங்கொடிதான் கொழுகொம் பற்றே
விழுந்ததையும் இறந்ததையும் கண்டு ணர்ந்தே
அதிர்ந்தஉளத் தோராகிக் கண்ணீர் மல்க
அறஞ்செய்து புறஞ்சென்றார் குன்ற வாணர். 3

இறந்த கண்ணகியின் உடலைப் புதைத்த லாகிய அறத்தைச் செய்து சென்றார்கள் குன்ற வாணர்கள்.

## இயல் 2.

கண்ணகி உடலை அடக்கம் செய்து செல் லும் குறவர்களை அங்குவந்த செங்குட்டுவன்-புதுமை என்ன எனக் கேட்க, நடந்ததைக் கூறினர்; அது கேட்ட செங்குட்டுவன் மற்றும் இதுபற்றிய வரலாற்றை அறிந்துகொள்ள எண்ணிச் செல்லுகின்றனன்.

இவ்வாறு செங்குட்டுவன் சென்ற பின்னர், அக்குன்றவாணர்கள், குணவாயிற் கோட்டத் தில் உள்ள இளங்கோ அடிகளிடத்தும்

சொல்ல எண்ணித் தம் ஊரோடும் சென்றனர் என்பன, —இவ்வியலிற் காண்க.

குன்றத்துக் குறவரெலாம் கைகள் கூப்பிக்
கோமான்நின் திறல்வாழ்க செங்கோல் வாழ்க
என்றைக்கும் தமிழ் வாழ்க என்று வாழ்த்த
எல்லீரும் நலஞ்சார வாழ்கின் றீரோ
இன்றுங்கள் முகத்திலொரு புதுமை என்ன
என்றசெங் குட்டுவன்பால் குன்ற வாணர்
ஒன்றுண்டே ஒன்றுண்டே உலகுக் கெல்லாம்
உணர்வளிப்ப தொன்றுண்டென் றுரைக்க லானர்-4

எல்லீரும்—நீவிர் யாவரும் உணர்வளிப்ப தொன்றுண்டென்றுரைக்கலானர்—உணர்வளிப்பது ஒன்று உண்டு என்று உரைக்கலானர் எனப் பிரிக்க.

ஆடலுற்ற பெண்கட்குத் தோற்றுப் போன
அழகான பச்சைமயில் எதிரிற் கண்ட
காடுபெற்ற தீயில்விழும் வேள்குன் றத்தில்
கண்ணகிதான் கோவலனை உள்ளத் தேந்தி
வீடுபெற்ற தைமன்னன் திருமுன் வைத்தோம்
மெய்ம்மைஇது வென்றுரைக்க உயர்க ருத்தில்
ஈடுபட்ட உள்ளத்தா னகி மன்னன்
இன்னுமுள வரலாற்றை அறியச் சென்றான். 5

முதல் மூன்று வரிகளும் வேள் குன்றத்தின் சிறப்பு.

வீடு பெற்றது—இறந்தது.

அவ்வாறு குட்டுவன்சென் றிட இளங்கோ
அடிகளிடத் தும்சொல்லக் குன்ற வாணர்
செவ்வையுறு குணவாயிற் கோட்டம் நோக்கிச்
சீரூரில் உள்ளவர்கள் அனைவ ரோடும்
பெய்வளையின் கோவலனின் செய்தி ஏந்திப்
பேருளத்திற் பெறுஞ்செய்தி ஆவல் ஏந்தி
எவ்வாறு மலையருவி செலும்? அவ் வாறே
ஈரமலைச் சாரல் கடந் தேகி னார்கள். 6

இளங்கோவடிகள்—செங்குட்டுவன் உடன் பிறந்தவன்: தம்பி. அவன் வாழுமிடம் குணவாயிற் கோட்டம். பெய்வளை—கண்ணகி. பேருளம்—பெரிய உள்ளம். பெருஞ் செய்தி ஆவல் ஏந்தி—இன்னும் பெறவேண்டிய தகவலின்மேல் ஆவல் கொண்டு என்றபடி. செலும்—செல்லும் குட்டுவன்—செங்குட்டுவன்.

## இயல் 3.

வஞ்சி நாட்டின் குணவாயிற் கோட்டம் சென்ற குன்றவாணர்கள், அங்கிருந்த இளங்கோவடிகளிடத்து நடந்ததைச் சொன்னார்கள். அந்நேரத்தில் செங்குட்டுவன்பால் வந்திருந்த சாத்தனாரும், தாம் கண்ணகி பற்றிக் கேள்வியுற்றதையும் சொன்னார்.

இந்த நிகழ்ச்சிகளை ஒரு காப்பியமாக நான் எழுதவா—என்று அடிகளார் கேட்ட அளவில்—சாத்தனாரும், 'நன்று நன்று' என்று புகன்றார்.—

அதனுல் இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் செய்தார்; அதைச் சாத்தனுர் கேட்டார்—அவ்வாறு இளங்கோவடிகளால் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரம் என்ற நூலினுல்—

தனித்தமிழில், சில பாடல்களால் இளங்கோவடிகளின் கருத்தைக் கலப்பில்லாமல் பொதுமக்கள் அறிந்துகொள்ளும் வகையில் ஒரு நூல் செய்யவேண்டும். என்று தோன்றியதால், இந்நூலாசிரியர் கண்ணகி புரட்சிக் காப்பியம் என்ற இந்நூலைச் சொல்லப் புகுந்தார்; இதனுல் தமிழர்கள் தூய தமிழின் சுவைகண்டு வாழ்வார் என்பவை இவ்வியலிற் காண்க.

குன்றத்துக் குறவரெலாம் வழிநடந்து
குணவாயிற் கோட்டத்தைச் சேர்ந்து-இளங்கோ
என்றுரைக்கும் அடிகளிடம் நெடுவேள் குன்றில்
இரண்டுள்ளம் ஒன்றிலொன்று-இணைந்த வண்ணம்
சென்றனவே! கோவலனை ஏந்தும் நெஞ்சச்
சேயிழையாள் கண்ணகியைப் பெற்ற தான
நன்ருன வீட்டுலகம் இன்று பெற்ற
நற்புகழை முன்பெற்ற தில்லை என்ருர். 7

'கோவலன் மாதவியிடமிருந்து என்வீடு வந்தான்: நான் தாவலானேன்' என்று கண்ணகி சொன்னது கொண்டும் கண்ணகி, கோவலன் தன் உள்ளத்தில் இருக்கின்ருன் என்றது கொண்டும் இரண்டுள்ளம் ஒன்றி லொன்று இணைந்த வண்ணம் சென்றனவே

என்று குறவர்கள் சொன்னார்கள். வீட்டுலகம் —சாவு.

அந்நேரம் செங்குட்டு வன்பாற் சென்றே
அடிகளிடம் வந்திருந்த சாத்த னாரும்
முன்நிகழ்ந்த கண்ணகியின் செய்தி யெல்லாம்
முறையாகக் கேள்வியுற்ற படியே சொல்ல
இந்நிகழ்வைக் காப்பியமாய் இயற்ற வோநான்?
எனக்கேட்டார் அடிகளார்! நன் று நன் று
முந்நாடு பற்றியதாம் அதுமு டிக்கும்
முழுத்தகுதி நுமக்கென்றார் சாத்த னாரும். 8

சேரன் செங்குட்டுவனிடம் சென்றுவிட்டு இளங்கோவடிகளிடம் வந்தார் சாத்தனார். முந்நாடு—மூன்று நாடுகள்; அவை: சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு.

புலப்பெரியார் சாத்தனார் இருந்து கேட்டார்
புரைதீர்ந்த அடிகளார் உரைத்தார்! அந்தச்
சிலப்பதிகா ரப்பெருநூல் எனைஅ ழைத்துத்
தனித்தமிழில் சிலபாட்டால் அடிகள் உள்ளம்
கலப்பற்ற பசுப்பாலே யாக மக்கள்
கவிந்துண்ணத் தருகஎனச் சொன்ன தாலே
சொலப்புகுந்தேன் என்தமிழர் இருந்து கேட்பார்
தூயதமிழ்ச் சுவைகண்டு வாழ்வார் நன்றே! 9

புலப்பெரியார்—அறிவு சான்ற பெரியார். புரை—குற்றம். அந்தச் சிலப்பதிகாரப் பெருநூல்...சொன்னதாலே என்றது என்ன?—நடைமுறையில் இருந்த சிலப்பதிகாரத்தைப்

பற்றி இந்நூல் ஆசிரியர் எண்ணியதைக் கூறிய படி. சொலப் புகுந்தேன்—சொல்லப் புகுந்தேன். சொல்லப் புகுந்த நூல் 'கண்ணகி புரட்சிக் காப்பியம்' என்பதை இந்நூலின் தலைப்பால் அறிக.

—

# கண்ணகி புரட்சிக் காப்பியம்

## புகார் காண்டம்

### இயல் 4.

புகாரில் மாசாத்துவான் ஊர்ப் பெரு மக்களை நோக்கி 'என் மகன் கோவலனுக்கு, மாநாய்கர் மகளாகிய கண்ணகியைக் கொடுக்க இசைகின்றார். மணத்தை இருந்து முடித்துவைக்க வேண்டுகிறேன்.' என்றான். அதுகேட்ட பெரு மக்களில் ஒருவராகிய சேந்தனார் என்பவர், "பைந்தமிழ் நான்மறைவகுத்த முறைமையானது செத்துப் போயிற்று? ஒருவனும் ஒருத்தியும் உள்ளம் ஒன்றுபடுதலே திருமணமாகும். அதுபற்றிய பேச்சே இங்கு இல்லை தந்தைமார் ஒத்துக் கொண்டார் என்பதை மட்டும் கேட்கின்றோம். மணமகள் என்பவள் தந்தையால் எடுத்துக் கொடுப்பதான ஓர் அஃறிணைப் பொருளா?" என மறுக்கின்றார். மணமுடிக்க ஒத்துக்கொண்டு அங்கு வந்திருந்த ஆரியன் அது கேட்டு நடுங்கித் தமிழின் அழகையே குலைப்பான் போல உளறலானான்.

அவன் சொன்னதாவது,

எனக்குச் சாக்காடு நெருங்குகின்றது. ஆதலால், நான் சாகுமுன் திருமணத்தை நடத்

திக் கண்ணுல் பார்க்கவேண்டும் என்று நாய்கர் சொன்னதால் நான் ஒத்துக் கொண்டேன். வேண்டாமென்ருல் போய்விடுகின்றேன். என் உடம்பைப் புண்ணுக்கிவிட வேண்டாம்.

என்பன இவ்வியலிற் காண்க:

வரம்பற்ற செல்வத்தான் வாய்மை மிக்கான்
மாசாத்து வான்உரைப்பான் "பெரியீர்! என்றன்
திருமகனும் கோவலற்கு மாநாய் கர்தம்
செல்வியாம் கண்ணகியைக் கொடுப்ப தற்குப்
பெருமனது கொள்கின்ருர் மகன்ம ணந்தால்
பெருமைஎன் கின்றேன்நான் ஆத லாலே
திருமணத்தை முடித்துவைப்பீர்" என்று சொல்லச்
சேந்தனுர் எழுந்திருந்து செப்ப லுற்ருர். 10

கோவலன் + கு—கோவலற்கு: ஒருமை. பெரு மனது கொள்ளல்—ஒப்புதல். சேந்தனுர்-ஊர்ப் பெரு மக்களில் ஒருவர்.

செந்தமிழ்நான் மறைமுறையும் செத்த தேயோ?
செம்மலுளம் மங்கையுளம் ஒன்று பட்டால்
அந்நிலைதான் மணமென்பார் அதனை விட்டே
அப்பன்மார் ஒப்புவதால் ஆவ தென்ன?
தந்தைதரப் படும்பொருளா மங்கை நல்லாள்?
தகுவதன்றே தகுவதன்றே என்று சொன்னுர்.
வந்திருந்த ஆரியனும் நடுந டுங்கி
வாய்திறந்து தமிழ்குலைக்கத் தொடங்க லானுன். 11

செந்தமிழ் நான்மறை—ஆரியரின் நான் மறைக்கு முன்னரே தமிழகத்தில் தோன்றிய அறம், பொருள் இன்பம், வீடு பற்றிய தமிழ் நான்மறை.

சாகுமுன்வி வாஹத்தை நடத்திக் கண்ணல்
தரிசிக்க வேனுமெண்று நாய்ஹர் சொண்ணர்
ஆகாகா எண்றேண்நான் ஆரி யர்கல்
அப்பண்மார் உடம்பட்டாள் விவாஹம் செய்வாள்
ஆகாது த்ரமிளர்க்கே இவ்வி வாஹம்!
ஆணதிறுள் எணெ அழைத்தார் நானும் வந்தேன்!
போகாயோ என்றுறைத்தாள் போகிண் றேணே
புன்னக்க வேண்டாம்எண் உடம்பை என்றான். 12

விவாஹம்—திருமணம்; ஆரியச் சொல். கன்றல்—கண்ணல், தரிசிக்க—பார்க்க; ஆரியம். எண்று—என்று. நாய்ஹர்—நாய்கர். சொண்ணர்—சொன்னர். எண்றேண் நாண்—என்றேன் நான். ஆரியர்கல்—ஆரியர்கள். அப்பண்மார்—அப்பன்மார். உடம்பட்டாள்—உடம்பட்டால். செய்வாள்—செய்வார்கள். த்ரமிளர்க்கே—தமிழர்க்கே. ஆணதிறுல்—ஆனதிறுல். எணெ—என்னை. அழைத்தார்—அழைத்தார். நாணும்—நானும். வந்தேண்—வந்தேன். என்றுறைத்தாள்—என்றுரைத்தால். போகிண்றேணே—போகின்றேனே. புன்றக்க—புண்ணக்க. எண்—என்.

## இயல் 5.

சேந்தனர் எதிர்ப்புக்கு, மாசாத்துவான் கண்ணகியை மணந்துகொள் என்றேன்.

கோவலன் ஒத்துக்கொண்டாலும், இவ்வகையில் நடக்கும் திருமணத்தை நடத்தி வைக்கத் தமிழர் ஒப்பார். ஏனெனில் இது தமிழர் திருமணமன்று; அதனல் இந்த ஆரியனை அழைத்தேன். என் கண்ணிருக்கும்போதே நான் பார்க்கும்படி இதை நடத்திவைக்க வேண்டுகின்றேன் என்று கும்பிட்டான்.

அவ்வாறே ஊரார் ஏற்றுக்கொண்டபின், ஆனல் மண நடைமுறை அத்தனையும் ஆரியமாய் இருத்தல்வேண்டாம். இல்லாவிடில் தீய விளைவுகள் உண்டாகும் ஆதலால், செந்தமிழால் அவையினர் வாழ்த்துவதேயன்றி, நீ ஒருபுறம் நாயைப்போலக் குரைப்பதுவும், நரியைப்போல ஊளையிடுவதும் நம்மிடத்தில் வேண்டாம்! என்ன சொல்லுகின்ருய் என்று சேந்தனர் கேட்க—

ஆரியன் மந்திரங்கள் ஆரியத்தால் செய்ய வேண்டும்; மற்றச் சடங்குகளும் அப்படியே. அதன்பிறகு மணமக்களை ஒன்றுசேர்க்கப் பெரியதொரு சடங்குண்டு; மந்திரமுண்டு; அவையனைத்தையும் செய்து முடிக்கத்தான் வேண்டும். ஆனல் பெரும் பகுதியை அகற்றிவிடுவேன். எனக்குக் கொடுக்கவேண்டிய கூலியைமட்டும் அளவில் குறைக்கக்கூடாது என்ருன். எல்லாரும் நகைப்பில் ஆழ்ந்தார்கள், என்பன இவ்வியலிற் காண்க.

கண்ணகிஎன் றொருபெண்ணை மணப்பாய் என்றேன்
கட்டளையை என்மகனும் ஒப்பி னன் இவ்
வண்ணுந்தாள் திருமணத்தை முடித்து வைப்போன்

ஆரியனே ஆதலினல் அவனை வைத்தேன்,
கண்ணிருக்கும் போதேநான் காண வேண்டும்
காளையுடன் பாவையினை மணவ றைக்குள்
எண்ணநிறை வேற்றிவைப்பீ ரெனக்கும் பிட்டான்!
மாசாத்து வான்சொல்லை ஏற்ருர் ஊரார்! 13

காளை—கோவலன்
பாவை—கண்ணகி

ஆயினுமச் சேந்தனுர் எழுந்தி ருந்தார்
அத்தனையும் ஆரியமாய் இருக்க வேண்டாம்
தீயவினை வுண்டாகும் ஆத லாலே
செந்தமிழால் அவையத்தார் வாழ்த்த லன்றி
நாயைப்போல் குரைப்பதெலாம் நம்பால்
வேண்டாம்!
நரியைப்போல் ஊளையிடல் நம்பால் வேண்டாம்!
நீயென்ன சொல்லுகின்ருய் என்று கேட்க
நின்றிருந்த ஆரியனும் நிகழ்த்த லானன். 14

ஆரிய மந்திரங்கள் சொல்லப்படும்போது நாய் குரைப்பது போலவும், நரி ஊளையிடுவது போலவும் இருக்கும் என்றவாறு.

மந்த்ரங்கல் ஆரியத்தால் செய்ய வேண்டும்
மட்டுமல்ல சடங்குகளும் அப்ப டித்தான்
பிந்திஅந்த வதூவரரை ஒன்று சேர்க்கப்
பெரியதொரு சடங்குண்டே! மந்த்ர முண்டே
அந்தஎலாம் செய்யத்தான் வேண்டும் ஆனல்
பெரும்பாலும் அகட்டிடுவேன் கூலி மட்டும்
எந்தமட்டும் குடுக்கனுமோ குடுக்க வேனும்
என்றுரைத்தான் எல்லாரும் சிரிப்பில் ஆழ்ந்தார். 15

மந்த்ரங்கல்—மந்திரங்கள், மட்டுமுல்ல—மற்றுமுள்ள, சடங்குகலும்—சடங்குகளும், வதூவரரை—மணமக்களை, வேன்டும்—வேண்டும். ஆணல்-ஆனல். பெரும்பாளும்—பெரும்பாலும். அகட்டிடுவேன்—அகற்றிடுவேன். கூளி—கூலி. குடுக்கனுமோ-கொடுக்கணுமோ. குடுக்க வேனும்-கொடுக்கவேணும்.

## இயல் 6

திருமண நாளில் காலையே, யானை மேல் சோடித்தமைத்த அம்பாரியில் கோவலன் கண்ணகி இருவரையும் அமர்வித்து, நகர் வலம் புரிவித்தார்கள்.

அவ்வூர் வலத்தில், ஆடிக்கொண்டே சென்றனர் அழகு மாதர்கள்; பாடுநர் பாடிக்கொண்டே சென்றார்கள்; புலிக்கொடிகள் பறந்தன. அப்போது ஓர் அறிஞன் அங்கங்கு நின்று ஊர்ப் பெருமக்களை நோக்கிக் கோவலன் கண்ணகி இருவரும் இந்நாள் மணம் கொள்கின்றார்கள். அத் திருமணத்தை வாழ்த்திட வருவீர், என்று சொல்லிக்கொண்டு போனன். ஊர்வலம் காணுவோர் அனைவரும் மணமக்களை வியந்து வாழ்த்த நகர்சுற்றி இல்லம் சேர்வித்தார்கள்—என்பன இவ்வியலிற் காண்க.

சோடித்த யானையின்மேற் பொன்னம் பாரி
தூக்கி அதில் மாநாய்கன் பாக்கியத்தை
ஈடில் மா சாத்துவான் இளங்க ளிற்றை

2668



இழையாலும் பட்டாலும் பூக்க ளாலும்
மூடியுடல் மூடாத இருமு கங்கள்
முத்துநிலா பொற்சுடரே எனவி ளங்க
நாடிநகர் வலம்புரிந்தார் பல்லி யங்கள்
நாற்றிசையும் அமிழ்தென்று பாய்ச்சு வித்தார். 16

சோடித்த—சுவடித்த; அழகு செய்த. பாக்கியம்—கண்ணகி. இளங்களிறு—கோவலன்.

ஆடிக்கொண் டேசென்றூர் அழகு மாதர்
அசைந்துகொண் டிருந்ததுவே மக்கள் வெள்ளம்!
பாடிக்கொண் டேசென்றூர் பழந்த மிழ்ப்பண்!
பறந்தனவே புலிக்கொடிகள் வான ளாவிப்
பீடுடைய ஓரறிஞன் இங்குக் காணும்
பெருங்கற்புக் கண்ணகிதான் கோவ லன்தான்
நாடுடையீர்! இந்நாளே மணங்காண் பார்கள்
நன்மணத்தை வாழ்த்திடவே வருவீ ரென்பான்! 17

புலிக்கொடி—அந்நாட்டையாளும் சோழ மன்னன் கொடி. பீடு—பெருமை.

மணிக்குவியல் மீதிலொரு மலர்மு கத்தில்
வந்துவந்து வழுக்கிவிழும் இரண்டு கண்கள்
அணித்திருந்து பார்த்தவர்கள் 'அன்பு ளங்கள்
அணைந்துவரும் நிலைஇதுவாம்' எனவி யப்பார்!
பணித்திடினும் பணிவல்லார் இயற்ற ஒண்ணுப்
பாவைஒன்றும் வீரம்ஒன்றும் பெண்மாப் பிள்ளை!
மணக்கின்றூர் வாழியவே என்பார் கண்டோர்.
மணமக்கள் நகர்சுற்றி இல்லம் சேர்ந்தார். 18

மணிக்குவியல்—கண்ணகி முகம், மலர் முகம் —கோவலன் முகம், வழுக்கி விழுதலாவது, இவள் முகத்தில் அவன் விழிகளும், அவன் முகத்திலும் இவள் விழிகளும் வீழாமற் காப்பினும் வீழ்வது. இரண்டு கண்கள்—இருவர் விழிகளும். அணித்து—அருகில் பணிவல்லார்—வேலைப்பாடு வல்லவர்; ஓவியர், தச்சர் முதலியவர்கள். பாவை-பாவை போன்ற கண்ணகி; உவமையாகு பெயர். வீரம்—கோவலன். இயற்ற ஒண்ணுப்பாவை—பறவாக்குழவி, பாயாவேங்கை என்பது போல.

## இயல் 7

மணம் நடக்கும் மணிவீடு மல்லிகைளாலும், மணமுரசு முதலியவைகளாலும், பூத்தொங்கல் முதலியவைகளாலும், அழகு மிகுதியாகிக் கண் கவர்ந்தது. நாட்டு மக்கள் ஏந்திழைமாரோடு வரத் தொடங்கினர்கள்.

மாசாத்துவானும், மனைவியும், மாநாய்கனும் மனைவியும் வருவாரை எதிர்நோக்கி மரியாதை செய்து வாயிலில் நின்றூர்கள்.

தெருமறையத் தெளித்திருந்த பசுங்கோரை வருவார் கால்பட்டுச் சரசரவென்றன. குத்து விளக்குகள் தத்தி நடந்தன. என்னத் தக்க இளைஞர்கள் வந்தார்கள்;

என்பன இவ்வியலிற் காண்க.

மணநடக்கும் மணிவீடும் பல்லி யத்தால்
மணமுரசால் பூமழையால் வான்வ ரைக்கும்

இணைந்தபெரும் பந்தரினல் முத்துத் தொங்கல்
இனியநறும் பூத்தொங்கல் கமுகு வாழை
அணைந்ததனல் நகர்நடுவில் அழகின் காடே
அணைவாரின் கண்கவர்ந்தே மனம்க வர்ந்தே
இணையற்ற தாயிற்று! நாட்டு மக்கள்,
ஏந்திழைமா ரோடுவரத் தொடங்கி ஞர்கள்! 19

பந்தர்—பந்தல்; போலி,
அழகின் காடு—அழகின் மிகுதி.

மாசாத்து வானேடு மனையும் மற்றும்
மாநாய்க னேடுதன் மனையும் ஆகத்
தேசுற்ற மணவீட்டின் வாயில் முன்னே
தெருநோக்கி வருவாரின் வரவு நோக்கிப்
பூசற்கு நறுந்தேய்வும் பூணத் தாரும்
போடற்கு நறுஞ்சுருளும் வணங்கக் கையும்
பேசற்குச் செந்தமிழும் முற்ப டுத்திப்
பின்பாரார்; நின்றிருந்தார் அன்பார்ந் தாராய்! 20

நறுந்தேய்வு—சந்தனம். தார்—மாலை.
நறுஞ்சுருள்—மணமுள்ளதாக மடித்த
வெற்றிலை பாக்குச் சுண்ணம்.

தெருமறையத் தெளித்திருந்த பசுங்கோ ரைப்புல்
சேவடியும் பூவடியும் மேல்வ ருங்கால்
சரசரெனும்! பூவடிகள் சிலம்பு பாடும்!
தத்தும்பொற் குத்துவிளக் காம்இ ளைஞர்
விரைந்தோட மார்பணிகள் கணக ணென்னும்!
வெறுவெளியில் பெருகுபுனல் மணிவெள் ளம்போல்
அரிவையுடன் அழகன்என நாட்டு மக்கள்
அனைவருமே மணவீட்டை அடைகின் ரூர்கள். 21

சேவடி—ஆடவர் காலடி,
பூவடி—மகளிர் காலடி,
மணிவெள்ளம்—அழகிய வெள்ளம்,
அரிவை—பெண்.
கண கணென்னும்—'கணகண' என்னும். ஒலிக்
[குறிப்பு.

## இயல் 8

மண வீட்டினுள் நுழையும் குறிப்பிடத்தக்க
தலைவர் தலைவியர் பெயர்கள்,
—இவ்வியலிற் காண்க

அன்பரசி ஆணழகு கன்னல் பொன்னன்
ஆடுமயில் அறிவழகன் அன்னம் நல்லான்
தென்னழகு தமிழப்பன் முத்து முல்லை
தேன்மொழியாள் மறவர்மணி திங்கள் செல்வன்
பொன்னோடை பொன்னப்பன் கிள்ளை சேரன்
புத்தமுது தமிழரசு தங்கம் சோழன்
இன்பத்தேன் இளவழகன் ஔவை வேந்தன்
இருங்கோவேள் வயவேங்கை எல்லி நல்லி 22

திருவிளக்கு மதியழகன் நிலவு செங்கோல்
தேனருவி அருளப்பன் தோகை பாரி
மருக்கொழுந்து பொன்வண்ணன் அல்லி வள்ளல்
மல்லிகை மாவளவன் காவேரி சிங்கம்
கரும்புபெருந் தகைமுத்துப் பந்தல் சேந்தன்
கயற்கண்ணி காத்தமுத்து வீரி மன்னன்
முருகாத்தாள் புகழேந்தி தேனி மானன்
முத்தம்மா தமிழ்வாணன் தாயார் வேலன் 23

அழகம்மை ஆளவந்தான் வேனில் தென்றல்
ஆரமுது தமிழ்த்தொண்டன் இலந்தை பொன்வேல்
மழைமுத்து மன்னர்மன்னன் தத்தை எட்டி
மணியம்மை பொன்முடிதே னூறு தென்னன்
மொழியரசி இளந்திரையன் புன்னை நன்னன்
முத்துநகை மாவரசு முதலி யோரை
அழைத்தார்கள் வருகென்றே நலஞ்செய் தார்கள்
அணிஅணியாய் அனைவருமே உட்சென் றார்கள் 24

வருகென்றே—வருக என்றே

## இயல் 9

மணவறை புக்க மணமக்களை வாழ்த்தியபின் மகளிரும் ஆடவரும் கோவலனையும் கண்ணகியையும் அமளிக்கு வருக என்றார்கள். தொலையாதிருக்கும் ஒரு நாழிகையின் அரைக்காலின் முக்காற்பங்கான நேரத்தையும் இது என்ன நஞ்சாக இருக்கிறதே என்று நினைத்துக் கொண்டிருக்கும் கோவலனும் கண்ணகியுமா வரமாட்டோம் என்பார்கள்? வந்தார்கள்; அனைவரும் வாழ்த்துக் கூறித்திரும்பினார்கள்.

பின்—

இங்கே மணமக்களுடன் விருந்துண்ட அனைவரும் சந்தனம் பூசி, சுருள் மென்று வாயை நிறைத்துக் கொண்டு, பேச முடியாமல் விருந்துண்ட சிறப்பினைப் பேசலானார்கள். அப்போது தம் மார்பின் மேலேயே சிந்துகின்ற எச்சிலைக் கண்ட மற்றவர்கள் சிரிக்கலானார்கள் நான் மருந்துண்ணுகின்றேன் ஆதலால் விருந்துண்ணவே இல்லை என்று சொல்லிக்கொண்டே

ஒருவன் மலைவாழைப் பழங்களில் மட்டும் நூறு உண்டேன் என்றான். நிறைய உண்டுவிட்டேன் ஆதலால் என் நிலை கடுமையாய் இருக்கின்ற தென்ற மதியழகனை நோக்கி, ஒரு துரும்பை நீ உள்ளே செலுத்தி உண்டதை வெளியாக்கிவிடு என்று தென்றல் சொல்லிய போது, அந்த மதி யழகன் துரும்பு செல்ல வழியிருந்தால் அங்குக் கிடைத்த தேம்பாகை விட்டிருக்க மாட்டேனே என்றான்.

என்பன இவ்வியலிற் காண்க.

வாழியவே மணமக்கள் என்று சான்றோர்
வாழ்த்தியபின் வாழ்வரசி மாரும் மற்றும்
வாழ்விலுயர் பெரியோரும் அமளி நோக்கி
கோவலனைக் கண்ணகியை வருக என்றார்
நாழிகையின் அரைக்காலிற் முக்காற் பங்கும்
நஞ்சென்பார் பஞ்சணைக்கா வரம றுப்பார்?
யாழ் ஒன்றும் இசைஒன்றும் அமளி ஏற
எல்லாரும் வாழ்த்துரைத்துத் திரும்ப லானார்! 25

அமளி—பஞ்சணை.

திருந்துண்ட மணமக்கள் இருவ ரோடு
சேர்ந்துண்ட நாட்டுமக்கள் தேய்வு பூசி
வருந்துண்ட அடைகாயின் சுருளை மென்று
வாய்நிறைத்து முக்முயர்த்தி இதழ்விள் ளாமல்
விருந்துண்ட சிறப்பினையும் விரிக்க லானார்
விழும்எச்சில் கண்டவர்கள் சிரிக்க லானார்
மருந்துண்டேன் விருந்துண்கி லேன்நான் என்றேன்
மலைவாழை மட்டும்நூ றுண்டேன் என்றான். 26

திருந்துண்ட—திருந்திய, வருந்துண்ட—வரும் துண்ட. வருகின்ற துணிக்கையான அடைகாயின் சுருள்—வெற்றிலை பாக்கு முதலிய வைத்துக் கட்டியது. இந்நாள் இதைப் பட்டி என்பர்.

கறிவகையும் பண்ணியத்து வகையும் நல்ல
கனிவகையும் என்நாவைக் கவர்ந்த தாலே
நிறைமூக்கைப் பிடிக்கநான் உண்டு விட்டேன்
நிலைகடுமை என்றுமதி அழகன் சொன்னான்;
நிறைவயிறு குறைவதற்கு நீள்து ரும்பை
நீஉள்ளே செலுத்தென்று தென்னன் சொல்லச்
சிறுதுரும்பு செல்லஇடம் இருந்தால் வட்டில்
தேம்பாகை விட்டிரேன் என்றான் அன்னோன் 27

அன்னோன்—மதியழகன்,

## இயல் 10

விருந்துண்டவர்கள் தத்தம் வீட்டை அடையக் கடைத்தெருவையும் நடுத்தெருவையும் மேட்டையும் காட்டையும் கால் நடையாகவும் ஊர்திகள் வாயிலாகவும் கடந்து சென்றார்கள்; அவர்கள் விருந்தில் உண்ட உணவுவகைகளை மெச்சலானார்கள். செய்முறை அனைத்தும் புது முறை என்கிறான் ஒருவன். வடையில் நெய் ஒழுகிற்றென்றான் ஓர் ஆடவன்; இல்லை! நெய்யிலே வடை ஒழுகிற்றென்றான் மற்றொருவன். முக்கனி இட்டார்; அதன் அளவு குடத்தளவு என்றான் முத்தன். அதுமட்டுமா ? அதற்கு ஒரு குண்டான் தேன் இட்டார்கள் என்றான் எட்டி என்பவன்.

மற்ருெருவன் இந்த நாட்டில் வழங்கும் விருந்து முறை மாறவேண்டும். இங்கு உண்ண இடவேண்டும். வீட்டுக்கு எடுத்துப் போகவும், அதைப் பின்னர்ப் பல நாட்கள் வைத்துண்ண வும் அமையவேண்டும் என்ருன் பொன்னன். அது கேட்ட மற்றவன் பின்ளுட்களுக்கு வேண்டு மானல் வேறு வீடு பார்த்துக் கொள்க என்று கூறவே—'ஏடா! இந்த நாட்டில் எவன் வீட்டில் புத்துருக்கு நெய்யில் இலேயும் சோறும் கறியும் மிதக்கும்படி படைக்கப்படும் என்று கேட்டான் பொன்னன்.

அவரைக்காய் முதலிய ஐந்தையும் கூட்டி ஞல், அந்தக் கூட்டில் மற்ருென்று தோன்றும் ஆனல் அதன் பெயர் தெரியவில்லே என்று கூறி யவனுக்கு அதுதானடா உயிர்ச்சுவை என்பான் தேவன் என்பான் பேச்செல்லாம் விருந்தின் புகழே!

என்பன இவ்வியலிற் காண்க.

கடைத்தெருவில் நடுத்தெருவில் காட்டில் மேட்டில்
கால்நடையால் ஊர்திகளால் செல்வோர் யாரும்
படைத்திட்ட உணவுகளேப் புகழ லானர்
பாங்கெல்லாம் புதுப்பாங்கென் பான்ஒ ருத்தன்
வடையினிலே நெய்ஒழுகிற் றென்ருன் திண்ணன்
நெய்யினிலே வடைஒழுகிற் றென்ருன் வேங்கை!
குடத்தளவு முக்கனியா என்ருன் முத்தன்!
குண்டான்தே ஞஅதற்கே என்ருன் எட்டி!

முக்கனி - மா, பலா, வாழை,
பாங்கு - முறை.

இந்நாட்டு விருந்துமுறை மாற வேண்டும்
இங்குண்டோம் வீட்டுக்கும் எடுத்துச் சென்று
பின்னாளும் வைத்துண்டோம் என்ப தில்லை!
பேராசை கொண்டிவ்வா றுரைத்தான் பொன்னன்!
பின்னாளில் பிறர்வீடு செல்க என்று
பெரியண்ணன் சொல்லவே பொன்னன், "ஏடா!
இந்நாட்டில் எவன் வீட்டில் புத்து ருக்கில்
இலைசோறு, கறியெல்லாம் மிதக்கும்" என்றான்!

புத்துருக்கு—புத்துருக்கு நெய்.

அவரைக்காய் உப்புநெய் கடுகு தேங்காய்
ஐம்பொருளைக் கூட்டமுதில் அறிய லானேன்
அவற்றோடு மற்றொன்றும் உண்டு போலும்!
எனினுமதன் பேரறியேன் என்றான் ஆண்டான்!
அவைஐந்தின் கூட்டத்தால் மற்றொன் றுண்டாம்;
அதன் பெயர்தான் உயிர்ச்சுவைஎன் றுரைத்தான் தேவன்
எவைஎவையோ பேசுவார் அவற்றி லெல்லாம்
இன்விருந்தைப் புகழாத எழுத்தே இல்லை!

உண்டுபோலும் என்பதில், போலும் அசை.

## இயல் 11

வானத்து முகிலை எட்டும் எழுநிலை மாடத்தின் மேல் இட்ட பஞ்சணையானது, கண்ணகியையும் கோவலனையும் தன் உள்ளிடத்தில் தழுவிக் கொண்டு அதனால் சிறப்பை அடையும் போது பலகணி வழியாக வந்த தென்றலானது இனிமையை வார்த்தது. அதனால் மகிழ்ந்த

வராய்க், காதல் வயப்பட்டவராய் அம்மாடத்தின் நிலா முற்றத்தை அடைந்தார்கள்.

அப்போது, பெருந்தகையான கோவலன் சிரித்தான். கண்ணகி நாணமுற்ருள். கோவலன் தன் நீண்ட கைகளை நீட்டினுன், கண்ணகி அக்கைகளில் சாய்ந்தாள்.

அவன் தனி அவள் தனி என்ற நிலை அவர்கள் கூடியவுடன் இல்லாதொழிந்தது! தம் நினைவை இழந்தார்கள்! இன்பத்தின் எல்லையை அடைந்தார்கள்! அவளின் கருங்குழலை விலக்கி முழுநிலவு போன்ற முகத்தைத் தன் இடது கையால் ஏந்தியபடி பலபடியாக அவளைப் பாராட்டினுன். அவ்வாறு பாராட்டுவோன் புதிதாக அடைந்த இன்பம் பழையதாகும்படி மேலும் மேலும் இன்பத்தில் ஆழ்ந்திடுவான்; மீள்வான். பின்னும் அவ்வாறே—

என்பன இவ்வியலிற் காண்க.

முகில் தழுவும் எழுநிலைமா டத்துக் கட்டில்
முழுநிலவு முகத்தாளை அழகன் தான்தன்
அகம்தழுவிச் சிறப்புறுங்கால் சாள ரத்தால்
அசைந்துவரும் நறுந்தென்றல் இனிமை வார்க்க
மகிழ்ந்தவராய்க் காதல்மிகப் பட்டா ராகி
மாடத்தின் நிலாமுற்றம் வந்து சேர்ந்தார்;
தகைசிரித்தான் நாணமுற்றி ருந்தாள் மங்கை!
தடங்கைகள் நீட்டினுன் அவற்றில் சாய்ந்தாள்!

முகில் — மேகம், சாளரம் — பலகணி. தகை-கோவலன்.

தழுவும்உடற் கூட்டத்தில் தனிமை காணர்
தமைஇழந்தார்; இன்பத்தின் எல்லே கண்டார்!
முழுநிலவைத் தன் இடது கையால் ஏந்தி
மூடவரும் சுரிகுழலே விலக்கி ஆளன்,
"அழகுக்கோர் இலக்கணமும் நீயோ கண்ணே!
அன்புசெய வாய்ந்தஇலக் கியமோ என்றன்
அழல்நீக்கும் குளிர்நிழலே இன்பப் பாவாய்!
அனைத்தும்பெற் றேனுன்னைப் பெற்ற தாலே!

முழுநிலவு—அவள் முகம். அழல்—வெப்பம்.

என்வாழ்வில் நிறைஅமிழ்தே நினைக்குந் தோறும்
இனிப்பவளே! வாய்திறந்து பேசுந் தோறும்
தென்தமிழின் நறுஞ்சாறுய்த் தித்திப் போளே!
தீண்டுதொறும் ஐம்புலனும் இன்பில் ஆழ்த்தும்
பொன்னே! நன்முத்தே! என் பூவே! என்பான்!
புதிதொன்று பழைதாக மேலும், மேலும்,
இன்பத்தில் ஆழ்ந்திடுவான் மீள்வான் பின்னும்
இன்பத்தில் ஆழ்ந்திடுவான் கோவலன்தான்!

## இயல் 12

கண்ணகி இல்லறம் நடத்துகையில் ஒரு நாள், இந்தா ஒரு பாட்டுக் கேட்டுப்போ என்றழைத்த கோவலனுக்கு, கூட்டு ஒன்று விருந்தினர்க்காகச் செய்கின்றேன்; இந்த நேரத்தில் —என்னே அழைக்காதீர் என்ருள்.

கோவலன் என் பாட்டைக் கேட்டலினும் விருந்தினர்க்குக் கூட்டுச் செய்தல் இனியதா

யிற்ரே என்ன, அதற்குக் கண்ணகி, பாட்டுக்கும் நம் காதல் கூட்டுக்கும் நான் செய்து கொண்டிருக்கும் பாகற்காய்க் கூட்டு முறை இனியதென்ருள்.

அந்நாள் நூற்றுக்கு மேற்பட்டவர்கள் பகல் விருந்தினராய் வந்திருந்தனர். அவர்க்கு ஆற்ற வேண்டிய நலன்களை யெல்லாம் ஆற்றி, அவர்கள் அமர்வதற்கும், ஆடல் விருப்பினர் ஆடியிருப்பதற்கும், பாடல் விருப்பினர் பாடியிருப்பதற்கும், காற்றை நுகர்வதற்கும், உலவுதற்கும், காட்சிக்கும் வகைசெய்து வைத்து கலந்துண்ண வருகின்றீர்களா என அழைத்து உணவூட்டவே விருந்தினர்கள் அவளிட்ட சோற்றுக்கும், சாற்றுக்கும், கறி வகைக்கும் இவைகளைப் படைத்தற்குரிய எண்ணத்தூய்மைக்கும் தாய்மைக்கும் மிக வியப்புற்றிருந்தார்கள்.

விருந்துண்டவர்கள் சந்தனம் பூசி மாலையணிந்து அடைகாய் மென்று, மற்றும் தங்கள் வாய்ப்புக்குப் பலவும் கேட்டுப் பெற்று நாட்டு வளம் பேசிச் செந்தமிழ் நூல் இன்பந் துய்த்துப் பட்டு மெத்தையிலும், சாய்ந்திருக்கத் தக்க கட்டிலிலும் அமைந்திருந்தார்கள். அவர்களில் ஒரு முதியோள் என் கால்கள் நோகின்றன என்று அழைத்தாள். அது கேட்ட கண்ணகி தன் வேலைகட்கிடையிலும் அவைகளை விட்டு ஓடி அம்முதியோள் கால்களைப் பிடித்தாள்.

என்பன இவ்வியலிற் காண்க.

பாட்டொன்று கேட்டுப்போ என்று சொல்லிப்
பாவையினை அழைத்திட்ட கோவலற்குக்
கூட்டொன்று விருந்தினர்க்குப் பண்ணுகின்றேன்;

கூவாதீர் என்றுரைத்தாள் அடிஎன் பாட்டைக்
கேட்டலிலும், விருந்தினர்க்குக் கூட்டுச் செய்தல்
இனியதோ கிளத்தென்றான் கோவ லன்தான்!
பாட்டுக்கும் நம்காதல் கூட்டி னுக்கும்
பாகற்காய்க் கூட்டுமுறை இனிதே என்றாள்.

கூட்டொன்று – கூட்டு ஒன்று-
கூட்டு - கூட்டுக்கறி.
கிளத்து – சொல்லுவாய்.

நூற்றுக்கு மேற்பட்டோர் பகல்வி ருந்தாய்
நோக்குவார் மனமகிழ வருகை தந்தார்;
ஆற்றுநலம் ஆற்றிஅவர் அமர்வ தற்கும்,
ஆடற்கும் உலவுதற்கும் பாடு தற்கும்
காற்றுக்கும் காட்சிக்கும் வகைபு ரிந்து
கலந்துண்ண வாரீரோ எனஅ ழைக்கச்
சோற்றுக்கும் சாற்றுக்கும் கறிக்கும் எண்ணத்
தூய்மைக்கும் தாய்மைக்கும் வியந்தார்; உண்டார்!

ஆற்றுநலம் ஆற்றுதல் - நீர் ஏந்தல்
அடைகாய் தரல் முதலியன.

சாப்பிட்டார் கமழ்தேய்வு நிறக்கப் பூசிக்
கண்மலர்த்தேன் மழைநனைந்தே அடைகாய் மென்றே
வாய்ப்புக்குப் பற்பலவும் கேட்டு நாட்டு
வளம்பேசிச் செந்தமிழ்நூல் இன்பந் துய்த்து
மாப்பட்டு மெத்தையிலும் சாய்ந்தி ருக்க
வாய்ப்புற்ற கட்டிலிலும் அமைந்தார் தம்மில்
கூப்பிட்டாள் ஒருமுதியோள் கால்நோய் என்றே
குறுக்கோடிக் கண்ணகிதான் கால்பி டித்தாள்!

வாய்ப்புக்குப் பற்பல கேட்டலாவது—பற் குற்றக் குற்றி கேட்டல், கொப்பளிக்க நீர் கேட்டல் முதலியவை. குறுக்கோடுதல்—வேலைகளுக்கு இடையில் அவைகளை விட்டு ஓடுதல்.

## இயல் 13

கண்ணகி, முதியோளின் கால் பிடித்தாள் அன்றோ? அக்கால்கள் கோவலன் தாயும் கண்ணகியின் மாமியுமான முதியோளின் கால்கள்!

அவள், கண்ணகியின் கைகளைப் பிடித்துக் கொண்டு தோல் பிடித்தும் விதை முதிராப் பக்குவத்தில் அமைந்த பயற்றங் காயைத் துவட்டற் கறி வைத்தமுறை எங்கே கற்றாய்? அது மிக நன்றாயிருந்தது. நீயோ தாய் ஊட்டிய முலைப்பாலால் பிடித்த கறைமாறாத உதட்டை உடைய இளையை. நின் மனையறம் மிகப் பாங்கு; மிக மகிழ்ச்சி எனக்கு என்றாள்.

கண்ணகி ஓடித் தன் அத்தானிடம் நடந்ததைச் சொன்னாள்! அதே நேரம் அம் முதியோளும் அங்கு வந்தாள். வணங்கினார்கள். தென்னகத்துப் பண்பாடுகளை விளக்கும் ஒரு விளக்கை நீவிர் குன்றின்மேல் ஏற்றி விட்டீர்கள் உங்கட்காக நான் பல்பொருள்களைக் கொண்டு வந்துள்ளேன் என்றாள் முதியோள். இருவரும் இருநூறு வண்டிகளில் பொருள்களை எதிரிற் கண்டார்கள்.

என்பன இவ்வியலிற் காண்க.

காலபிடித்த கண்ணகியின் கைப்பி டித்தே,
கண்ணகிக்கு மாமியவள் கோவ லன்தாய்
தோல்பிடித்தும் விதைமுதிராப் பயற்றங் காயைத்
துவட்டுமுறை எவண்கற்ருய்? தாயூட் டிட்ட
பால்பிடித்த கறைமாரு இதழி னுளே!
பாங்கடிநின் மனையறந்தான் மகிழ்ச்சி என்ருள்!
சேல்பிடித்து வைத்தனைய விழிவி யக்கத்
திடுக்கிட்டாள் கண்ணகிதான் பறந்தாள் ஓர்பால்

கண்ணகிக்கு மாமி என்றதோடு நில்லாமல்,
கோவலன் தாய் என்றும் கூறியது கண்ணகியின்
தாய்மாமன் மனைவி அல்லள் என்பதை விளக்க.

எவண்—எங்கே.

அத்தான்நும் அம்மாஎன் அருமை மாமி!
அதோகாண்பீர்! விருந்துண்ட மகளிர் தம்மில்
முத்தொன்றைச் சிப்பிமறைத் ததுபோல் நன்கு
முக்காடு முகமறைக்க அமர்ந்துண் டாரே!
அத்தகையோர் இத்தகையோர் எனக்காண்
கில்லோம்;
அறையினின்று கால்வலியாம் என்ற ழைக்க
எத்தாயோ என்படுமோ என்று சென்றேன்
இருகாலைத் தொட்டேன்என் இருகை தொட்டார்.

முத்தொன்றைச் சிற்ப் மறைத்தது போல்
என்பதில் முத்து முகத்திற்கும் சிற்பி முக்காட்
டுக்கும் உவமை.

என்றேகண் ணகிகூற அதேநே ரத்தில்
எதிர்வந்தாள் கோவலனின் அன்னை தானும்!
சென்றுவணங் கினர்இருவர் அன்பால் அள்ளித்

தென்னகத்துப் பண்பாட்டுப் பொன்வி ளக்கைக்
குன்றிலிட்டீர் ! நன்ருக வாழ்க நீவிர்;
கொண்டுவந்தேன் பல்பொருள்கள் கொள்க
கொள்க
என்றுரைத்தாள் ! அங்கிருவர் எதிரிற் கண்டார்
இருநூறு வண்டிகளில் பல்பொ ருள்கள் !

தென்னகத்துப் பண்பாட்டுப் பொன் விளக்கு என்றது விருந்து புறந்தருதல் முதலிய வற்றை.

பொன் விளக்கு என்றது தென்னகத்துப் பண்பாட்டின் உயர்வை.

குன்றில் இடுதல்—எவர்க்கும் புலனுகச் செய்தல்.

## இயல் 14

காவிரிப்பூம் பட்டினத்து மக்கள்தம் கண்ணும் காதும் கலைவெறி தலைக்கேறுதலால் நிலை குலைந்தனவாகி மேலே விரித்த வளைவுக்கும் அழகிய அரங்க மேடைக்கும் நடுவில், மின்னலோ, கொடியோ, சான்ரோரின் பாக்களால் விரித்துரைக்கப் பெற்ற ஆடல் இலக்கணமோ, குழலோ, யாழோ, பைந்தமிழோ நன்னிலவோ, வேறெதுவோ என்று நாவினல் விரித்துக்கூற, மாதவி ஆடுகின்ருள், உலகமே மகிழ்ச்சி மீதூர !

காணுவோர்—இவ்வாடல் உலகத்தில் ஒரு புதுமையாம் என்று ஆடற்கலையில் பிழைபாடு

டைய வடவரும் பேசினர்கள். மற்றும் பலர் பிற நாடுகளின் ஆடலாசிரியர்களும் இனியும் தமிழ் நாட்டின் ஆடற்பாங்கை அறிந்து கொள்வது அரிதே என்று புகன்றார்கள்.

மாதவியின் கரு விழிகள் கடை ஓடிக் காதற் கருத்தை விளக்கியும், செவ்விதழில் மின்னி யும் கிடத்தலைக் கண்டவர்கள் அவளின் இரு தோள்களும் ஒரு சிற்றிடையும் அசைதலால் எழும்பிய பூப்பந்து போன்ற முலைகள் அழகிய மார்பில் குலுங்கும் புதுமை காணவில்லை!

இருந்த இடத்திலேயே வலம்புரிச் சங்கு போன்ற கழுத்து இருக்க அதன் மேல், இடம் வலமாய் நிலவு போன்ற முகம் மிதப்பதைப் பார்த்துக்கொண்டே இருந்தவர்கள் வண்டு பாடும் மலர் புனைந்த சடையாகிய பாம்பு உடுக் கை போன்ற இடையைச் சுற்றுவதைப் பாராத வர் ஆனர்.

என்பன இவ்வியலிற் காண்க.

காவிரிப்பூம் பட்டினத்தின் கண்ணும் காதும்
கலைவெறிதான் தலைக்கேற நிலைகுலைந்து
மீவிரித்த வளைவுக்கும் மணிமே டைக்கும்
நடுவினிலே மின்னலோ கொடியோ சான்றோர்
பாவிரித்த இலக்கணமோ குழலோ யாழோ
பைந்தமிழோ நன்னிலவோ யாதோ என்று
நாவிரிக்க மாதவிதான் ஆடு கின்றாள்
நானிலமே மகிழ்ச்சிக்கூத் தாட ஆட

பட்டினம்—பட்டினத்து மக்கட்கு ஆகு பெயர். மீ—மேல்.

முழவினேன் முழவின்மேல் ஒற்றும் கையும்
மொய்குழலாள் அடைவுபெற மிதிக்கும் காலும்
வழிஒத்தி ருக்குமிது கூர்ந்து காணின்
வையத்துக் கொருபுதுமை ஆகும் என்று
பிழைபாட்டு வடவர்களும் பேச லானர்!
பிறநாட்டின் அறிஞரெலாம் பிற்றை நாளும்
அழகிருந்த தமிழ்நாட்டின் ஆடற் பாங்கை
அறிவதெனில் அருமையே எனப்பு கன்ருர்.

முழவு—மத்தளம்.
அடைவு—காலடைவு.
வடவர்—ஆரியரும், தமிழகத்திலுள்ள பார்ப்பனரும்.

கருவிழிகள் கடையோடி விரலில் காதற்
கருத்துரைத்துச் செவ்விதழில் மின்னக் கண்டோர்
இருதோளும் சிற்றிடையும் அடித்த பூப்பந்
தெழில்மார்பின் மேற்குலுங்கும் புதுமை காணர்
இருந்தபடி வலம்புரிதான் இருக்க மேலே
இடம்வலமாய் ஒருநிலவு மிதக்கக் கண்டோர்,
சுரும்பிருந்து பாடுமலர்ப் பின்னற் பாம்பு
துடியிடையைச் சுற்றுவது காணு கில்லார்.

வலம்புரி—கழுத்து, பூப்பந்து—முலே, நிலவு—முகம், இவை அனைத்தும் உவமை ஆகு பெயர்கள்.

## இயல் 15

மாதவி ஆடுவதைப் பார்த்துக் கொண்டிருந்த மன்னன்—ஆடல், பாடல், அழகு ஆகிய மூன்றிலும், அந்தமிழின் மேன்மையை விளக்குவதிலும் எனக்கு ஈடானவர் எவருமில்லே என்று மாதாவி கூறினள் போலிருக்கின்றது.

ஆடற்கலையில் இந்நாட்டுக்கு இணையாக எந்நாடுமில்லை என்று கூறினாள் போலிருக்கின்றது; அதனால் பெருமை அடைந்தவள் அவளல்லள் நானே! புகழ் அவளுக்கன்று; இந்நாட்டுக்கு! அவையிலுள்ளார் அனைவரும் கலையை அடைந்து மகிழ்கின்றார்கள்.

இயலிசைநா டகமூன்றும் இந்தா என்றே
இவ்வுலகு கண்டுகேட் டுணர்ந்து வக்கக்
கயல்விழியால் மலர்வாயால் சுவடிக் காலால்
கடிதீந்த திறம்அரிது. நாம்இ தன்முன்
குயில்.கேட்டோம் கிளிஅறிந்தோம் மயிலைப்
பார்த்தோம்!
கூற்றும்பாட் டும்கூத்தும் ஒருங்கு காணும்
அயலார்பால் கண்டவெலாம் சுண்டைக் காய்கள்
அரிவையால் பெற்றதுதேன் வாழையாகும்!

இந்தா—இகரச் சுட்டின் திரிபு. உணர்ந்து வக்க என்பதை, உணர்ந்து உவக்க எனப்பிரிக்க

கடிதீந்த—கடிது ஈந்த, சிறிது நேரத்தில் காட்டிய, சுவடிக்கால்—சுவடிபோன்ற கால், பனையின் இளவெண்குருத்தை அளவாய் வாரி எழுதிச் சேர்த்த ஓலைச்சுவடி.

இவ்வாறு புகழ்ந்தானாய் மன்னர் மன்னன்
இந்தாடி என்கண்ணே பச்சை மாலை
செவ்விதின்நீ தலைக்கோலி ஆக! மேலும்
தேடரும்பொன் ஆயிரத்தெட் டுக்க ழஞ்சே
எவ்வாறும் விலைபெறும்என் றான்அ ளித்தான்
இருந்தவர்கள் எல்லாரும் மகிழ்ந்தா ராகி
அவ்வளவும் தகும்தகும்என் றுரைத்தார் ஆங்கே
மற்றவரும் தகும்பரிசில் அடைந்து வந்தார்!

இந்தா ஏடி—இந்தாடி; திரிபு புணர்ச்சி. தலைக் கோலி ஆக—தலைக்கோற்பட்டம் உடையவளாக; ஆடலிற் சிறந்தவளாகத் திகழ்க என்றபடி. மற்ற வரும்—ஆசிரியன், தண்ணுமை வல்லான், பாட லாசிரியன் முதலியவர்களும்.

## இயல் 16

ஆடல் கண்ட நாட்டு மக்கள் மாதவி பரிசில் பெற்றுச் சென்றுவிடுவதைப் பொருதவர்களாகி ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் கிடந்த அழகை விடைகொடுத்துப் பரிசில் தந்து நம் வேந்தர் விரைவாக அனுப்பிவிட்டாரே அந்தோ என்று சொல்லி, மனமும் கண்ணும் (அவளைப்) பின்பற்றிச் செல்ல, இன்பத்தை விடாது பற்றும் இயல்புள்ள உயிர்செல்ல எல்லாரும் இனத் தோடு செல்கின்ற மாதவியோடு செல்லலானார் கள்.

ஆயிரம் கண்கள் அவள் இனிய தேனிதழில் மொய்க்கும்! இரண்டாயிரம் கண்கள் அவள் கண்ணாகிய நீலமலர்த் தேனில் மொய்க்கும்! இவ் வாறு சூழ்ந்துள்ள மக்கள் ஒரு கடல்! அக்கடலின் நடுவில் மாதவி ஒரு புள்ளி.

அவள் முதுகின் பின்னே சென்ற ஒருவன் தன் கழுத்தை நீட்டி, அவள் மலர் முகத்தை உற்றுப் பார்க்கின்றான். துவளுகின்ற பின்னலைத் தொடுகின்றான் ஒருவன்! பொன்னா மின்னா என்று அவளுடம்பைப் பார்த்தபடி நடக்கின்றான் ஒருவன்! நெஞ்சுறுத்தும் காதலால், ஒருவன் வஞ்சியின் முதுகைத் தொட்டு நக்கிச் சுவைக்கின்றான். தன் மேற்பட்ட அவளின் மேலாடையைப் பூஞ்சோலை என்றான் ஒருவன்

—என்பன இவ்வியலிற் காண்க.

கடைஓடி நொடிமீளும் கண்ணென்ன கண்ணே!
காப்பியத்தின் பொருள்முடிக்கும் விரலென்ன
விரலோ!
துடைஅரங்க மின்னிநெளி இடைஎன்ன
இடையோ!
தூண்டாத மணிவிளக்கின் ஒளிப்பிழம்பு காற்றால்
அடைவதென அடைவுபெறும் உடலென்ன
உடலோ!
ஆடிக்கொண் டும்பாடிக் கொண்டுமிருந் தவளை
விடைகொடுத்துப் பரிசளித்து நம்வேந்தர் வேந்தன்
விரைந்தனுப்பினான் அவளும் செல்லுகின்றாள்
அந்தோ!

இதுமுதல் மூன்று விருத்தப் பாக்கள் அரையடி தோறும் மூன்றும் சீர் மூவகைச் சீராய் வருவன. துடை அரங்க—துடை அரக்குதல் கொள்ள; அரக்குதல்—அழகுறப் புடை பெயர்தல். ஒளிப்பிழம்பு காற்றால் அடைவது நடுக்கம்; அசைவில் ஓர் விரைவு கொள்ளல்.

எனக்கூறி மனம்செல்லக் கண்களெலாம் செல்ல
இன்பத்தை விடாதுபற்றும் இயற்கைஉயிர் செல்ல
இடம்தொடரச் செல்கின்ற மாதவியி னோடே,
எலாரும் செல்லலுற்றார் ஆயிரங்கண் அன்னாள்
இனியதேன் இதழினிலே ஒருங்கோடி மொய்க்கும்!
இரண்டாயி ரங்கண்கள் கண்ணீலத் தேனில்
உனக்கெனக்கென் றேஓடி மொய்க்கும் மிகு! மக்கள்
ஒருகடலே; மாதவிதான் நடுவில்ஒரு புள்ளி!

இயற்கை—இயல்புள்ள.
இனம்—ஆடலாசிரியன், பாடலாசிரியன், முதலியவர்கள்

புள்ளி—சிறப்புப் பொருள்.

அவள்முதுகின் பின்னிருந்த ஓர்ஆள் கழுத்தை
அணுகிஅவள் மலர்முகத்தை உற்றுப்பார்க்கின்றான்
துவளுகின்ற பின்னலினைத் தொடுகின்றான் ஒருவன்
சுடர்ப்பொன்னே மின்னலோ என்றுடலை ஒருவன்
கவலையுடன் பார்த்தபடி நடக்கின்றான் மற்றும்
கருத்துறுத்தும் காதலால் வஞ்சியவள் முதுகை
அவுக்கென்று தொட்டுநக்கிச் சுவைக்கின்றான் ஒருவன்
அவள்ஆடை மேற்பறக்கச் சோலைஎன்றான் ஒருவன்

கவலை—மனம் ஊன்றல். கருத்துறுத்தும்—கருத்து உறுத்தும். அவுக்கென்று—விரைவுணர்த்தும் குறிப்பு. பறக்க-செயவெனெச்சம். காரணப் பொருட்டு இறந்த காலம். பறந்த காரணத்தால் என விரிக்க.

## இயல் 17

நகர மக்களின் நெருக்கத்தால் மாதவிக்கு நலிவு வராதிருக்கப் பல்லோர் சேர்ந்து கை கோத்துக் கொண்டு பெரிய வட்டம் ஆக்கி, நடுவிலே நடத்திச் செல்லுகின்றார்கள். இவ்வாறு அரசர் தெருவை அடைந்த அவள் தன்னைச் சூழ்ந்துள்ள ஆடவரின் முகவரிசையில் தன் கண்களைச் செலுத்தும்போது, ஒரு காளை தன் நெஞ்சைத் தொட்டான்.

அவன் யார்?—அரசரும் கடன் கேட்கும் செல்வரின் பிள்ளை; கண்ணகியை மணந்த செம்மல்; பாவலரும் பாக்களுக்கு என்ன பொருள் என்று கேட்டுத் தெரிந்துகொள்ளத் தக்க தமிழ் வல்லவன்; பலரோடு மாதவியின் ஆடல்காண வந்தவன்; அவளின் பின்னேடு சென்றவன்; அவன் அவள்மேல் ஆசையுற்றதனல் அவள் என்னைத் திரும்பிப் பார்க்க மாட்டாளா என்று எண்ணிக்கிடந்தான். கடைக் கண் பிச்சை ஈந்தாள். ஏற்றுக்கொண்டான்! இவன் கண்கள் அவள் கண்களையும், அவள் கண்கள் இவன் கண்களையும், இவன் மனம் அவள் மனத்தையும் அவள் மனம் இவன் மனத்தையும் பறிக்கும் கதை நடக்கும்போது மாதவியின் சார்பில் ஒரு கூனி "நம் மன்னவர் மகிழ்ந்து மாதவிக்கு அளித்த மாலைக்கு ஆயிரத்தெண் கழஞ்சு பொன் தந்து மாதவியை அடையலாம்" என்று மக்களிடம் கூறுகின்ருள். அதுகேட்ட மாதவி உடனே கோவலன் தோளில் அம்மாலையைப் போட்டாள்! கோவலனும் உடன்பட்டுப் பொன்னைக் கொடுத்தான்!

இருவரும் ஓடுகின்ருர்கள். உடனிருந்தவர்கள் அனைவரும் ஏமாற்றம் அடகின்ருர்கள்! வருந்து கின்ருர்கள் சிலர். அவ்விருவரின் மகிழ்ச்சியைக் கண்டும் அவனுக்கும் அவளுக்கும் உள்ள பொருத் தத்தைக் கண்டும் மகிழ்கின்ருர்கள். சிலர் இன்னும் ஓடுகின்ருர்கள்; மாதவியின் வீடாகிய கூட்டை அடைந்தார்கள்; மாதவி கோவலன் ஆகிய அன்றிற் பறவைகள்.

—என்பன இவ்வியலிற் காண்க.

நகரமக்கள் நெருக்கத்தில் மாத விக்கு
நலிவுவரா திருக்கவே பல்லோர் சேர்ந்து
தகுநெடுங்கை கோத்துமா வட்டம் ஆக்கித்
தையலினை நடுவினிலே நடத்திச் சென்றார்.
திகழ்தருமோர் அரசர்தெருச் செல்லல் உற்ற
திருநுதலாள் தனைச்சூழ்ந்த ஆட வர்கள்
முகவரிசை மேற்றனது விழிசெ லுத்தும்
வேளையொரு காளைதன் நெஞ்சைத் தொட்
டான்!

மாவட்டம் - பெரிய வளையம். காளை நெஞ்சைத் தொட்டான் என்றது, கோவலன் மேல் தன் நெஞ்சம் சென்றதை.

காவலரும் கடன்கேட்கும் செல்வர் பிள்ளை;
கட்ட ழகன்; கண்ணகியை மணந்த செம்மல்;
பாவலரும் பொருள்கேட்கும் தமிழ்வல் லாளன்
பலரோடு மாதவியின் ஆடல் காணும்
ஆவலினால் அங்குவந்தோன் வெளியிற் சென்ற
அன்னாளின் பின்சென்றான்; கடைக்கண் பிச்சை
ஈவாளா எனக்கிடந்தோன் ஈந்தாள்; ஏற்றான்
இரண்டுள்ளத் திறப்புவிழா இதுவாம் என்க.

காவலர் - அரசர். செம்மல் – ஆடவரிற் சிறந்தவன்.

கண்ணைக்கண் மனத்தைமனம் கன்னம் வைக்கும்
கதை முடிந்து போனவுடன் மங்கை சார்பில்

நண்ணி ஒரு கூனிதான் "ஒன்று கேட்பீர்!
நம்மன்னர் உவந்தளித்த நன்மா லைக்கே
உண்ணசையால் ஆயிரத்தெண் கழஞ்சு தந்தோன்
ஓவியத்தை மாதவியைப் பெறுக" என்ருள்!
ஒண்ணுதலும் அவன்தோளில் மாலை போட்டாள்;
உவப்போடு கோவலன்பொன் ஈந்தான் கையில்!

கன்னம் வைத்தல்-பறித்தல். உண்ணசை - உள் நசை; உளமார்ந்த ஆசை.

ஒண்ணுதல் - ஒண்மை நுதல், ஒளி பொருந்திய நெற்றியை உடைய மாதவி; பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

ஓடுகின்ருர் ஓடுகின்ருர் இருவர் தாமும்!
உடனிருந்த கூட்டத்தார் ஏமாந் தார்கள்!
வாடுகின்ருர் அவர்களிலே சில்லோர்! சில்லோர்
மகிழ்கின்ருர் அவ்விருவர் மகிழ்ச்சி கண்டு,
பாடுகின்ருர் சில்லோர்அப் பாவை யாட்கும்
பைந்தமிழச் செம்மலுக்கும் பொருத்தம் என்றே!
ஓடுகின்ருர்; மாதவியின் வீட்டுக் கூட்டின்
உள்ளடைந்தார் மாதவிகோ வலன்அன் றில்கள்!

கடைசி அடியின் ஓடுகின்ருர் வினையாலணையும் பெயர்; எழுவாய். உள்ளடைந்தார் - பயனிலை. மாதவி கோவலன் - எழுவாய். அன்றில்கள் - பெயர்ப் பயனிலை. அன்றில் பறவைகள், ஒன்றைவிட்டு ஒன்றுபிரிந்தால், காதல் தோல்வியால் உயிர்பிரியும் இயல்புடையவை.

## இயல் 18

மாதவியுடன் அவளில்லம் சேர்ந்த கோவலன் வீட்டில் கூடத்தை அடைந்தவுடன், பஞ்சணை அறையைக் கண்ணுல் தேடினுன். அவளும் அதை அறிந்து சுட்டிக் காட்டினுள். இருவரும் உட்புகுந்தனர். பஞ்சணை ஏறினுர்கள். அவளை அவன் பாராட்டினுன். முகத்தோடு முகம் சேர்த்தான்.

அவளின் புதுத்தேனில் ஊறவைத்த கனி இதழே எனக்குத் துணை என்று இன்புறலானுன்.

இவ்வாறு கோவலன் கன்னல் ஒன்றுக்கு ஓரிலக்கம் பொன் விழுக்காடு செலவு செய்து வந்தான்.

ஒரு நாள் அறையின் பஞ்சணையிலிருந்த கோவலன் தனியே தெருவிற் சென்றுகொண்டிருந்த ஓர் இளைஞனைக் கண்டு திடுக்கிட்டான். அவள் என்ன என்ருள். என்போன்ற இவ்விளைஞன் தன் துணைவியைப் பிரிந்தும் வாழ்கிருன் என்ருன்—

என்பன இவ்வியலிற் காண்க.

உட்புகுந்து கூடத்தின் நடுவில் நின்றே
ஒண்டொடியின் முகம்பார்த்தான்; வீட்டைப்
பார்த்தான்
சுட்டினுள் பஞ்சணையின் அறையை! அன்னேன்
தோகையினை அணைத்தபடி உட்பு குந்தே
எட்டினுன் பஞ்சணையை! உடன்ப றந்தாள்!
இருபெருக்கின் ஒருவெள்ளப் புனலே யானுர்

கட்டிக்க ரும்படிஎ னத்தொ டங்கும்
கவிக்கிடையில் முகத்தில்முகம் கவிழ்க்க லானன்.

ஒண்டொடி—ஒண்மை தொடி; ஒளி உள்ள வளையலை அணிந்தவள்; மாதவி.

புதுத்தேனில் ஊறவைத்த கனியு தட்டைப்
புகல்என்ருன் கண்ணகியை மறந்தே போனன்!
எதிர்ப்பாரும் நட்பாரும் இலாத தான
இன்பஉல கிதுவென்றே அவள்தோள் சாய்ந்தான்
இதற்குத்தான் நான்பிறந்தேன் இவ்வை யத்தில்
என்பான்போல் தழூஉமார்பை விடாதி ருந்தான்
முதற்ருெடங்கும் முத்தமழை கடைசி யூழி
முடியுமட்டும் முடியாது போலும் அங்கே!

புகல்—உறுதுணை. தழூஉம் - தழுவும்; அளபெடை.

கைந்நொடியை ஓரிலக்கம் பொன்ருற் போக்கிக்
கைப்பொருளைப் போக்கிவரும் நாளில் அன்னேன்
தன்அறையின் பஞ்சணையில் அவளின் தோளில்
சாய்ந்தபடி பலகணியால் தெருவிற் சென்ற
சின்னவனைக் கண்டிட்டான்; கோவ லன்தான்,
திடுக்கிட்டான்; உடலதிர்ச்சி உணர்ந்த மங்கை
என்னஎன்ருள்; என்போன்ருன் துணைவி இன்றி
எவ்வாறு தனித்தும்உயிர் வாழ்ந்தான்?–என்ருன்.

கைந்நொடி - இமைக்கும் நேரம். கைந்நொடி ஒன்றை ஓரிலக்கம் பொன்ருற் போக்கி— இமைப்போது ஒன்றுக்கு ஓரிலக்கம் பொன் விழுக்காடு அவள் பொருட்டுச் செலவு செய்து.

## இயல் 19

பாடுவன அனைத்தும் காதற் பாட்டுக்களே. கோவலன் பஞ்சணையில் இருந்தபடி உண்பான். அவளுக்கும் அவனுக்கும் மோதல் ஏற்பட்ட தில்லை; முத்துநகை இதழுக்குள் மறைந்ததில்லை. ஈதலும் ஏற்பதும் இல்லை. இன்பப் பொய்கை இறங்கினோர் கரை ஏறும் நினைப்பே இல்லா தவர் ஆனார்கள். கோவலனுக்கு அவள்; அவ ளுக்குக் கோவலன்.

அந்நாளில் மாதவி நிலாமுற்றத்தில் கோவல னிடம் இன்பமே நுகர்தல் போல பல மகளிரும் தம் மணாளர் தோளில் ஒடுங்குவார்கள். பாவை கண்ணகி மட்டும் கொழு நனின்றித் தைப் பொங் கல் உண்ணல் இழந்த உழவனைப்போல் தளர லுற்றாள். அவள் கண்ணில் மை எழுதாள்; பொட்டு வையாள்; தலைக்கு நெய்யணி செய் யாள்; மங்கல அணி அன்றி, மற்ற அணி அணி யாள்; ஒப்பனைகள் மறந்தாள்; செந்தமிழ்,புலவர் களை இழந்தால் சிறத்தல் உண்டோ? அது போலவே எங்குமுள்ள மாதர்களில் கண்ணகி போலவே இணை பிரிந்து துன்புறுவோர் பலர் ஆனார்கள். நிலவு ஒன்றே குளிர்ந்திருந்தும்; அழகு பெற்றிருந்தும் சிலர்க்கு அல்லலையும் சிலர்க்கு நலத்தையும் செய்தல் வியப்பே ஆகும்-

—என்பன இவ்வியலிற் காண்க.

காதற்பாட் டேயன்றிப் பிறபாட் டில்லை
கட்டிலிலே உண்பதன்றி இறங்கல் இல்லை
மோதல்வரக் காரணமே இருந்த தில்லை
முத்துநகை இதழுக்குள் மறைந்த தில்லை

ஈதலில்லை ஏற்றலில்லை இன்பப் பொய்கை
இறங்கினோர் கரையேறும் நினைப்பே இல்லை
ஈதில்லை என்பதில்லை கோவலற்கே
இவளிருந்தாள் மாதவிக்கே அவனிருந்தான்.

முத்துநகை இதழுக்குள் மறைந்ததில்லை என்பது, அவர்கள் எப்போதும் சிரித்து மகிழ்ந்துகொண்டிருந்தார்கள் என்பதைக் காட்டுவதாயிற்று.

அந்நாளில் மாதவிநி லாமுற் றத்தில்
அன்பனிடம் இன்பமே நுகர்தல் போல
பன்மகளிர் மணாளர்தோள் ஒடுங்கு வார்கள் !
பாவைகண் ணகிமட்டும் கொழுந னின்றித்
தன்பாற்பொங் கலைஇழந்த உழவ னைப்போல்
தளர்வுற்றாள் பஞ்சணையிற் புரள லுற்றாள்
இன்கண்ணில் மைஎழுதாள் பொட்டும் வையாள்
இருண்டகுழல் நெய்யணியும் இன்றிச் சோர்வாள்

தன் பால் பொங்கலை இழந்த உழவன் துன்புறுதல் தன் கணவனை இழந்து துன்புறும் பெண்ணுக்கு உவமை. இன் கண்—காண்பார்க்கு இனிமை செய்கின்ற கண் என்க.

மங்கலத்தின் அணியன்றி அணிம றந்தாள்
வழக்கத்தால் செய்கின்ற ஒப்ப னைகள்
மங்கைதான் செய்தறியாள் செந்த மிழ்தான்
மாப்புலவர் இழப்பின்உயர் விழத்தல் போலே
எங்குமுள்ளார் தம்மிற்கண் ணகியே என்ன
இணைபிரிந்து சீரற்றார் பலரா னார்கள்

திங்கள் ஒன்றே குளிர்கொண்டும் அழகு கொண்டும்
சிலர்க்கல்லல் சிலர்க்குநலம் செயல்வி யப்பே

சிலர்க்கல்லல்—சிலர்க்கு அல்லல்

## இயல் 20

கா விரிதல் போல், எங்கும் விரிதற் காரணத்தால் காவிரி என்றனர். அக் காவிரி சூழ்ந்ததால், அப்பட்டினம் காவிரிப்பூம் பட்டினம் என்று தலைநாளில் புலவர் பெரு மக்கள் சொன்னார்கள். அதற்கு மூவேந்தரிலும் புகழ்வாய்ந்த மாவளவன் மன்னன். காவிரிப்பூம் பட்டினத்து மக்கள் வேலைக்கு வேலை இதோ வந்து விட்டது என்று கூறும் காவிரி விழாவானது, நாளைக்கு என்றாகிப் பின்பு நடுப்பகலும் இராப் போதும் நடந்த பிறகு கடலில் ஞாயிறு தோன்றியது காவிரியாற்றுத் திருநாள் என்று அரச யானை மேல் இருந்து ஒருவன் முரசறைந்தான்

—என்பன இவ்வியலிற் காண்க.

பூவிரிந்து வானெங்கும் தேன்வி ரிந்து
பொன்விரித்தாற் போலுநறும் பொடிவி ரிந்த
காவிரிதல் போலெங்கும் விரித லாலே
காவிரிஆ றென்றார்கள் ; அதன்தொ டர்பால்
காவிரிப்பூம் பட்டினம்என் றேமுன் னாளில்
கவிவிரியும் நாவினோர் நகரைச் சொன்னார்
மூவிரிநூற் றமிழ்வேந்தர் மூவ ருள்ளும்
முந்துபுகழ் மாவளவன் அதற்கு மன்னன்.

கா—சோலை. பூவிரிந்து என்பது முதல் பொடிவிரிந்த என்பது வரைக்கும் காவுக்குச் சிறப்பு. மூவிரிநூல் தமிழ்வேந்தர்—இயலிசை நாடகம் என மூன்ருக விரிந்த நூற்புலமை மிக்க சேர சோழ பாண்டியர். சோழன் மாவள வன் என்க.

காளைக்கு நாளெண்ணிக் காத்தி ருக்கும்
காதலிபோல், இனிப்பான பதநீர்த் தென்னம்
பாளைக்குக் காத்திருக்கும் ஊரார் போல்,அப்
பட்டினத்து வாழ்கின்ற மக்கள் யாரும்
வேளைக்கு வேளைஇதோ வந்த தென்று
விளம்புமொரு காவிரிவி ழாநெ ருங்க
நாளைக்கே என்றுமகிழ் கொண்டார். காலை
நடுப்பகல்; இராப்போது நகர்ந்த பின்னே,

காளை—காதலன். பதநீர்—பனஞ்சாறு, பின்னே என்பது அடுத்த பாட்டைத் தொடர் கின்றது. இது குளகம்.

பழாமரத்திற் பழுத்தஒரு மாம்ப ழம்போல்
பாசிபடர் குளத்திலொரு தாம ரைபோல்
முழாக்கண்ணில் கையுற்ற வெள்வ டுப்போல்
மொய்த்தகருங் குழற்கிடையில் மகள்மு கம்போல்
எழாஉளத்தும் மகிழ்ச்சிஎழ இருளின் நாப்பண்
எழுந்தஇள ஞாயிற்றின் ஒளியில் யாண்டும்
விழாப்பெருநாள்; காவிரிநற் திருநாள் என்று
வேந்துமுர சானையின்மேல் அறைந்தான் வீரன்.

முழா—மத்தளம். கண்—பக்க இடம். கையுற்ற வெள் வடு—கையுற்றதால் ஏற்பட்ட

வெண்ணிற வடு; ஞாயிற்றுக்கு உவமை. நாப்பண்—நடுவில். வேந்து முரசாணை—வேந்து ஆணை முரசு என மாற்றி அரசயானை மேல் இட்ட முரசு எனப் பொருள் கொள்க.

## இயல் 21

காவிரிப் பூம் பட்டினம், கடற் கரையை அடுத்த மருவூர்ப் பாக்கம் மன்னர் முதலியவர் தெருக்கள் அமைந்த பட்டினப் பாக்கம் ஆகிய இருபகுதிகளை உடையது. அவைகளின் சிறப்பை யாவர் இயம்ப முடியும்? புலவர் வேந்தனாகிய இளங்கோவடிகள் இயம்பினார். அவற்றால் நான் இங்குச் சில கூறினேன். முழுதும் தேவை என்பவர் சிலப்பதிகாரத்திற் காண்க.

என்று கூறி இந்நூலாசிரியர் நூலைத் தொடர்கின்றார்.

அராபியர், கிரேக்கர் மற்றும் அயல்நாட்டார் வைகும் தெருக்களின் வரிசை கண்ணைக் கவர்வன.

ஒரு புறம் வண்ணம் செஞ்சாந்து மலர் பலவும் கூவி விற்றுப்போவார் திரிகின்ற நகரத் தெருக்கள் சிறப்புடையன. பட்டுச் சாலியர் கடைகள் கூலக் கடைகள் நிறைந்த நீண்ட தெருக்கள், கன்னார் முதலியவர்களின் தெருக்கள் நகரின் தகுதியை விளக்குவன.

குழல், யாழ் இசைப்பார், கலைஞர் வாழ்ந்திருப்பார்கள்.

இவையனைத்தும் மருவூர்ப் பாக்கத்தில்! பட்டினப் பாக்கத்திலோ மன்னர் தெருக்கள்,

அறிஞர் தெருக்கள், மருத்துவர் தெருக்கள், கூத்தர் தெருக்கள், நாழிகைக் கணக்காயர், நாற்படை வல்லார் தெருக்கள் நாற்புறமும் சூழ்ந்திருந்தன.

என்பன இவ்வியலிற் காண்க.

காவிரிப்பூம் பட்டினத்தின் மருவூர்ப் பாக்கம்
கடற்கரையை ஒட்டியதோர் பகுதி யாகும்
மாவிரியும் மன்னர்பிறர் வாழ் தெருக்கள்,
பட்டினப்பாக் கப்பகுதி இவற்றின் மேன்மை
யாவரியம் பிடவல்லார் புலவர் வேந்தன்
இளங்கோதான் இயம்பினன் அவைகொண்
டேனான்
ஆவலினற் சிலசொல்வேன் முழுதும் வேண்டின்
அவருள்ளார் நீவிருள்ளீர் கண்டு கொள்க.

அவர்—அவர் நூல்.

அரபியரும் கிரேக்கர்களும், வாணி கம்செய்
அயல்நாட்டு மாந்தர்களும் கலந்து வைகும்
தெருவரிசை கண்கவரும்! வண்ணம் சுண்ணம்
செஞ்சாந்து மலர்பலவும் கூறி விற்போர்
திரிகின்ற தெருக்களெலாம் சிறக்கும்! ஈண்டு
திகழ்பட்டுச் சாலியர்கள் நகைக்க டைகள்
விரும்புகன் ணர்தட்டார் தச்சர் கொல்லர்
விளங்குகூ லக்கடைகள் தகுதி காட்டும்.

வாணிகம் செய்—செய் வினைத் தொகை. செய்கின்ற, செய்த, செய்யும் என முக்காலத்தும் வரும்.

ஏழிசையும் வழுவாமல் குழலும் யாழும்
இசைக்கின்ற பாணர்களும் சிறப்பின் வாழ்ந்தார்,
வாழ்வினையே இன்புறுத்தும் கலைஞர் வாழ்ந்தார்
வளமிக்க அம்மருவூர்ப் பாக்கந் தன்னில்!
மாழ்கல்இலார் பட்டினப்பாக் கத்தில் உண்டு;
மன்னர்தெரு! அறிஞர்தெரு! மருந்தர் கூத்தர்
நாழிகைக்க ணக்கர்நாற் படைவல் லாரும்
நாற்புறத்தும் குறைவின்றிச் சூழ்ந்தி ருந்தார்

சிறப்பின்—சிறப்பினோடு கலைஞர்—ஓவியம் முதலியவைகளில் வல்லுநர். நாழிகைக் கணக்கர்—நாழிகை வட்டிலைக் கொண்டு, நாழிகை தெரிந்துரைப்பவர்.

## இயல் 22

மருவூர்ப் பாக்கம் பட்டினப் பாக்கம் ஆகிய வற்றின் நடுப் பாங்கில், மரங்களே கால்களாகக் கல்லால் நெடிதாகக் கட்டிய நாளங்காடியைக் கால் நடையாக ஒருவர் சுற்றிப்பார்க்க ஓராண் டாகும்.

இன்றைக்குக் கப்பலில் ஏற்றக் குவிந்துள்ள சரக்கின் உயரம் பொதிகை மலை. இறக்குமதி யாகிக் கிடக்கும் .சரக்கின் குவியல் உயரம் யானை மலை.

வாணிகர் வரவுசெலவு எழுதும் கணக்கர்க் குப் பனந்தோப்பு ஓலை கொடுத்து மொட்டை யாகும்.

கப்பல்கள் வந்தன!—என்பது கேட்ட வாணிகர் ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டு

ஓர் கடற்கரை நோக்கி. கடல் முழக்கம், மக்கள் முழக்கமோ எனலாயிற்று.

அங்குள்ள ஈக்களின் வாயின் தேனல் நனையும் வெல்ல மூட்டைகள்!

இல்லை என்பது இல்லை என்பது நாளங்காடி.

நாளங்காடிக்குச் சென்று பொன்னுடையும் பூப்போட்ட பட்டுப் பருத்தி ஆடைகளும் நாள் தோறும் போய் வண்டியிலேற்றிச் செல்வாரின் தலைப்பாகை வரிசையானது ஒருகல் நீளம்!

மற்றும்—

அவற்றின் பின் ஓடும் மிளகுவண்டிகள் மற்றும் தென்னகத்துச் சரக்குகள் ஒவ்வொன்றில் ஓரிலக்கம் வண்டிகள் ஊரையே அடைத்துக் கொள்ளும்

என்பன இவ்வியலிற் காண்க.

நன்மருவூர்ப் பாக்கம்பட் டினப்பாக் கத்தின்
நடுவினிலே வளர்மரங்கள் கால்க ளாகக்
கன்மிகுக்கக் கட்டியதோர் நாளங் காடி
கால்நடையாய்க் கண்டுவர ஓராண் டாகும்!
இன்றேறும் சரக்குயரம் பொதிகைக் குன்றம்!
இறக்குமதிச் சரக்கெல்லாம் யானைக் குன்றம்!
பொன்வரவு செலவெழுதும் கணக்கர்க் கோலை
பொழுதெல்லாம் தந்தபனந் தோப்பே மொட்டை!

கன் மிகுக்க—கல் மிகுக்க. பனந் தோப்பு எழுவாய். மொட்டை—பெயர்ப் பயனிலை.

நாவாய்கள் வரவெண்ணி வாணி கத்தார்
நா வாய்கள் வராதவராய்த் துறைமு கத்திற்
போவாய்என் றொருவர்பின் ஒருவ ராகப்
போவாரின் கூட்டத்தை நோக்கு வோர்கள்
மூவாயில் கடல்நோக்கி முத்த மிழ்வாய்
முழங்குகடல் எழுந்ததென மொழிவா ரானார்!
ஈவாய்த்தே னால்நனைக்கும் வெல்லத் தைப்போய்!
இல்லைஎன்ப தில்லைஎன்னும் நாளங் காடி!

நாவாய்கள்—கப்பல்கள். மூவாயில் கடல்—ஆற்றுநீர், ஊற்று நீர், வேற்று நீர் என்ற மூன்றின் வரவுடைய கடல். ஈ வாய்த்தேனால் வெல்லத்தைப்போய் நனைக்கும் என மாற்றுக. இல்லை என்பது, இல்லை என்று கூறுவதாகும், அந்த நாளங்காடி; எல்லாம் உண்டு என்றபடி. கப்பல் வந்ததென்று, விரைந்து ஒருவரை ஒருவர் தள்ளிக் கொண்டு போகின்றவர்கள் பேச்சொலியைக் கடலின் எதிர் மற்றொரு கடல் முழங்கிற்று என்று கூறினார்கள் கண்டவர்கள். இரண்டாம் வரியில் வந்துள்ள நாவாய்கள் நா (நாக்கு) வாய்கள் (வாய்கள் எனப் பிரித்துப்பொருள் கொள்க

பொன்னுடை ஆயிரமும் பன்னி றத்துப்
பூவாடை ஆயிரமும் நாடோ றும்போய்த்
தன்மையினில் வண்டிகளில் ஏற்றி மீள்வார்
தலைப்பாகை வரிசைஒரு கல்லின் நீளம்!
பின்னோடும் மிளகுவண்டி அதன்பின் ஓடும்
பெருஞ்சீர கத்துவண்டி அதன்பின் ஓடும்
தென்னகத்துச் சரக்கேற்றி இலக்கம் வண்டி,
சேர்ந்தவண் டியின்கூட்டம் ஊர டைக்கும்!

பன்னிறத்துப் பூவாடை—பலநிறமுள்ள பட்டும் பருத்தியும் கொண்டுநெய்து பூவச்சுப் போட்ட ஆடைகள்.

தென்னகத்துச் சரக்கு — தென்னகத்தில் உண்டாகும் மற்றச் சரக்குகள்.

## இயல் 23

நாட்டு மகளிரும் ஆடவரும் காவிரியை வாழ்த்தி முழுகி வீடு வந்து உடைமாற்றி அணிகள் அணிந்து, அரசன் இடம் சென்று வாழ்த்துக் கூறிவிட்டு விருந்தினரோடு உண்டார்கள்—

என்பன இவ்வியலிற் காண்க.

நாட்டிலுள்ள ஆடவரும் மகளிர் தாமும்
நலங்கொழிக்கும் காவிரியை வாழ்த்தித் தம்தோள்
நீட்டித்,தாய் எனத்தழுவி அன்பால் மூழ்கி
நிலைபெயரும் மலைகள்போல் நிலாக்க ளேபோல்
வீட்டிலுற்றே, உடைமாற்றி அணிகள் பூண்டு
வேந்தனைப்போய் மனமார வாழ்த்திப் பின்னர்
கேட்டாலும் நாவூறும் பண்ணி யங்கள்
கிடைப்பரிய அப்பங்கள் வெண்ணெய்ப் பிட்டே

நிலை பெயரும் மலை என்றது ஆடவரை; நிலாக்கள் என்றது மகளிரை. பிட்டே-ஏ அசை, இது குளகம்,

தேங்குழல்நற் பொரிவிளங்காய் பலாமா வாழை
தேன்பால்நெய், நறும்பாகு, முதிர்ந்தி, லாத
தீங்கிலவாம் வழுக்கைஇள நீர்ப ருப்புச்

சேர்க்கையினுல் பொங்கியதோர் ஓவப் பொங்கல்
யாங்கிருந்தும் கொணர்ந்திட்ட காய்க றிக்கே
இங்கிருக்கும் தமிழரன்றிப் பிறர்கா ணுத
பாங்கிலுறு பச்சடிகள் குழம்பு கூட்டுப்
பல் வகையின் வற்றல்கள் வறுவ லோடும்

தேங்குழல்—முறுக்கின் ஒரு வகை; நறும் பாகு—பல்வகையான பாயசங்கள். முதிர்ந்திலாத தீங்கிலவாம் வழுக்கை இளநீர் என்றது, தேரை மோத்தல் முதலிய நோய் இல்லாததும் முதிராததும் ஆகிய இளநீரை.

ஓவப் பொங்கல்—இதை வட வர் சித்ரான்னம் என்பர். ஓவம்—ஓவியம்.

யாங்கிருந்தும்—சிற்றூர் யாங்கு மிருந்து.
வறுவலோடும்—முடியவில்லை குளகம்.

வெண்பட்டுக் குருத்திலைகள் மிகவி ரித்தே
விருந்தினரைக் கையேந்தி அழைத்த ழைத்துக்
கண்பட்டால் ஒளிதெறிக்கும் கைவ ளைகள்
கவிபாடும் எழில்மடவார் இடஉ வந்து
புண்பட்டுச் சாவஅஞ்சும் ஆரி யர்கள்
புகார்என்னும் பூம்புகார் அரசை வாழ்த்தி
உண்கவே எனஇடுவார் இட்டிட் டேங்க
உண்டார்கள் ஒவ்வொன்றின் சுவையு ணர்ந்தே.

வெண்பட்டுக் குருத்திலைகள்—வெண்பட்டுப் போன்ற குருத்திலைகள்; உவமைத் தொகை.

புகார்—புகமாட்டார். உண்கவே என இடுவார் இட்டு இட்டு ஏங்க—உணவு படைப்

போர் உண்ணுங்கள் உண்ணுங்கள் என்று இட்டு, இட்டு, வேண்டாம் வேண்டாம் என்று உண்பவர்கள் சொல்லுதலால் ஏக்கமடைய.

இடும் ஒவ்வொன்றின் சுவையை உணர்ந்த படியே உண்டார்கள் என்பதற்கு, ஒவ்வொன்றின் சுவையுணர்ந்தே எனப்பட்டது.

## இயல் 24

நாற்படையும் தலைவருடன் நகரை வலம் வருகின்றன ஊரார் கண்டு மகிழும்படி !

சோலைதோறும் மகளிர் பொன்னூசல் ஆடுகின்றார். ஓர்பால் ஆடவர் சிலர் பெரும் பந்து அடிக்கின்றார்கள்.

சிலர்—கோழி ஆடு கொண்டு போரிடச் செல்கின்றார்கள் ; அவர்களில் ஒருவன் போரில் எனக்கு வெற்றிகிடைத்துவிட்டது என்கின்றான். உயிர்போகும் நேரத்தில் மே மே என்றுகத்தும் ஆட்டையுடைய மற்றவன் நான் தோற்றேன் என்கின்றான் ; இவ்விருவரையும் நோக்கி ஓர் வீரன் உங்களின் வெற்றி தோல்வி முடிந்திருக்கலாம் ஆனால் அந்த ஆடுகளின் வெற்றி தோல்வி இன்னும் முடியவில்லை என்று கூறுகின்றான்.

இவ்வாறு ஓரிமைப்போதும் ஒழிவின்றி வெளியில் ஆடியிருந்தவர்களில் காளைகள் சிலர் வீடுவர அவர் காதலிமார் எமைமறந்தது என்ன என்று சீறுகின்றார்கள் ! வேறு சிலரோ மாதவியைப்போல், தம் கணவர் தோளில் சாய்ந்து தம்மையே மறந்தவரானார். தன் அன்பனை

கோவலனைப் பிரிந்திருந்த கற்புடைய கண்ணகி துன்புற்றுக் கிடந்தாள் என்பது இவ்வியல் விரித்துரைக்கப் படும்.

இறவாத புகழுடைய படைமுதல்வர்
யானைமேல் குதிரைமேல் தேர்மேல் ஏறி
முறையாகப் படைதொடர நகரைச் சுற்ற
முன்விட்டுப் பின்னேடு காலாள் கூட்டம்
உறைகழற்றித் தூக்கியவாள் மின்னும் வண்ணம்
ஊர்வியக்கச் சென்ருர்கள்! சோலை தோறும்
பிறைநுதலார் பொன்னூசல் ஆட லுற்ருர்
பெரும்பந்து காளையரும் அடித்தார் ஓர்பால்

படை முதல்வர்—படைத்தலைவர், பிறைநுதலார்—மகளிர். காளையர்—இளைய ஆடவர்

சாகுமட்டும் சண்டையிடும் சோவற் கோழி
தலையுடையும் வரைமோதும் ஆடு—கொண்டு
போகின்ருர் சண்டைக்கே! போர்முடித்துப்
போந்ததெனக் கேவெற்றி என்ருன் ஓர்ஆள்;
ஏகுமுயிர் ஏங்காமல் மேமே என்றே
இயம்புகின்ற ஆடுடையான் தோற்றேன் என்ருன்
ஏ கெடுவீர், தோல்விவெற்றி உமக்கே கண்டீர்
இவை இன்னும் காண்கிலஎன் ருன்ஓர் வீரன்.

கோழி ஆடு இவைகளைக்கொண்டு போகின்ருர் போருக்கே என்பது வரை ஒரு தொடர்.

ஒருவன் ஆட்டுப் போரை முடித்துக் கொண்டு வருகையில் எனக்கு வெற்றி கிடைத்து விட்டது என்ருன். உயிர் தத்தளிக்கும் நிலை

யிலும், மே மே என்று கூவும் மற்ருேர் ஆட்டுக்கு உடையவன் நான் தோற்றேன் என்ருன். மூன்ருவதாளான ஒரு வீரன் வெற்றி தோல்வி முடிந்தது என்பது உங்கட்குத்தான். ஆனல் சண்டையிட்ட இரண்டு ஆடுகட்கும் இன்னும் வெற்றி தோல்வியின் கணக்கு முடியவில்லை, என்ருன். அவன் கருத்து என்னவெனில் உயிருக்குத் தத்தளிக்கும் நிலையிலும் அந்தக் கடா மே மே என்று—என்னை மேலும் விடு—என்பதால் இன்னும் அது தோற்கவில்லை. சுருக்கில் ஆட்டுக்குடையவன்தான் சண்டைய நிறுத்தினன்என்பது!

ஏ கெடுவிர்—ஏ கெடத்தக்கவர்களே!
காண்கில—அவை காணவில்லை,

இமைநேரம் ஒழிவின்றி வெளியில் ஆடி
இருந்தவரிற் சிலர், வீடு வந்த போதில்
எமைமறந்த தேன்என்று மனைமார் சில்லோர்
எரிவுற்ருர்! காதலரின் இருதோள் பெற்றே
தமைமறந்தார் மாதவியைப் போலே சில்லோர்
தன்அன்பன் கோவலனைப் பிரிந்திருந்த
அமைவுள்ள கற்புறுகண்ணகி துன்பத்தின்
அடிவீழ்ந்து கிடந்திட்டாள் விழாநாள் உள்ளும்!

வெளியில் ஆடுதல்—வெளியில் விழா இன்பத்தை நுகர்தல். எரிவுற்ருர்—சினந்தார் துன்பத்தின் அடி—துன்பக் கேணியின் அடிப்புறத்தில்; கலப்பில்லாத துன்பத்தில் என்றபடி. விழாநாள் உள்ளும்—விழா நாளிலும். உயர்வு சிறப்பு உம்மை.

## இயல் 25

இந்நாள் முழுநிலவு நாள் என்று நாட்டினர் அனைவரும் கடலாடச் செல்லுகின்றார். அக் கடலாடு காட்சி பார்க்கும் ஆசையால் மாதவியும் கோவலனும் செல்லுகின்றார்கள். கடற்கரை சார்ந்த மணற்பரப்பில் ஒரு புன்னை நிழலில் திரையிட்டு அதனிடையில் கட்டில் இட்டு அமர் கின்றார்கள், மாதவியுடன் வந்த தோழியிட மிருந்த யாழை வாங்கிச் சரியாக்கிக் கோவல னிடம் நீட்ட அவன் வாங்கிப் பாடலொன்று பாடுகின்றான்.

இந்நாளே நிறைநிலா என்று நாட்டார்
எல்லாரும் கடலாடச் செல்ல லுற்றார்!
அந்நாளின் கடலாடும் காட்சி காண
அழகுடைய மாதவியும் அவளை விட்டே
எந்நாளும் பிரியாத செம்மல் தானும்
எழிலான ஊர்தியினில் ஏறிக் காலை
முன்னான போதினிலே கடற்க ரைபோய்
முழுதுமணற் பரப்பினிலே புன்னை நீழல்

செம்மல் — கோவலன் : ஊர்தி - வண்டி. காலை முன்னான போது—முன் காலை நேரம். புன்னை நீழல் என்ற தொடர் அடுத்த அடியைத் தொடர்கின்றது; குளகம்.

அடிவளைத்த திரைக்கிடையில் இட்ட கட்டில்
அமர்ந்தார்கள் அங்கதன்பின் தோழி கையில்
நெடிதிருந்த யாழ்அதனை மங்கை வாங்கி
நேர்செய்தே இசைஎழுப்பிச் செவியின் ஓர்ந்தே

முடிவாக்கிக் கோவலன்பால் நீட்ட, அன்னோன்,
முன்னங்கை ஏந்தியே தன்ன கத்தின்
வடிவாகப் பாடுவது தொடக்கம் செய்தான்
மாதவியும் வரும்பாட்டில் செவிவயச் சாய்த்தாள்.

அடி வளைத்த என்பதை முதற்பாட்டின் கடைசியிலுள்ள நீழல் என்பதன்பின் இணைக்க நீழல் அடிவளைத்த திரைக்கிடையில்—நீழலின் அடியில் வளைத்துக் கட்டிய திரையின் நடு விடத்தில்.

மங்கை—மாதவி.

நேர் செய்தல், இசையெழுப்பல், செவியின் ஓர்தல் இவையெல்லாம் யாழை இசைப்பதற்கு முன் செய்ய வேண்டியவை. ஓர்தல்—ஆராய்தல் தன் அகத்தின் வடிவு ஆக—தன் நெஞ்சிலுள்ள கருத்தை வெளியில் வடித்தது என்னும்படி.

ஆரியரை அறவென்று வடக்கு நாட்டை
அடிப்படுத்திக் கங்கையினை அகப்ப டுத்திச்
சீரியசெங் கோற்சோழன் புணர்ந்திட் டாலும்
திருவாரும் காவிரிநீ வருந்தாய்! வாழி!
ஆரியத்துக் கங்கைதனைப் புணர்ந்திட் டாலும்
அகம்நோவா திருந்ததுன் றன் கற்பே என்று
தேரினேன் காவிரியே வாழி! - என்றே
தேனென்று செந்தமிழைப் பாட லுற்றான்.

அடிப் படுத்தல்—அடிமை நாடாக்குதல். அகப்படுத்தல்—அகப்படும்படி செய்தல். மற்றொரு பொருள்: உள்ளம் ஒப்பச் செய்துகொள்ளல். புணர்தல்—மூழ்கல். மற்றொரு பொருள்

புணர்ச்சி செய்தல். இப்பாட்டினுல் மாதவி வருந்தினுள் என்ருல் காரணம்.

கங்கை என்னும் பெண்ணை அவள் பரத்தை என்றும் எண்ணுமல் புணர்ந்தாலும், உரியவளாகிய காவிரி என்னும் பெண்ணே நீ வருந்த மாட்டாய்; அவ்வாறு நீ வருந்தாதது கற்பு.

இவ்வாறு பொருள்படவே, அதுகேட்ட அவனும் மனம் வேறு படுவதை அடுத்த பாட்டிற் காண்க.

## இயல் 26

இவ்வாறு பாடியது கேட்டாள்; அன்னேன்
எண்ணந்தான் வேருெருத்தி மேலதென்றே
ஒவ்வாது மனம்கொதித்தும் உவந்தாள் போல
ஒளிவிழியாள் மாதவிதான் யாழை வாங்கிக்
"கவ்வியதேன் மலர்மழையே பொழியும் சோலைக்
காவிரியே பூவாடை அசையச் சென்ருய்
செவ்விதின்வா ழியநீதான் செல்வதென்ன ?
செம்மலுக்கே உளம்பதைத்தாய் வாழி!" என்ருள்.

அப்பாடலில் தன்னைக் கைவிட்டு வேருெருத்தியை நாடுகின்ருன் கோவலன் என்ற கருத்து உண்டு என வருந்திய மாதவி, யாழைப் பெற்றுப் பாடிய பாட்டில், வேருெருவனை அவள் கருதினுள் என்ற குறிப்பிருப்பதாக எண்ணிய கோவலன் அவளிடம் பிணைந்திருந்த கையைப் பிடுங்கிக்கொண்டு எழுந்துபோய் விடுகின்ருன். அவளும் அவ்வாறு தனியே சென்று விடுகின்ருள்.

கண்ணகி வருந்தும்படி மாதவியை அடைந்த கோவலன் அறத்தை மறந்தவன். அறத்தை மறந்தவன் அறிவை இழந்துவிடுவது வியப் பன்று.

கோவலன் சொல்லின் கருத்தை அவள் அறியவில்லை; அவள் அறியும்படி அவன் சொல்லவில்லை! ஆனதால் அவனும் அவளும் விளைத்த இத்தீமை தமிழனுக்கே ஆயிற்று. இவர்கள் நன்றே வாழ்வார்கள் என்று எவன் தான் சொல்வான்? இனிய தமிழும் தமிழ்ப் புலவரும் நன்றே வாழ்க என்பன இவ்வியலிற் காண்க.

இவ்வியலின் முதற்பாட்டில், அவள் மனம் கொதித்து அதை வெளிக்காட்டாமல் மகிழ்ந் தாள் என்று கோவலன் நினைக்கும்படி செய்து அவனிடமிருந்த யாழை வாங்கினாள் என்பதற்கு உவந்தாள்போல யாழை வாங்கி எனப்பட்டது. தேன்மலர் மழை எனச் சேர்க்க. பூவாடை— பூக்கள் சிந்தப் பெற்றிருப்பதால் ஆற்றின் மேற்புறம் பூவாடை எனப்பட்டது. அவன் நல்லவன் அல்லன் என்று காவிரிப்பெண் அவ்வாறு போகின்றாள், என்று மாதவி கூறுவ தன் வாயிலாக கோவலன் நடத்தைக்குத்தான் வருந்துவதாகக் காட்டினாள் என்பது இப் பாட்டில் அறியத்தக்கது. செவ்விதின்—செவ் வையாக.

நான்ஒன்று பாடினேன் அவளும் அஃதே
நவிலாமல் வேறொன்று நவில லானாள்.
தான்என்னை மறுத்தஒரு குறிப்புக் காட்டித்
தனிக்கின்றாள் என்றுகோ வலன்நி னைந்து

மீனவிழி மேல்இணைத்த கைவி லக்கி
விரைந்துசென்றான் ஏவலர்கள் சூழ்ந்து செல்ல!
ஆனதினால் மாதவியும் வண்டி ஏறி
அகன்றாள்தான் பெற்றசெல்வம் அகன்றா ளாகி

அஃதே நவிலாமல்—உடம்பட்டுப் பாடா மல் என்றபடி. தனிக்கின்றாள்—தனித்த வளாகின்றாள். மீனவிழி—மாதவி. பெற்ற செல்வம் என்றது கோவலனை.

அவள்வருந்த இவண்அடைந்தான், அறம றந்தான்!
அறமறந்தான் அறிவிழத்தல் வியப்பே அன்று!
நுவன்றமொழிக் கருத்தறியாள் அவள்! இ
வன்தான்
நுவலுவதை செவ்வையுற நுவன்றா னில்லை
அவனுந்தான் அவளுந்தான் இழைத்த தீமை
அழகுதமிழ் அன்னைக்கே ஆயிற் றென்றால்
எவன்சொல்வான் இவர்நன்றே வாழ்வார் என்றே?
இன்தமிழ்செந் தமிழ்ப்புலவர் வாழ்க நன்றே!

அறவுள்ளமே அறிவுடைமை என்பதற்கு அறமறந்தான் அறிவிழத்தல் வியப்பே அன்று எனப்பட்டது.

செவ்வை—செம்மை.

தமிழால் தம் கருத்தைச் செவ்வையாகச் சொல்லமுடியாத கோவலனும். சொல்லைக் கொண்டு உள்ளக்கருத்தை உணராத மாதவியும் இனி வாழ்வது எப்படி என்பதற்கு 'எவன் சொல்வான்......என்றே' எனப்பட்டது.

அழகு தமிழ்—மண்ணிடைச் சில இலக்கண வரம்பிலா மொழிபோல் எண்ணிடைப்படக் கிடந்த தல்லாத தமிழ்.

## இயல் 27

இளவேனில் வந்தது. தன் வீட்டு மேல்மாடியில் ஏறிய மாதவி நிலா முற்றத்தை யடைந்து கையில் எடுத்த யாழும் பண் மயங்கப், பாடிய பாட்டும் இசை மயங்கக் கண்டு தோழியே என் எண்ணம் துளியும் என்னிடமில்லை, துன்பம் பொறுக்க முடியவில்லை. ஆதலால் ஒரு திருமுகம் எழுதுகின்றேன் அதை அவனிடம் கொடு. என் நிலையை விளக்கு என்று கூறி

ஒரு தாழை ஏட்டில் பித்திகை அரும்பே எழுத்தாணியாகச் செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து எழுதப்போவதை வாய்விட்டுச் சொல்லிக்கொண்டே எழுதி முடித்தாள்; அது வருமாறு:

இளவேனில் முறையறியாத ஓர் இள மன்னன், இளமதியும் காலமறியாச் சிறு பையன்; தனிமையால் எளிமை எய்தியுள்ள என்னை அவர்கள் வருத்துவது வழக்கந்தானே! இதை நீவீர் அறிந்து அருள் புரிவீராக.

அதனைத் தோழி மகிழ்ச்சியோடு வாங்கிக் கொண்டு சென்றாள்.

மாதவியோ தனிமை பொறுக்காமல் துன்புற்றுப் பஞ்சணையில் வீழ்ந்தாள்

என்பன இவ்வியல்.

இளவேனில் வந்ததென்று குயிலும் கூவ
ஏகிய ஓர் மாதவி, தன் மேன்மா டத்தின்
ஒளிநிலா முற்றத்தில் யாழெ டுத்தாள் !
ஒருபண்ணுற் குரலெடுத்தாள் ; பிறிதில் வீழ்ந்தாள்
கிளிப்பெண்ணுள் மற்ருென்றும் தொட்டாள்
கெட்டாள்
"கேளாயோ தோழியே என்றன் எண்ணம்
துளியில்லை என்னிடத்தில் பொறுக்கொ ணுத
துன்பத்திற் புரளுகின்றேன் ஆத லாலே

ஏகிய மாதவி — கோவலனோடு மாறு கொண்டு சென்ற மாதவி, ஒருபண்ணின் இசையுடன் வாய்ப்பாட்டுத் துவக்கினுள் ; இலக்கணந் தவறி மற்ருெரு பண்ணிற் கலந்தது. மற்ருே ரிசையை யாழிற் பதித்தாள். அதுவும் மயங் கிற்று என்பது 'யாழெடுத்தாள்.................. கெட்டாள்' என்பவற்றின் கருத்தாகும்.

பொறுக் கொணு—பொறுக்க ஒண்ணுத. அக ரம் தொகுத்தல்,

ஆதலாலே அடுத்த பாட்டைத் தொடர்கின்றது குளகம்.

அவன்காணத் திருமுகம் ஒன் றெழுது கின்றேன்
அளிக்கின்றேன் உன்னிடத்தில்! அவன்பால்
சேர்த்தே
நவில் என்றிலை ; கையோடு கொணர்க என்று
நற்ருழை வெள்ளேட்டில் எழுது தற்கே
கவினுர்பித் திகையரும்பே ஆணி யாகக்
கடிதேசெம் பஞ்சியிலே தோய்த்தெ டுத்துத்

துவரிதழில் எழிலாட வருங்க ருத்தைச்
சொல்லிக்கொண் டேமங்கை எழுது கின்ருள் :

கவின் ஆர் பித்திகை—அழகு நிறைந்த சிறு செண்பகம்.

ஆணி—எழுத்தாணி. கடிது—விரைவில். துவரிதழ்—செவ்வுதடு. மங்கை—மாதவி.

எழுதியது அடுத்த செய்யுளில்.

இளவேனில் முறையறியா இளைய மன்னன் ;
இளமதியும் காலமறி யாத பையல்
எளியேனை அவர் வருத்தல் புதிய தாமோ
இதை நீவிர் அறிந்தருள்க — இதனைத் தோழி
களியோடு கையேற்று வெளியிற் சென்ருள்
கையிரண்டாற் கண்பொத்தி மெய்து டிக்க
அளியாரோ அடைந்தவரை ஆட வர்கள்
அன்பிலேயோ எனப்பஞ்ச ணைமேல் வீழ்ந்தாள்

தலைவனைப் பிரிந்த தலைவியை இளவேனிலும், நிலவும் துன்புறுத்தும். ஆதலின், எளியேனை அவர் வருத்தல் புதிய தாமோ என்ருள்.

அளியாரோ அடைந்தவரை ஆடவர்கள்—பொதுவாக ஆடவரின் இயல்பு அடைந்த பெண்களை ஆதரிப்பதில்லையோ என்றபடி.

## இயல் 28

மாலைப் போதில் தேவந்தி என்னும் ஒரு பார்ப்பனத்தி கண்ணகியை நோக்கி உன் வருத்தமெலாம் தீர நீ தெய்வம் தொழுது, திங்கட்

குண்டம், கதிர்க்குண்டம் என்னும் பொய்கை களில் முழுக வேண்டும் என்று கூறிக் கண்ணகிக் குத் துன்பத்தின் மேல் மற்றொரு துன்பத்தைச் சேர்த்தாள். அதற்குக் கண்ணகி தேவந்தியை நோக்கி, தெய்வம் நலம் செய்யும் என்கின்றாய் தெய்வம் தொழவேண்டும் என்றும் சொல்வாய்; நீ சொல்லும் தெய்வம் எங்கேயோ திரை மறை வில் இருப்பதென எண்ணுகின்றாய்; தமிழர் ஒழுகலாற்றை நீ சிறிதும் அறிகிலை. ஆரியரின் பொய்யான வாழ்க்கைமுறை நன்று என்று புளுகுகின்றவரின் புளுகையல்லாமல் நீ எதை யும் அறியமாட்டாய்!

தமிழ் மகளிரின் ஒழுகலாற்றில் நீ தெய்வத் தைக் காண்பதுண்டு போலும்! தலைநாள் தொடங்கி இன்று வரைக்கும் மகளிர்க்கெல்லாம் எல்லாம் ஆகி வந்தவர்கள் வருகின்றவர்கள் வர இருக்கின்றவர் தந்தை முதலியவர்கள் அல்லர்; கணவரே ஆவார்.

நான் தளர்ந்துள்ள நிலை கண்டு உனது தீயொழுக்கத்தை இப்படி என் உள்ளத்தில் நுழைக்கின்றாயா? என்று கண்ணகி கூறத், தோழி சென்றாள்.

—என்பது இவ்வியல்,

செங்கதிர்போய் மறைந்திட்ட மாலைப் போதில்
தேவந்தி என்னுமொரு பார்ப்ப னத்தி
மங்கை எழிற் கண்ணகியே இந்நாள் உன்றன்
மனக்கவலை யதுதீரத் திங்கட் குண்டம்
பொங்குகதிர்க் குண்டமெனும் இருபொய் கைக்கும்

போய்த்தெய்வம் தொழுதுநீ மூழ்க வேண்டும்
இங்கிதனைச் செய்க என்றாள் ; கண்ண கிக்கே
இன்னலின்மேல் மற்றுமோர் இன்னல் சேர்த்தாள்

இன்னல் — துன்பம்

தெய்வமெனல் நலஞ்செய்யும் என்கின் றாய்நீ !
தெய்வத்தைத் தொழவேண்டும் என்கின் றாய்நீ !
தெய்வமென நீசொல்லும் பொருள்எங் கேயோ
திரைமறைவில் இருப்பதெனச் சொல்லு கின்றாய்
மெய்வைத்த தமிழர்களின் ஒழுக லாற்றை
மிகச்சிறிதும் அறிகிலாய் ஆரி யர்தம்
பொய்வைத்த வாழ்க்கையினை நன்றே என்று
புளுகு வார் புளுகல்லால் ஏதும் காணாய் !

கணவனே மனைவிக்கு எல்லாமாகினோன் என்பதால், எல்லாமாகியது தெய்வம் என்று பார்ப்பனத்தி எண்ணிய தனைத்தும் கண்ணகியால் மறுக்கப் படுகின்றது. இச் செய்யுளில். அன்றியும் தெய்வம் நலம் செயும் என்பது யாண்டுமில்லை. அது மடமையின் எழுந்த எண்ணமே யாதல் முயற்சி திருவினையாக்கும் என்பனாலும் ஒழுக்கம் விழுப்பம் தரலால் என்பவற்றாலும் பிறவற்றாலும் நன்கு விளங்கும்.

புளுகு — புள் உகு என்று பிரித்துப் பொய்க்குப் பெயராதலை உணர்க. புள்ளி — உண்மை. புள்ளி கடைக்குறையே புள் என்பது, உகு—உகுத்தல் முதனிலை, புள்ளி உகுத்தல் ஆகு பெயராய், பொய்ம்மையை உணர்த்தியது, மெய்வைத்த செந்தமிழர் ஒழுகலாறு என்பதை,

கற்புடைப் பெண்டிர் கணவனே யன்றி எவரையும் எதையும் தொழாமையும்—தெய்வம் தொழாஅள் என்பதும் இங்கு நினைவு கொள்ளத் தக்கது.

செந்தமிழச் செல்வியரின் ஒழுக லாற்றில்
தெய்வத்தை நீகண்ட துண்டு போலும்!
முந்துநாள் முதல்இந்த நாள்வ ரைக்கும்
மொய்குழலார் தமக்கெல்லாம் எல்லா மாகி
வந்தோர்கள் வருகின்றோர் வருவோர் யாவர்?
வாழ் தந்தை தாய ரல்லர் **கணவர்** ஆவார்!
நொந்துள்ள நிலைகண்டுன் தீயொ ழுக்கம்
நுழைப்பதுண்டோ என்னுளத்தில்
இவ்வா றென்றாள்

தமிழப் பெண்களின் ஒழுகலாற்றில் தெய்வத்தைக் காணமுடியாதென்ற உண்மையை முதலடி விளக்கிற்று. கற்புடைய பெண்டிர்க்கெல்லாம் முன்னும், இன்றும், என்றும் எல்லாம் ஆகின்றவர் கணவரே அன்றித் தாயாருமல்லர் தந்தையருமல்லர் என்பது மேலும் விளக்கினாள். நான் தனிமையால் தளர்ச்சியுற்றிருக்க, இந்த நிலையில் என் உள்ளத்தில் உன் தீயொழுக்கமாகிய தெய்வந் தொழுதலை நுழைக்கின்றாய் போலும் என்று மேலும் கண்ணகி வினவிய அளவில் தோழியாகிய பார்ப்பனத்தி, புறம் சென்றாள் என்க.

## இயல் 29

கடிந்துரைத்தவுடன் பார்ப்பனத்தி இல்லம் விட்டுப் போனதைக் கண்ணகி கண்டாள். அவள்

போனபின் தன் மணவாளனுகிய கோவலன் வரக்கண்டாள். எதிரில் ஓடி, வருக என் அத்தான் என்றழைத்தாள். வந்த கோவலன் நான் அந்த மாதவியின் வலையில் வீழ்ந்தேன்'. அரும் பொருள் அனைத்தையும் தோற்றேன் என்ருன். மாதவியின் மகிழ்ச்சியைப் பெறப் பணமில்லாததால் அல்லலுற்ருன் போலும் என்று எண்ணிய கண்ணகி, நகைத்து இரு சிலம்புகள் காட்டி இவை முழுதும் கொள்க என்று நீட்ட, கோவலனே, பெருந்தன்மையுடைய கண்ணகியே இச்சிலம்பின் விற்பனைப் பொருளை முதலாகக்கொண்டு, தமிழ் வளர்த்த மதுரை சென்று வாணிகத்தால் மிகுந்த பொருளைத் தேடலாம்; நீயும் என்னுடன் விரைவாக வா என்றழைத்தான். மிக மகிழ்ச்சியுடன் சென்ருள். இருவரும் காவிரியின் வடகரையோடு மேற்றிசை ஒரு காதம் சென்ருர்கள்.

—என்பன இவ்வியல்·

கோணல்மனப் பார்ப்பனத்தி போதல் கண்டாள்
கோவலனும் தலைவாயில் புகுதல் கண்டாள்
வாணுதலாள் கண்ணகிதான்! எதிரில் ஓடி
" வருகவே என்அத்தான் " என்றழைத்தாள்!
ஆணழகன் " மாதவியின் வலையில் வீழ்ந்தேன்
அரியபொருள் அத்தனையும் தோற்றேன் "
என்ருன்;
" ஆணிமுத்து நகைவாங்கப் பணமில் லாமல்
அல்லலுற்ருன் போலும் " என நினைத்தாள் மங்கை

வாள் நுதலாள் — ஒளி பொருந்திய நெற்றியையுடையவள், அத்தான் — அகத்தான்; வீட்டுக்காரன் என்றும் இந்நாளில் வழங்குகின்

றது; எப்போதும் நெஞ்சத்தில் இருப்பவள் எனலும் பொருந்தும்.

ஆணிமுத்து நகைவாங்க — மாதவியின் கெட்டிமுத்துப் போன்ற நகைப் பை, மகிழ்ச்சியைப் பெற ஆணிமுத்து என்பதே உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகையாக மாதவியைக் குறித்ததாகவும் கொள்ளலாம்.

—மங்கை — கண்ணகி.

நகைகாட்டி இருசிலம்பாம் நகையும் காட்டி
நன்றுகொள்க எனநீட்டக் கோவ லன்தான்
“ தகையுடையாய் இச்சிலம்பை முதலாக்
கொண்டே
தமிழ்வளர்த்த மதுரைபோய் வாணி கத்தால்
மிகுபொருளைத் தேடலாம் வருக நீயும்
விரைவாக” என்றுரைத்தான் “ நன்றே என்று
தொகையான மகிழ்ச்சியினை நெஞ்சந் தன்னிற்
சுமந்தபடி அன்பனோடு செல்ல லானாள்.

நகைகாட்டி—சிரித்து. இருசிலம் பாம் நகை—இரண்டு காற்சிலம்புகளாகிய நகை; இழை. நன்று கொள்க — இரண்டையும், முழுதையும் கொள்க என்றபடி, தகையுடையாய் — பெருந் தன்மையுடையவளே,

தொகையான — மிகுதியான

கதிர்எழுந்து விடியலினைச் செய்யும் போதில்
காதலிள மங்கையர்கள் கண்வி ழித்தே
எதிருற்ற கணவர்தமைத் தொழுத வண்ணம்

எழும்போதில் ஊர்க்கோழி கூவும் போதில்
முதிராத சிற்றடிகள் விடாது பற்ற
முன்நடந்தான் கோவலனே! இருவர் தாமும்
அதிர்காவி ரிக்குவட கரையி னூடே
ஆனமேற் றிசையிலொரு காதம் சேர்ந்தார்

எழுந்து என்றது விடியலிற்கான முயற்சியை. விடியல்—முற்காலே. எதிர் உற்ற கணவர் — மங்கைமார் எழுந்தவுடன் தம் கண்ணெதிர் படுக்கையில் இருந்த கணவர். முதிராத சிற்றடிகள் - இளமையும் சிறியனவுமாகிய கால்கள் இது கண்ணகி பற்றியது. அதிர் காவிரிக்கு— வெள்ளத்தின் அதிர்ச்சியுடைய காவிரிக்கு. ஆன - கடக்கக் கழிந்த, ஒரு காதம் -ஒரு காதத் தொலேவிலுள்ள இடம் ஆகுபெயர்.

## இயல் 30

நடந்தறியாள் இத்தனே தொலேவுநடந்தாள்; நலிந்தறியாள் இவ்வாறு நலிந்தாள். அத்தான் மதுரை அருகிலுள்ளதோ என்று கேட்டாள்— அவள் அறியாமைக்கு நகைத்து ஆம் என்று கூறிப் பின்னும் நடக்கையில் கவுந்தியம்மை என்னும் அருக சமையத்துத் துறவியைக் கண்டு மதுரை போகவேண்டும் வழி ஏது என, அந்த அம்மையார் - நானும், பெரியோர்பால் அறங் கேட்கவும் அருகனே ஏத்தவும் மதுரை வருகின்றேன் என்றூராக, மூவரும் மேற்றிசையாகப் பூங் காவையும் வயல் வளங்களேயும் கண்டு மகிழ்ச்சியால் நலிவை மறந்து, நாளேக்கொரு காதமாக நடந்து சென்றுகொண்டிருந்தார்கள். அவ்வாறு

செல்லுகையில் தமிழ்ச் சான்ரேர் பலரைக் கண்டு செம்மை நெறி பற்றிக் கேட்டும் அருகனை ஏத்தியும் ஓடத்தால் காவிரி தாண்டி தென் கரை யில் ஓர் பூம்பொழிலில் தங்கி, அங்குத் தீயரால் நேர்ந்த தீமைகளினின்று நீங்கி உறையூர் ஏகி னர். பொழுதுபட்டது. வைகறையில் தென் றிசை நோக்கிச் சென்ரூர்கள் என்பது இவ்வி யல்.

நடந்ததில்லை இத்தொலைவு நடந்தாள் மேனி
நலிந்ததில்லை இவ்வாறு நலிந்தாள் ; "அத்தான்
அடைந்ததில்லை மாமதுரை அணித்தோ" என்ருள்.
"ஆம்" என்ருன் கோவலனும் நகைபு ரிந்தே!
கடந்தார்கள் சிறுதொலைவு கண்டார் அங்கே
கவுந்தியெனும் துறவுடையாள் உறையும் பள்ளி
அடிகளே மாமதுரை செல்ல வேண்டும்
அருளுகவே நன்னெறிதான் எனப்ப ணிந்தார்.

இத்தொலைவு - இவ்வளவு தூரம். மேனி - உடல். அணித்தோ – அருகில் உள்ளதோ, உறை யும் பள்ளி - வாழும் குடில். நன்னெறி – நல்வழி.

அருகனுறு சமையத்துக் கவுந்தி அம்மை
அவர்கட்கு வாழ்த்துரைத்து, யானும் அங்கே
பெரியார்பால் அறிவுரைகள் கேட்க வேண்டும்
பிழைதீர்ந்த அறிவனைநான் ஏத்த வேண்டும்
வருகின்றேன் என்றுசொல்ல மகிழ்ச்சி கொண்டார்
வழியோடு மூவருமே மேற்கண் நோக்கி
மருமலர்ப்பூங் காவயல்கள் வளங்கள் கண்டு
மகிழ்வில்நலி மறந்துசென்ருர் நாளோர் காதம்.

அருகனுறு சமையம் - அருகன் கடவுளாய் உற்ற சமையம். அறிவன் - அருகன். மேற்கண் நோக்கி - மேற்றிசை நோக்கி, மருமலர் - மண முள்ள மலர். மகிழ்வில் நலி மறந்து சென்ருர் - மகிழ்ச்சியில் உடல் நலிவை மறந்து நடந்தார். நாளோர் காதம் - நாள் ஒன்றுக்கு ஒரு காதமாக

செல்லுகையில் தமிழ்ச்சான்ரேர் தம்மைக்
கண்டார்
செம்மைநெறி இன்னதெனக் கேட்டு வந்தார்;
அல்லலிலா அருகனையும் ஏத்தி நின்ருர்
அங்கிருந்தே ஓடத்தால் ஆறு தாண்டி
நல்லதொரு தென்கரையிற் பூம்பொ ழிற்கண்
நலிதீர்ந்தார்! தீயோரால் நண்ண லுற்ற
பொல்லாங்கெல் லாம்தவிர்ந்தார் உறையூர்
சேர்ந்தார்
பொழுதிருந்து வைகறையில் தென்பால் சென்ருர்.

ஆறு—காவிரி. பூம்பொழில்—சோலை. நலி—துன்பம், பொழுதிருந்து—அந்தப் பொழுது வரைக்கும் அங்கிருந்துவிட்டு,

## இயல் 31

தென்திசை நோக்கிச்சென்ற கோவலன், கண்ணகி, கவுந்தியம்மை மூவரும் வளவயல்கள் பொய்கைகள் உள்ளதான மலர்ப்பூங்காவில் தங்கினர். அப்போது அங்கே வந்த ஒரு பார்ப்பானை நோக்கி, உன் ஊர் எது? ஏன் வந்தாய்? என்று கோவலன் கேட்க, அதற்கு அவன்—குடமலை நாட்டின் மாங்காடு என்ற

ஊர் என்னூர்; திருவரங்கத்தையும் வேங்கடத்தையும் காணும் ஆசையால் வந்தேன்; என்ருன். கண் குளிர இந்தப் பாண்டிய நாட்டுச் சிறப்பைக் கண்டதனல் அதை வாழ்த்தியவாறு இருக்கிறேன் என்ருன். மதுரைக்கு வழி கேட்டான் கோவலன். இந்த நெடுவழி கடந்தால் அங்கு மூன்று வழிகள் தோன்றும் வலப்பக்கத்து வழியே சென்ருல் தென்னவன் சிறுகுன்றம் தோன்றும், அதை வலப்புறந்தள்ளிச் செல்வீர். இடப்பக்கத்தின் வழியேகுவீராயின் திருமால் குன்றம் இருக்கும். அங்கு ஒரு பிலம் உண்டு. அப்பிலத்தின்கண் மூன்று பொய்கைகள் காணப்படும்—

—என்பன இவ்வியல்

தென்றிசைநோக் கிச்சென்ருேர் வளநீர்ப் பண்ணை
திகழ்பொய்கை சூழ்ந்தஓர் மலர்ப்பூங் காவில்
நன்றிருந்தார்! அப்போதில் ஒருபார்ப் பான்தான்
நண்ணலுற்ருன் ஊர்யாது வந்த செய்தி
என்ன என்ற கோவலற்கே குடம லைநாட்
டின்மாங்கா டென்னுமூர் உடையேன் இங்கே
நன்ருன திருவரங்கம் வேங்க டம்காண்
கின்றஓர் நசையாலே வந்தேன் என்ன,

பண்ணை—வயல்.

ஊர் யாது—உன் ஊர் யாது? வந்ததென்ன —வந்ததன் காரணம் யாது.

வந்தேன் என்ன என்பது அடுத்த பாட்டைத் தொடர்கின்றது; குளகம்! என்ன—என்று சொல்லிய அளவில்.

மதுரைக்கு வழிகேட்டான் கோவ லன்தான்
"மற்றிந்த நெடுவழியைக் கடந்து சென்று
முதுகொடும்பா ளூர்அடைந்தால் அங்குத்
தோன்றும்
மூவழியில் வலப்பக்க வழியே சென்ருல்
மதிதென்னர் சிறுகுன்றம் தோன்றும் அஃது
வலந்தள்ளிச் செல்லுவீர் இடப்பக் கத்தின்
அதர்ஏகத் திருமால்குன் றத்தைக் காண்பீர்
அங்குண்டோர் பிலம்; அதன்கண் மூன்று பொய்கை

முது—பழமையான. தோன்றும்—தோன்று கின்ற. மூவழி—மூன்று வழி, மதி—மதிக்கின்றது; வினைத்தொகை. தென்னன்—தென்னவன். அஃது—அதை; இரண்டன் தொகை. அதர்—வழி, ஏக—செல்ல.

முதற்பொய்கை மூழ்கினல் ஐந்தி ரத்தை
முழுதுணர்வீர் மற்றென்ருல் பழம்பி றப்பும்
அதன்பின்ன தால்விரும்பும் பேறும் காண்பீர்;
அவ்வழியே மதுரைக்குச் செல்லல் நன்ரும்.
இதுவன்றி நடுவிலுள வழியே சென்ருல்
இடர்உண்டாம் என்றுரைத்து நகைவி ளைத்தான்.
மதியுடைய கோவலனும் நகைத்தா னுகி
வழுத்துவான் பார்ப்பனனும் விழித்தா னுனன்

ஐந்திரம்—இந்திரனல் செய்யப்பட்டது; வடமொழியில் தத்திதம் என்பர்; இஃது ஒரு நூல். இதை உலகின் முதற்றனி மொழியாகிய தமிழுக்கே முதனூல் என்று புளுகி வருகின்ருர்கள் வடவர்.

ஒரு பொய்கையில் மூழ்கினுல் ஐந்திர நூல் உணரலாமாம். மற்ருென்ருல் அதாவது, மற்ருெரு பொய்கையில் மூழ்கினுல் பழம்பிறப்புத் தெரியுமாம். அதன்பின்னதால், அதாவது அதன் பின்னுள்ள பொய்கையில் மூழ்கினுல் விரும்பியது · பெறலாமாம். இவ்வாறு மாங்காட்டு மறையவன் புளுகிக் கோவலன் முதலியவர்களின் உள்ளத்தைத் தம் ஆரிய நெறியில் ஓர் ஆசையை உண்டாக்குகின்ருன். இவ்வாறெல்லாம் கூறிக் கோவலன் முதலியவர்கள் எள்ளி நகையாடச் செய்கின்ருன் என்பது கடைசி இரண்டு வரிகளின் கருத்து.

படிவதனுல் பொய்கையிலே ஐந்தி ரத்தைப்
படித்தநிலை வந்திடுமோ! ஆரி யத்தைப்
படிப்பதனுல் ஆவதென்ன ? பழம்பி றப்புப்
படுபொய்யோ உண்மையோ முடிவார் கண்டார்?
முடிவில் ஒன்ருல் விரும்புவது கிடைக்கு மென்ருல்
முழுப் பொய்யை நம்புவார் உள்ளார் போலும்!
நடப்பார்ப்பான் ஆரியத்தைப் பிறர்உள் ளத்தில்!
நாம் நடப்போம் நடுவழியே என்ருர், ஆங்கே

ஆரியத்தை—ஆரியரின் நெறி குறிக்கும் ஐந்திர நூலை. முடிவார் கண்டார்—முடிவு ஆர்கண்டார் எனப் பிரிக்க. ஆர்—யார் என்பதன் மருஉ. முடிவில் ஒன்ருல்—முடிவில் அஃதாவது மூன்ருவதாக உள்ள ஒரு பொய்கையில் மூழ்குதலினுல், உள்ளார் போலும்; இல்லை என்றபடி.

ஆரியக் கருத்தை ஆரியரல்லாதார் உள்ளத்தில் நட்டுப் பயிராக்கப் பார்ப்பான் என்ப

தற்கு, நடப்பார்ப்பான்......உள்ளத்தில் எனப் பட்டது. படிவதனுல் பொய்கையிலே என்ப தைப் பொய்கையிற் படிவதனுல் என்று சொல் மாற்றிப் பொருள் கொள்க.

## இயல் 32

அவன் சொன்ன மூன்று வழிகளில் நடு வழியே நாம் செல்லத்தக்கது என்ற அளவில்,

அவ்விடத்தில் வேட்டுவர்கள் ஒரு குமரிக்கு ஐயை எனக் கோலம் செய்து, விழாவில் மற்றவர்களும் கலந்து கொள்வதைக் கண்ணகி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கோவலன் கவுந்தியடிகளோடு நடக்கலானுள். அப்போது பொதிகையிற் ரோன்றி மதுரையில் வளர்வ தான தென்றல் வீசிற்று. வானிலவு பகலைச் செய்தது. இவ்வாறு சென்ற மூவரும்—ஒழுக் கந் தவறிய பார்ப்பனர் ஒதுங்கி வாழும் ஓர் ஊர்ப்புறத்தை அடைந்தார்கள். அங்கே காலை யில் கண்ணகியையும் கவுந்தியடிகளையும் வேலி சூழ்ந்ததொரு காப்பான இடத்தில் இருத்திக் கோவலன் நீர்நிலை தேடி நெடிது தொலைவு செல்லுகையில், குரல் ஒன்று "அங்குத் தனித் திருக்கும் மாதவியே என்ன அல்லல் அடைகின் ருயோ"—எனக் காதிற் பட்டது; இது என்ன என்று எண்ணும் போதே ஒரு பார்ப்பான் தோன்றினன்.

நீ சொன்னவற்றின் பொருள் என்ன என்று கோவலன் அவனைக் கேட்க, அப் பார்ப்பான்" மாசாத்து வானும்,அவன் மனை

வியும் உறவினரும் நாள் முழுதும் தாம் வீழ்ந்த துன்பக் கடலினின்று கரையேற முடியாமல், கோவலன் என்ன துன்பம் உற்ருன்? எங்கே இருக்கிருன்? என்று உலகில் எங்கும் தேட ஆட்களை விடுவார் ஆனுர் என்ருன்

—என்பது இவ்வியல்.

வேட்டுவர் ஓர் குமரிக்குக் கோலம் செய்து
விழாநடத்தும் அதனையே முகந்தி ருப்பி
நீட்டுவிழிக் கண்ணகிதான் பார்த்த வண்ணம்
நேயநெடும் கவுந்தியொடும் நடக்க லானுள்
வாட்டமுறு பொதிகையினிற் ரேன்றித் தென்னன்
மதுரையினில் வளர்தென்றல் வீச, மற்றும்
ஊட்டுகுளிர் வானிலவு பகலைச் செய்ய
ஒழுக்கமிலாப் பார்ப்பனர்வாழ் புறத்தே
சேர்ந்தார்

கோலம் செய்து—அவ்விழாவில் ஒரு குமரிக்கு ஐயை போல அணி முதலியவை அணிந்து அழகு செய்து. வாட்டம்—உயர்ச்சி. உயர்ந்திருப்பவனை அவன் வாட்டசாட்டமாய் இருக்கின்ருன் என்பது உலக வழக்கு, தென்னன்—பாண்டியன். ஊட்டுகுளிர்—வினைத் தொகையாதலின் ஒற்று மிகவில்லை. பகலைச் செய்ய—பகல் போன்றவெளிச்சத்தைச் செய்ய. ஒழுக்கமிலாப் பார்ப்பனர்வாழ் புறம் என்றது பார்ப்பனர் ஒழுக்கமற்றவர் ஆதலின் அவர்களை அக்காலத்தில் ஊர்நடுவில் சேர்ப்பதில்லை. ஆதலின் அவர்கள் ஊரின் புறப்பகுதியில் ஒதுங்கி வாழ்ந்த நிலையை விளக்கியபடி, புறம்—நகரின் புறம்; புறத்திலுள்ள இடம்.

கவுந்தியினைக் கண்ணகியைக் காலை ஓர்பால்
காப்பான வேலிசூழ் நல்இடத்தில்
உவந்திருப்பீர் என்றுரைத்து நீர்நிலைதான்
உள்ள இடம் தேடியே நெடிது சென்றான் ;
" அவண் தனித்த மாதவியே இந்நேரத்தில்
அல்லலென்ன உற்றனையோ " என்னும் ஓர்சொல்
எவணிருந்து வந்ததெனக் கோவலன்தான்
எண்ணினன் ஓர்பார்ப்பைக் கண்ணிற் கண்டான்.

காப்பான வேலி சூழ் நல்லிடம் என்றது. அஃது, ஒழுக்கமிலாப் பார்ப்பனர் இருக்கும் புறம் ஆதலின் அவர்களில் ஒருவரும் காணாத வாறு அமைந்த வேலி சூழ்ந்து மறைப்பான நல்ல இடத்தை. உவந்திருப்பீர்—இங்கு ஒழுக் கமிலாப் பார்ப்பனர் வருதல் அரிது ஆதலின் மகிழ்ச்சியோடு இருங்கள்.

அவண் தனித்த மாதவியே இந்நேரத்தில் அல்லல் என்ன உற்றனையோ என்ற குரல் கேட்டதேயன்றி ஆள் காணப்படவில்லை. இக் குரல் எங்கிருந்து வந்தது என எண்ணும் போதே, பார்ப்பானைக் கண்டு விட்டான் கோவலன்.

ஏதுரைத்தாய் அதன்பொருள்தான் என்ன என்றே
எதிர்வந்த பார்ப்பனனைக் கோவலன்தான்,
ஓதென்ன, " மாசாத்துவானும் அன்னேன்
உயிரனையாள் தானுமவர் உறவினோரும்
போதெல்லாம் துன்பமெனும் கடலுட் பட்டுப்
புறமீள வகையின்றிக் " கோவலன்தான்
யாதுற்றான் ! எங்குள்ளான் ? எனவையத்துள்
எப்புறத்தும் தேடவிட்டார் " என்று சொன்னான்.

ஏதுரைத்தாய் என்றதனால் நீ சொல்லியவற்றை நன்ருகச் சொல் என்ருனயிற்று. அதன் பொருள்தான் என்ன என்றதனல் அவ்வாறு நீ சொன்னதைச் சொல்லி அதன் விளக்கத்தையும் கூறு என்ருனயிற்று. ஓது—சொல். அன்னேன் உயிரனையாள்—மாசாத்துவான் மனைவி. அவர் உறவினேரும்—மாசாத்துவான், மனைவி இருவரின் உறவினரும். போதெல்லாம்—முழுதும், புறமீள—கரையேற. பார்ப்பனன் எடுத்த எடுப்பில் கோவலன் மனத்தைத் தன் கருத்தின் பக்கம் இழுக்க இவ்வாறு முதலிற் சொன்னன்.

## இயல் 33

முதற்கண்ணே இவ்வாறு கூறியவன்—அதன்பின்னே மாதவி என்னை அழைத்துத் திருமுகம் எழுதித் தந்து இதைக் கொண்டு போய்க் கொடு என்ருள்.

என்னிடம் நீங்கள் பேசிய பேச்சுக் கொண்டு நீங்கள்தாம் கோவலன் என அறிந்தேனுதலின், அதை உங்களிடம் கொடுத்தேன் என்ருன். அதைப் பெற்றுக் கோவலன் திறந்து பார்க்குமுன் மண்பொறியை உடைத்தான். அதில் மாதவியின் மேனி மணத்தை அடையலானன்.

அந்தத் திருமுகத்தில் பெற்றவர்கள் தம் முயிரைப் பிரிந்தார் போன்ருர் மற்றவரும் வருந்துகின்ருர்கள். நங்கையோடு நீவிர், எனைப் பிரிந்து சென்றுவிட்டீர்கள்.

தெரியாமல் சொன்ன என் பிழை பொறுப்பீர்கள் ; என் மனத்துயரத்தை நீவிர் காண்க. —என்ற அவ்வஞ்சலின் உரைகளைப் படித்துவிட்டுத் தன் பெற்றோருக்கு அஞ்சல் ஒன்று எழுதித் தந்து விரைவாக நீ போ என்றான். பார்ப்பனனும் வணங்கிப் போய் ஒழிந்தான்.

அதன்பின் — அரிவையையும் கவுந்தியையும் ஆரணங்கே அடிகளே ! உள்ளீரோ என்று கூறிக் கொண்டே சென்று அவ்விடத்தை அடைந்தான்

—என்பது இவ்வியல்.

முன் அதனைக் கூறினேன் பின்னும் "ஐயா
மொய்குழலாள் மாதவிதான் எனைஅழைத்தே
தன்எழுத்துத் திருமுகத்தை என்பால் தந்து
'தருகஎன் கோவலனைத் தேடி' என்றாள்
சொன்னமொழி கொண்டும்மைக் கண்டு
கொண்டேன்
தூயோரே" எனத்தந்தான்! கோவ லன்தான்
மன்னஞ்சல் திறக்குங்கால், மண்ண ழுத்தில்
மாதவியின் மேனிமணம் மருவ லானான்.

ஐயா—ஐயன் என்பதன் விளி. உயர்வு பற்றி உயர்திணையில் வந்தது. தன் எழுத்துத் திருமுகம்—தன் கையால் எழுதிய அஞ்சல், என்னைக் கண்டதும் காணாததுமான நிலையில் நீவிர் சொன்ன மொழியைக் கொண்டு உம்மைக் கொண்டு உம்மைக் கண்டேன் எனப்பட்டது. தந்தான்—அஞ்சலைத் தந்தான். மன்—பெருமையான. மண்ணழுத்து—அரக்கு முதலிய மண்ணால் பிறர் திறவாமல், குறி வைத்தழுத்திய பொறி.

மாதவி தொட்ட முத்திய மண்ணமுத்தில் அவள் உடலின் மணம் வீசியது; அதை அடைய லானுன் கோவலன்.

பெற்றவர்கள் தம்முயிரைப் பிரிந்து போகப்
பெற்றவர்கள் ஆனுர்கள் மற்று முள்ள
உற்றவர்கள் தாம்பெற்ற செல்வம் ஏகல்
உற்றவர்கள் ஆனுர்கள் நாட்டி லுள்ள
கற்றவர்கள் எல்லாரும் அழுது பாடக்
கற்றவர்கள் ஆனுர்கள் துறவு கொண்ட
நற்றவர்கள் உமைத்துறக்க ஆற்று கில்லார்
நங்கையுடன் சென்றீரே எனைப்பி ரிந்து!

—அஞ்சலில் இருந்த உரை இது.

பெற்றவர்கள் உயிர் பிரிந்தவர் போலானுர்கள். உற்றவர்கள் செல்வம் போனவர்கள். கற்றவர்கள் அழுது பாடுகின்றுர்கள். துறவிகள் உம்மைத் துறக்க முடியாதவர்கள். இவ்வாருக நீவிர் கண்ணகியுடன் சென்றீர் என்னைப் பிரிந்து—என்பது இச்செய்யுள் கருத்தாதல் காண்க.

நங்கை—கண்ணகி. ஆற்றுகில்லார்—பொறுத்தல் இல்லாதவரானுர்.

சூழலுற்ற கோவலன்தான் அங்கு வந்து
சூழலுற்ற பாணருடன் மகிழ்வி னேடும்
யாழிசைத்தே மதுரைதான் எங்கே என்ன
இதுமதுரைத் தென்றலே அஃதண் மைத்தே
வாழ்களென்ருர்! மூவருமே வழிக டந்து,

வையையினைப் புணைமரத்தால் கடந்தே ஆற்றின்
வீழ்புனலின் தென்கரையை மேவி ஆங்கே
விரிமதுரை மதிற்புறத்தோர் சேரி புக்கார்

சூழலுற்ற கோவலன்--அடைந்த கோவலன், அல்லது மரங்கள் வேலிகள் சூழ்ந்த இடத்தை அடைந்த கோவலன். அங்கு வந்து சூழலுற்ற— அங்கு அப்போது சுற்றிக் கொண்ட.

இது மதுரைத் தென்றலே--இதோ வருகின்றதான இது மதுரையினின்று வரும் தென்றற் காற்றே, அஃது--ஆதலால் அந்த மதுரை நகர். அண்மைத்தே--அண்மையில் உள்ளதே, புணைமரம்—கட்டுமரம்.

விரி மதுரை—இடமகன்ற மதுரை, சேரி— சேர்தலாற் சேரி. ஊர்புக்கார்--அடைந்தார்கள்.

## இயல் 34

வைகறையில் கோவலன் முதலிய மூவரும் தங்கியிருந்த புறஞ்சேரி சார்ந்த பூம்பொழிலிடத்தும், வளவயலிடத்தும் புள்ளினங்கள் ஆர்த்தன; மக்கள் புகழ்ந்துரைக்கும் பொய்கையின் தாமரையரும்பின் இதழ் விரித்து எழுந்த இளம் பரிதியின் மென்மையான கதிரின் பொன்னொளி போய் இன்னல் என்பதே இன்னதென்றறியாத மக்களின் துயில் எழுப்பின. முரசினாலும் சங்கினாலும் மதுரை பெற்ற மங்கல ஓசையை இவ்வுலகினர் எவரும் பெற்றார்கள்.

மதுரை நகரின் அமைப்பையும் மக்கள் வாழும் வகையையும் கண்டு வருகின்றேன்: இங்கு இருங்கள் என்று கண்ணகி கவுந்தியார்க்குக் கூறிச்சென்ற கோவலன், உலகம் மதிக்கின்ற போர்த்துறையால் மேன்மை பெற்றுள்ள பாண்டியன் கோயிலையும், அமைச்சர் ஒற்றர் வாழும் பகுதிகளையும், அங்கே எதிர் வருவார் வந்து போவார் உள்ளப் பாங்கையும் கண்டான்; மேற்கொண்டு சென்றான்.

உயர்ந்த கொள்கையை உடைய தமிழ்ப் புலவர்களின் பேரவைகள், பெருமாடங்கள் நிறைந்த தெருக்கள், வாணிக நிலையங்கள், அற மன்றங்கள் மாதர் ஆடும் பூங்கா. அணி என்பது மனத்தில் அணியும்—அதுதான் கல்வி என்று பக்கங்களையெல்லாம் அடைத்துக் கொண்டிருக்கின்ற கழகங்கள் ஆகியவற்றைக் கண்டான்; மேலும் காணும் அகத்தானாகித் தொழில் பலவும் காணச் சென்றான்.

புக்கிருந்த புறஞ்சேரிச் சார்பில் உள்ள
பூம்பொழிலில் வளவயலில் புள்ளினங்கள்
ஒக்கவே எழுந்தார்ப்ப வைகறைக்கண்
ஊர்சார்ந்த பொய்கைத்தாமரைஅரும்பின்
மிக்கனவாம் இதழ்விரித்த இளஞாயிற்றின்
மென்கதிரின் பொன்னொளிபோய் இன்னல்காணு
மக்களினைத் துயிலெழுப்ப, முரசால் சங்கால்
மதுரைபெற்ற மங்கலம்,இவ் வுலகர் பெற்றார் !

புள்ளினங்கள்—பறவைக் கூட்டங்கள். ஆர்ப்ப — ஆரவாரம் செய்ய. வைகறை—முற்காலை. ஊரைச் சார்ந்த மக்கள் சிறப்பித்துச்

சொல்லும் சொல் சாந்தமான, இன்னல் காணு— துன்பும் அறியாத. முரசால் சங்கால்—மதுரையில் எழும் முரசொலியால் சங்கொலியால். மங்கலம்—மங்கல ஓசை.

மதுரைநகர்ப் பாங்குகண்டு மக்கள் வாழ்வின்
வகைகண்டு வருவேன் இங் கிருக்க என்று
முதிர்அன்பு மங்கைபால், அடிக ளின்பால்
மொழிந்தானய்ச் செல்லுகின்ற கோவ லன் தான்
மதிக்கலுறும் மறத்துறையின் விளங்கு கின்ற
மன்னவனின் கோயிலேயும் அமைச்சர் ஒற்றர்
பதிபலவும் அவண்வருவார் போவார் நெஞ்சப்
பாங்கினையும் கண்டுமேற் கொண்டு சென்முன்

பாங்கு – அமைப்பு, வகை – நடைமுறை, இருக்க – இருப்பீர்கள்: வியங்கோள். மங்கை - கண்ணகி, அடிகள் - கவுந்தியடிகள். கோயில்— அரண்மனே. பதி—உறைவிடம். மேற்கொண்டு— மேலும் செல்லுவதை மனதிற்கொண்டு.

மாண்அகத்துத் தமிழ்ப்புலவர் பேர வைகள்
வான்எட்டும் மாடங்கள் மலிதெ ருக்கள்
வாணிகத்து நிலையங்கள் அறமன் றங்கள்
மான்எட்டும் விழிமாதர் ஆடும் பூங்கா,
பூண்அகத்துப் பூண் அதுதான் கல்வி என்று
புடை எட்டும் கழகங்கள் கண்டான் மேலும்
காண்அகத்தான் தொழில்பலவும் காணச் சென்முன்
கண்டவர்கள் கோவலனைப் பின்தொ டர்ந்தார்!

மாண் அகத்து—பெருமை பொருந்திய கொள்கையுடைய; அத்துச் சாரியை.

மான் எஃ்டும் விழி—மான் போன்ற விழி, எட்டும்—உவமை உருபு. பூண் அகத்துப்பூண்—அணியும் அணி என்பது, உள்ளத்தில் அணியும் அணியே. அதுதான் கல்வி—அவ்வணிதான் கல்வியாகும். புடை எட்டும்—பக்கங்களை யெல்லாம் எட்டுகின்ற. காண் அகத்தான்—காண்பதோர் எண்ணமுடைய கோவலன்.

## இயல் 35

மாணகத்துத் தமிழ்ப் புலவர் பேரவை முதல் கல்விக் கழகங்கள் வரைக்கும் கண்டபின் - கோவலன், மக்கள் தன்னைத் தொடர்ந்துவரத் தொழில்கள் பலவற்றைக் காணச் செல்லுகையில்,

கோவலன் ஒரு கட்டடத்தைக் காட்டி இது என்ன என்று கேட்பான். அதற்கு விடையாக ஆயிரம் பேர்கள் அது இன்னதென்று விளக்குவார்கள். இன்னும் காணத் தக்க புதிது என்னவென்றால். ஆயிரம் பேர்கள் வழிகாட்டி முற்செல்லுவார்கள். அவன் சொல்லும் சொல் எங்கிருந்து வந்ததோ அந்த இனிதான உள்ளத்தை அறிந்து மகிழ்வார்கள். தேன் ஓடும் பக்கத்தில் வண்டின் கூட்டம் ஓடுவது வியப்பன்று.

தன்னைச் சூழவிருக்கும் நன்மக்களில் சிலர் வரலாறு கேட்கையில், சொல்லாவிட்டால் அவர்கள் வருந்துவார்களே என்று எண்ணிச் சுருக்கமாகச் சொன்னான்.

மற்றும் தான் காண வேண்டுவனவற்றை யெல்லாம் கண்டபின் நன்னாகியும், கவுந்தியடி

களும் இருக்குமிடத்தில், நான் இல்லாமை கருதி அஞ்சி மனத்துயர் அடைந்தார்களோ? நான் விரைவாகச் செல்லவேண்டும் என்ற முடிவுக்கு வந்தவனுகி, எண்ணத்தில் ஆழ்ந்துள்ள அங்குள்ள மக்களிடம் சொல்லிக்கொண்டு வழி கண்டு தனியே சென்ருன்.

சிரிக்கும் கண்ணை உடையவளான கண்ணகி, தன் காதலனை எண்ணி என் துணைக்கு ஒன்று நேர்ந்துவிட்டதோ என்று கதறினுள். அதே நேரத்தில் வந்த கோவலன் அவள் தோளுக்கு ஒன்ருகினுன்–

- என்பது இவ்வியல்.

இதுவென்ன? - எனக்கேட்பான் கோவலன்தான்!
இன்னதென விளக்குவார் ஆயிரம்பேர்!
புதிதென்ன இன்னும்எனில் ஆயிரம்பேர்;
போம்வழியைக் காட்டுதற்கே முன்நடப்பார்!
எதுவேனும் அவன்சொன்னல் சொல்இருந்த
இனிதான உளங்கொண்டு மகிழா நிற்பார்
மதுஓடும் பக்கமெலாம் கூட்ட மான
வண்டோடிக் கொண்டிருத்தல் வியப்பே அன்ரும்!

எனில் - என்று கோவலன் கேட்டால். போம் வழியைக் காட்டுதற்கே முன்னடப்பார் - அந்தப் புதிது இருக்கும் இடத்துக்கு வழி காட்டுதற்கே முன்னடப்பார். மது - தேன்; தேனுறு ஆகுபெயர். இது இல் பொருளுவமை.

சூழ்ந்திருந்த நல்லோரிற் சில்லோர் கேட்கத்
தூயமனம் வருந்தாமை கருதித் தான்முன்
வாழ்ந்திருந்த வரலாற்றுச் சுருக்கம் சொல்லி

மற்றுந்தான் காணுவன கண்டே, அஞ்சி
வீழ்ந்தனரோ சேரியிலே தங்கி யுள்ளார்
விரைந்துநான் சென்றிடத்தான் வேண்டு மென்றே
ஆழ்ந்துள்ள எண்ணத்து மக்கள் தம்பால்
அறிவித்து நெறிபற்றித் தனியே சென்றான் !

ஆழ்ந்துள்ள எண்ணத்து மக்கள்-கோவலன் வரலாறு கேட்டதால், எண்ணத்தில் ஆழ்ந்திருந்த மக்கள். மக்கள் – கோவலனுடன் தொடர்ந்து வந்துகொண்டிருந்த மக்கள். கோவலனுக்குப் புதிய ஊர் வழியறிந்து செல்வது அரிது ஆதலால் நெறிபற்றி எனக் கூறப்பட்டது. பற்றி - தெரிந்து.

உடனிருந்த மக்களை அழைத்துச் செல்லாமல் தனியே சென்றான் என்று விளக்கியது காண்க. மக்கள் தம்பால் - மக்களிடத்தில், பால் ஏழனுருபு.

விடிந்துவிடு முன் அகன்று வெங்க திர்போய்
விழுந்தபின்னும் வரவிலையே! என்கண் ணீர்தான்
வடிந்துவிடும் எனுங்கருத்தோ! துணைபி ரிந்தும்
வாழ்ந்திருப்பேன் எனுங்கருத்தோ! எனஉ யிர்தான்
முடிந்துவிடு மோஎன்னும் நிலைய டைந்து
மொய்குழலின் மலர்சிதற ஐயோ என்ற
ஒடிந்துவிழும் பூங்கொடியைத் தாங்கி நின்றான்;
உள்ளத்தும் கண்ணகியைத் தாங்கும் செம்மல்

வெங்கதிர் - வெப்பமிக்க கதிரவன். என் கண்ணீர்தான் வடிந்துவிடும் - என் கண்ணிற் பெருகும் வெள்ளம் நின்றுவிடும்.

என - என்று எண்ணி. பூங்கொடி - கண்ணகி. செம்மல் - கோவலன்.

## இயல் 36

ஊரின் சிறப்புக் கண்டு புறஞ்சேரி மீண்ட கோவலன், தான் கண்ட மதுரைச் சிறப்பையெல்லாம் கவுந்தியடிகளிடம் செப்புகையில் தலைச்செங்கானத்து மாடலன் என்னும் பார்ப்பனன், குமரி மூழ்கி மீளுவோன் கவுந்தியடிகளைக் காணுதற்கு அங்கு வந்தான்; கோவலன் வருக என்றான்.

அவ்வாறு கோவலன் வரவேற்க மாடலன் "சீர் மிக்க நீவிர் இந்த மாணிக்கக் கொழுந்து போன்ற கண்ணகியுடன் இங்குவந்ததென்ன? உரைப்பீர் என்று கூற, அதற்குக் கோவலன்: ஐயா! இங்கு நான் வந்ததென்பது பெரிய துன்பச் செயலன்று, இனி வர இருக்கும் தீங்கு அதனினும் பெரிதாய் இருக்கும் போலிருக்கின்றது. எண்ணும் போதே உள்ளம் நடுங்கும் ஒரு கனவு கண்டேன் என்றான்.

இதுகேட்ட அடிகள் அறங்காணுப் பார்ப்பனர் இருப்பிடத்தில் குடிபுகுந்து அச்சமுற்றிருக்கின்றீர். உம் அச்ச நினைப்பே கனவாகும். ஆதலால் இதைவிட்டு நீவிர் மதுரை செல்க என்றார். அதே நேரம் அடிகளிடம் மாதரி வந்தாள்—

என்பது இவ்வியல்.

ஊர்ஏகிப் புறஞ்சேரி மீண்ட செம்மல்
உயர்மதுரைச் சிறப்பினையும் பாண்டி மன்னன்
சீர்மிக்க வெற்றியையும் கவுந்தி யின்பால்

செப்புகையில் தலைச்செங்கா னத்து வாழ்வோன்;
ஓர்பார்ப்பான்; மாடலன்தான் குமரி ஆடி
உடன்மீள்வோன் கவுந்தியினைக் காணு தற்கு
நேர்வந்தான். கோவலனும் வருகஎன்றான்
நெஞ்சத்து மிகமகிழ்ச்சி கொண்டான் பார்ப்பான்.

செம்மல்—கோவலன்.

குமரி ஆடி—குமரி என்ற தென்கடலில் முழ்கி.

வரவேற்ற கோவலனை மாட லன்தான்
வண்மையிலும் தண்மையிலும் நிகரில்லாதீர்!
மருமலர்த்தார் மார்பனீர் நீவிர் இந்த
மாணிக்கக் கொழுந்தோடு வந்த தென்ன
உரைக்கஎனக் கோவலன்தான் ஐயா இங்கே
உற்றதொன்று பெரிதன்றே வரவி ருக்கும்
ஒரு பெரிய தீங்குண்டு போலும்! எண்ண
உளநடுங்கும் கனவொன்று கண்டேன் என்றான்.

வண்மை—செல்வம்.

தண்மை—பிற உயிர்களிடத்து இரக்கம். மரு மலர்த்தார்—மணமுள்ள மலரால் கட்டிய மாலை. உற்றதொன்று—உற்றது ஒன்று எனப் பிரிக்க. ஒன்று—ஒரு தீங்கு. எண்ண உளம் நடுங்கும் கனவு—எண்ணும் போதே மனம் நடுங்கும் அத் தனை கொடியதான கனவு.

அடிகள் தாம் அதுகேட்டுக் கூறு கின்றார்
"அறங்காணுப் பார்ப்பனர்கள் ஊர்ந்த ஊரில்
குடிபுகுந்தீர் அச்சத்தில் குடிபு குந்தீர்

கொள்நினைவே கனவாகும் ஆதலாலே
நொடியில்இவ் விடம்விட்டு மதுரை செல்க ”
நவிலஇது ! கோவலனும் நன்றே என்றான்.
அடிகளிடம் மாதரிவந் தாள்அந் நேரம் !
அன்னவள்ஓர் ஆயர்மகள் ; முதியோள் ; நல்லள் !

ஊர்தல்—குடியேறுதல். ஊர்ந்தது ஊர் எனக் காரணப் பெயராதல் அறிக. கொள் நீனைவே கனவாகும்—அச்சத்தான் கொண்ட நினைவே அஞ்சத் தக்க கனவு ஆகும். நுவல இது—இது நுவல என்று மாற்றிப் பொருள் கொள்க, நுவலல்—சொல்லல்.

ஆயர்—இடையர். முதியோள்—ஆண்டின் முத்த வள். நல்லள்—நற்குண முடையவள்.

## இயல் 37

கவுந்தியடிகள் மாதரியைப் பற்றி அவள் கொடுமையில்லாத வாழ்க்கையுடையவள்; நன் மையமைந்த இடையர் குடியினள்; முதியவள்; நல்லவள்; நடுவு நிலையுள்ளம் வாய்ந்தவள் ஆகிய மாதரியிடம் கண்ணகியை இருக்கச் செய் யலாம் என்று கூறக், கோவலன் மாதரியை நோக்கி அன்னையே, கண்ணகி என்னும் என் மனைவி நின் அடைக்கலம் என்று கூறிக் கண் ணகியின் கையை அவள் கையில் அளித்துக் கண்ணீர் சிந்தினான்.

அப்போது கண்ணகி, கோவலன் கண்ட தாகக் கூறிய கனவை எண்ணி நெஞ்சில் கலக்கத்தையும் கண்ணில் நீர் அருவியையும்

வைத்து, அங்குச் சூழ்ந்திருந்த அனைவர் நடு விலும்!மாதரியால் கைப்பிடிக்கப்பட்டும் முதலில் மறந்து பிறகு நினைத்துவந்து காட்டாத தன் முகம் காட்டித் தன்னைச் சாகாமல் வாழவைத்த இனிய தன் கோவலனை இனிப் பிரிவதும் உண்டு போலும் என்று எண்ணி ஏங்கலுற்றாள் கண்ணகி. ஏங்கும் கண்ணகியை நோக்கிக் கோவ லனும் ஏங்கினான். அங்கிருந்தார் அனைவரும் வருந்தினார்கள். இவ்விருவரும் இவ்வாறு சிறு மையினில் ஆழ்கின்ற நிலையை எண்ணித் துறவு பூண்ட அடிகளும் அழுதார்கள். அப்போது —அடிகளே வணக்கம் என்று கோவலன் சொல்லி விடைபெற்றுக் கொண்டான். நீவிரும எனைவிட்டு நீங்கினிரோ என்று கூறித் தொழுது கண்ணகியும் விடைபெற்றுக் கொண்டாள். இருவரும் நேரே மாதரியுடன் நடக்கலானார்—

என்பது இவ்வியல்.

கொடுமையிலா வாழ்க்கையினை உடையாள்
ஆப்பால்
கொண்டளிக்கும் குடியுடையாள் ; முதியாள் ;
நல்லள்
நடுநிலையாள் மாதரிபால் அன்பு மிக்க
நங்கையினை இருத்தலாம் எனக் கவுந்தி
அடிகள்தாம் உரைத்தவுடன் கோவ லன்தான்
அன்னாய்என் கண்ணகியாம் மனைவி தான்நின்
அடைக்கலமே எனவுரைத்து மனையாள் கையை
அவள்கையில் பிடித்தளித்துக் கண்ணீர்
வார்த்தான்!

கொடுமையிலா வாழ்க்கையினை உடையாள் என்றது, கொடுமை வாழ்க்கையினராகிய எயினர் முதலானோரின் வாழ்கையை விளக்குவதற்கு. ஆப்பால் கொண்டளிக்கும் குடியுடையாள்—ஆவின் பாலைக் கொண்டு மக்களைக் காக்கும் குடித்தனக்காரி. இருத்தலாம்—இருக்கச் செய்யலாம். என—என்று. நின் அடைக்கலமே—உன் காப்புக்கு வைத்த பொருள்.

கனவெண்ணி நெஞ்சத்தில் கலக்கம் வைத்தும்
கண்களிலே அருவிவைத்தும், சூழ்ந்திருந்த
அனைவோரின் நடுவின்மா தரிதான் ஏந்தும்
அங்கையினுற் செங்கைதான் பற்றப் பட்டும்
முனம் மறந்து பின்நினைந்து வந்து, காட்டா
முகம்காட்டிச் சாவாளை வாழ வைத்த
இனியவனை இனிப்பிரிதல் உண்டு போலும்
என்றெண்ணிக் கண்ணகிதான் ஏங்க லுற்ருள்.

இனியவனை—கோவலனை. இனிப்பிரிதல் உண்டுபோலும் என்றது, இவளை மாதரி பால் இருக்கும்படி செய்யலாம் என்று கவுந்தியடிகள் சொன்னபடி, கோவலன் மாதரிபால் தன்னை விட்டுச் செல்வான் என்று எண்ணி. சாவாளை—இறந்துபோகும் ஒருத்தியை, அதாவது தன்னை. ஏங்கலுற்ருள்—அழுதாள்.

ஏங்கினுட் கேங்கினுன் கோவ லன்தான்!
ஏங்கினுர் அங்கிருந்த மக்கள் யாரும்!
தீங்கற்ருன்; தீங்கற்ருள் இன்ன வண்ணம்
சிறுமையினில் ஆழ்கின்ற நிலையை எண்ணி

ஆங்கிருந்த துறந்தாளும் அழுதி ருந்தாள்
"அடிகளே வணக்கம்"என்ருன் செம்மல்! மங்கை
நீங்கினிரோ எனத் தொழுதாள்! நடக்க லுற்ருர்
நேயத்து மாதரியி ேைடு நேரே.

ஏங்கிளுட்கேங்கிஞன்—ஏங்கிஞளுக்கு, அதாவது ஏங்கிய கண்ணகியின் பொருட்டு ஏங்கிஞன்.

அங்கிருந்த மக்கள்—அங்குக்கூடியிருந்த பெரு மக்கள். இன்ன வண்ணம்—இப்படி சிறுமையினில் ஆழ்கின்ற நிலை; கண்ணகிபால் கோவலன்பால் அந்நாள் காணப்படும் நிலை சிறுமை நிலை; அதாவது வறுமைநிலையில் ஆழ்தல்; வறுமைநிலை மேம்படுதல். துறந்தாளும்—உம் உயர்வு சிறப்பு. நேயத்து—அத்துச் சாரியை.

கோவலனும் கண்ணகியும் வேறுபக்கம் எது கருதியும் போகவில்லை என்பதைக் குறிக்க நேரே எனப்பட்டது.

## இயல் 38

மாதரி இல்லம் சேர்ந்து, மாதர் செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் நான் செய்வேன் நான் செய்வேன் என்று மாது கண்ணகி காய்கறிகளை அரிந்து சமையல் அனைத்தையும் மாதர் இவைசெய்ய முடியாதவை என்று சொல்லும்படி முடித்து ஓத அரிதான குணமுடை கோவலனுக்கு உணவிட்டு வெற்றிலை பாக்குத் தந்து நிற்க,

காதலியான அந்தக் கண்ணகியைக் கோவலன் கேட்ட காற்சிலம்பு இரண்டில் ஒன்றை விரைவாகக் கொடுத்தாள்.

அவளை நோக்கிக் கோவலன், என்னேடு காட்டில் நடந்து துன்பமுற்ருய் இதனை என் பெற்ரேர் எண்ணி என்ன துன்பம் அடைந்தார்களோ! யான் உனக்கு இழைத்த துன்பம் சிறிதன்று. தச்சன் பண்ணுதற்கரியபொற்பாவை போன்றவளே நான் சுமந்த பழுதையெல்லாம் நீக்கிவந்தவளே; அழவேண்டாம். இந்தச் சிலம்பை விற்றுக்கொண்டு விரைவில் வந்து விடுவேன் நல்லவளே என்று கூறிக் கோவலன் சென்ருன்.

இந்தக் காட்சியை உடனிருந்துகண்ட மக்கள் மரக்கலங்கள் பாட்டுப் பாடிக்கொண்டு அயல் நாட்டில் விற்றுவிட்டு மீண்டும் அந்தக் கலம்பாடிக் கொண்டே அங்கிருக்கும் சரக்கை ஏற்றிக்கொண்டு வரும். தம் வறுமையைப் பாடி வருகின்றவர்க்கு இல்லை என்று சொல்ல மாட்டார். இளைப் பெருமையைப் பாடும் புலவர்க்கே எம் சொத்தெல்லாம் என்பவர் தம் நலத்தை எடுத்துக் காட்டும் கடல்போன்ற செல்வத்தையுடையவரும் நாட்டுக்குப் பாடுபடுபவருமாகிய பெருங்குடி மக்கள் பெற்ற மைந்தனை இக் கோவலன் இன்று சிலம்பொன்றின் விலைபாடிச் செல்லும் இந்தத் துன்பத்துக்குரிய காட்சியானது சிறுமை நிலைக்கு எதிரில்வைத்த கண்ணுடியாகும் என்ருர்கள்—

என்பது இவ்வியல்.

மாதரியின் இல்லத்திற் சேர்ந்தார் ஆக
மாதர்இயற் றும்பணியை நான்நான் என்று
மாதரிந்து காய்கறியைச் சமையல் முற்றும்
மாதரிவை செயற்கரிய எனமுடித்தே
ஓதரிய குணமுடைய கோவ லற்கே
உணவிட்டு வெற்றிலைபாக் கீந்து நிற்கக்,
காதலியைக் கோவலன்தான் கேட்ட தான
காற்சிலம்பி ரண்டிலொன்று கழற்றித் தந்தாள்.

ஆக—அப்படியிருக்க.

மாதர் இயற்றும் பணியை—மாதரி வீட்டில் மாதர் இயற்றக் கூடிய வேலைகளை. நான்நான் என்று—நான் செய்கின்றேன் நான் செய்கின்றேன் என்று.

மாதரிந்து காய் கறியை—காய்கறியைமாது அரிந்து. மாது—கண்ணகி மாதரிவை செயற்கரிய எனமுடித்து—பெண்கள் இவை செய்ய முடியாதவை என்று சொல்லும்படி அவ்வளவு சுவையுடையனவாக.

ஓதரிய—ஓத அரிய. அகரம் தொகுத்தல். நிற்க—கண்ணகி நிற்க. தந்தாள்—கண்ணகி தந்தாள்.

கண்ணகியே என்னோடு காட்டி லெல்லாம்
கால்நோவ நடந்ததனை என்பெற் றோர்கள்
எண்ணியே என்னதுயர் எய்தி னாரோ!
யானும்உனக் கிழைத்ததுயர் சிறிய தன்று!
பண்ணரிய பொற்பாவாய்! நான்சு மந்த

பழுதகற்ற வந்தவளே அழுதல் வேண்டாம்.
நண்ணிடுவேன் விரைவாக இதனை விற்றே
நல்லவளே எனச்செம்மல் சொல்லிச் சென்றான்.

சிலம்பொன்றை வாங்கிக் கொண்ட கோவலன், அவளைப் பலவாறு பாராட்டினமை காண்க.

எய்தினரோ—அடைந்தார்களோ.

பண்ணரிய—பண்ண அரிய; அகரம் தொகுத்தல்; தச்சன் இயற்றுதற்கு அரிதான. பாவை—பாவாய் என விளியேற்றது. நான் சுமந்த பழுது—நான் மிகவாகத் தேடிக் கொண்ட பழி. நண்ணிடுவேன்—வந்து விடுவேன். செம்மல்—ஆண்மக்களிற் சிறந்தவன்: கோவலன்.

கலம்பாடிச் சரக்கேற்றி அயலில் விற்கும்!
கலம்பாடிச் சரக்கேற்றி நாடு மீளும்!
இலம்பாடி வந்தோர்க்கே இல்லை என்னார்!
இனம்பாடும் புலவர்க்கே எல்லாம் என்போர்!
நலம்பாடும் செல்வமெலாம் கடல்போற் கொண்ட
நாட்டுக்குப் பாடுபடு வாரின் மைந்தன்.
சிலம்பொன்றின் விலைபாடச் செல்லும் காட்சி
சிறுமைக்குக் கண்ணாடி என்றார் கண்டோர்!

கலம் பாடி சரக்கு ஏற்றி அயலில் விற்கும்—கப்பலானது சரக்கை ஏற்றிக் கொண்டு அயல் நாட்டில் விற்கும். அது போலவே அங்கிருந்து சரக்கேற்றி நாடு மீளும்—சரக்கேற்றிக் கொண்டு நாடு திரும்பும். எது? அந்தக் கலமே.

இலம்—வறுமை.

இனம்பாடுதல்—தமிழர் என்ற இனம்பற்றிப் பாடுதல்.

நலம்பாடும் செல்வம்—உடையவர் புகழைப் பாடுகின்ற செல்வம்; புகழை எடுத்துக் காட்டுகின்ற செல்வம் என்றபடி. சிலம்பை விற்கச் செல்லும் இரங்கத்தக்க காட்சியானது, சிறுமையின் எதிரில் வைத்த நிலைக்கண்ணடி. என்பது இவ்வாறு கூறப்பட்டது.

## இயல் 39

அரண்மனை மகளிர் இல்லத்தில், அரசி ஒரு நாள் இரவு தன் மணாளனின் புணர்ச்சிக் காலத்தில் உடம்பில் பட்டு உறுத்தும் என்று தன் சிலம்புகளைக் கழற்றித் திருப்பள்ளி அறையின் ஒரு பக்கமிருந்த பெட்டகத்தின்மேல் வைத்தாள்.

அவற்றில் ஒரு சிலம்பைக் காலையில் துயிலெழுப்பவந்தவர்களில் ஒருத்தியான வஞ்சி என்பவள், பணம் கொண்டுவந்தால் மணந்து கொள்வேன் என்று சொல்லியிருந்த கருங்கை என்பவனிடம் திருடிக்கொண்டுவந்து கொடுத்தாள்- அதைப் பெற்றுக் கொண்ட கருங்கை இதை எவரிடமும் சொல்லிவிடாதே. திருட்டு வெளியாகிவிட்டால் பெருங்கேடு நமக்கு என்று கூறி அனுப்பிவிட்டான்.

அச்சிலம்பை நீ எடுத்தாயா என்று மறுநாள் அரசினர் கேட்டபோது எனக்கும் கருங்கை

என்பாருக்கும் திருமணத்தை முடிக்கவும் எம் கையிற் காசில்லே. சிலம்பு இருந்தால் திரு மணத்தை முடித்திருப்போமல்லவா என்று மறுத்துரைக்க இதுகேட்ட அரசினர் சும்மா இருந்துவிட்டார்கள்.

இவ்வாறு அரசினர் கேட்டதையும் தான் சொன்னதையும் அப்படியே கருங்கையிடம் வஞ்சி சொன்னவுடன், கருங்கை—என்பெயரை ஏன் உரைத்தாய்! அவர்கள் நம்மீது ஐயப் பாடு கொள்ளும் நிலேயை ஏற்படுத்திவிட் டாயே என்று கூறி அவளே அனுப்பிவிட்டு, அந்தச் சிலம்பை உளவாளிகள் தேடுவார் கள். நாம் அகப்பட்டுக் கொள்ள நேரும். இது நம் வீட்டில் இருக்கலாகாது என்று இடுகாட்டில் கொண்டுபோய்ப் புதைத்து வைத்துவிட்டு ஊரில் போவார்வருவாரையெல் லாம் இவர்கள் துப்பறியும் ஆட்களோ என்று ஐயுற்று நடுங்கிக்கொண்டு தன் வீட்டின் அரு கில் நிற்கையில்

கோவலன் ஆயிர மக்கள் சூழச் சிலம்போ சிலம்பென்று கூவி வருவது கேட்டு, அவளிடம் ஓடி ஐயா அரசியார் என்னிடம் இன்னெரு சிலம்பு வேண்டும் என்று சொல்லியிருக்கின் ருர். நான் அரண்மனைப் பொற்கொல்லன். ஆதலால் அந்தச் சிலம்பைத் தாரும். நான் அரசியாரிடம் காட்டிவரும் வரைக்கும் இதோ இந்தக் கோயிலில் தங்கியிருப்பீர் என்று கூறி, அதைப் பெற்றுச் சென்றுவிடுகின்ருன்—

என்பதன் சுருக்கம் இவ்வியல்.

நிலம்பிரிந்து நாலானுற் போலும், தண்மை
நீர்பிரிந்து முன்ருனுற் போலும், ஒண்மைப்
பொலம்பிரிந்து பல்அணிகள் ஆகி, வண்ணப்
பூவுடம்பெல் லாம்குலுங்கப் பெற்ற மன்னி
புலம்பிரியா மணவாளன் பஞ்ச ணைக்கண்
புணருங்கால் பட்டுறுத்தும் என்று, பூண்ட
சிலம்பிரண்டை யும் கழற்றி அணித்திருந்த
திருப்பள்ளிப் பெட்டகத்தின் மீது வைத்தாள்!

நிலம்பிரிந்து நாலாதல்—உலகம் என்பதொன்றே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நால் வகையாகப் பிரிதல்.

நீர் பிரிந்து மூன்ருதல்—கடல், ஆற்று நீர், ஊற்றுநீர் எனப் பிரிதல்.

தண்மை — குளிர்ச்சி. ஒண்மை — ஒளி. பொலம்—பொன், திரிபு. பல் அணிகள்—பல நகைகள். வண்ணப் பூ—அழகிய பூ, மன்னி—அரசி. மன்னன் என்பதன் பெண்பால். பட்டுறுத்தும்—பட்டு உறுத்தும் எனப் பிரிக்க. பட்டு—அரசன் உடம்பில் பட்டு. அணித்திருந்த—அருகிலிருந்த. திருப்பள்ளி—உயர்வுடைய படுக்கையறை.

மணம்வேண்டும் நாமொன்றி வாழ வேண்டும்;
மனம்வைப்பாய் எனக்கேட்ட வஞ்சி தன்னைப்
பணம்வேண்டும் எனக்கேட்டான் கருங்கை
என்பான்.
பள்ளியினில் துயிலெழுப்பும் போதில் கண்ட
வணம்சிறந்த சிலம்பிரண்டில் ஒன்றெடுத்து

வந்துகருங் கையிடத்தே வஞ்சி நீட்ட
இணங்கி, என் கண்ணுட்டி உன்னை மன்னி
எடுத்தாயா எனக்கேட்டால் இல்லை என்க.

இன்னுங்கேள் வஞ்சியே இக்கள் ளத்தை
இம்மியள வுரைத்தாலும் நம்இ ரண்டு
முன்னங்கை கால்கட்டித் தீயில் இட்டே
முழுதுடம்பும் பொரித்தெடுத்துத் தெருவில்
எங்கும்
'இந்நங்கை ! இம்மைந்தன்! காண்பீர்' என்பார்.
என்றுரைத்தான்!'' செத்தாலும் சொல்லேன்
என்ருள்''
''நன்மணந்தான் என்றென்ருள்! '' இச்சிலம்பு
நமக்குறுதி யானவுடன் நடக்கும் என்ருன்.

ஒன்றி—ஒத்து.

வணம்—வண்ணம்; வேலைப்பாடு, என்க—என்று சொல்லுக. வியங்கோள்; இந்நங்கை-இப்படிப்பட்ட பெண், இம்மைந்தன் — இப்படிப்பட்ட ஆள்.

## இயல் 40

நம் கோப்பெரும் பெண்டின் சிலம்பு எங்கே? எடுத்தீரோ என்று அரசினர் கேட்ட அளவில். நானறியேன்நானறியேன்என்றுதனித் தனியே சொல்லிவிட்டார்கள்; அதன் பின்னர் ஒருபக்கம் தயங்கிக் கொண்டிருந்த வஞ்சியைக் கேட்டபோது அவள். எங்கள் திருமணம் முடிக்

கவும் காசில்லை; கருங்கை என்னும் என் மாப் பிள்ளைக்கும் வேலை கிடைக்கவில்லை. உங்கள் சிலம்பு எங்களிடம் இருந்தால் இந்நேரம் மணமே முடிந்திருக்குமே என்று கூறினாள். இவ்வாறு அங்குக் கூறிய வஞ்சி என்பாள் கருங்கையிடம் ஓடிவந்து, அத்தான் சிலம்பு எடுத்தாயா என்று கேட்டார்கள்; நான் காணேன் என்றேன். குரங்குபோல் விழித்தார்கள். பிறகு அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை என்றாள். அதுகேட்ட கருங்கை அந்த அவையிலே அவர்கள் உன்னைக் கேட்டதென்ன? அதற்கு நீ சொன்னதென்ன ? அத்தனையும் சொல் என்றான். அரைகாகாசும் கையிலில்லை. அவர்க்கும் வேலை கிடைக்க வில்லை; சிலம்பு எம்மிடம் இருந்திருந்தால் திருமணம் ஆகாமல் இருக்குமா என்று அழுத்தமாகச் சொல்லிவிட்டேன் என்றாள். அது கேட்ட கருங்கை.

அடிகேடுகெட்டவளே, என் பெயலரை ஏன் இழுத்துவைத்தாய்? இலை மறைக்க வேண்டிய வள் அதன் காம்பை மட்டும் காட்டலாமா? அன்றியும் நான் எடுக்கவில்லை என்று நீ கூறி னாய் இவ்வாறு. அதைக் கேட்ட அவர்கள் பேச்சை நிறுத்திக் கொண்டனர் என்றால், தம் ஐயப்பாட்டை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சிலம்பு இருக்குமிடத்தை உளவுகாண எண் ணித் தாமே. அவ்வாறு பேச்சை நிறுத்திக் கொண்டார்கள். காகா என்று காக்கை கத்து வதை நிறுத்தியது தனக்கு இரை இருக்கு மிடத்தைத் துப்பறிய அன்றோ என வருந்தி னான்—

என்பது இவ்வியல்,

நம்கோப்பெ ரும்பெண்டின் சிலம்பெங் கென்ன
நானறியேன் நானறியேன் என்று கோயில்
தங்குவார் தனித்தனியே சொல்லப் பின்னர்த்
தயங்கிநின்ற வஞ்சியினைக் கேட்ட போதில்
எங்கள் மணம் முடிப்பதற்கும் காசே இல்லை
என்கருங்கை மாப்பிளைக்கும் வேலை இல்லை!
உங்கள்சிலம் பெங்களிடம் இருந்தி ருந்தால்
உடனேஎம் மணமுடியும் அன்றோ என்றாள்!

கோயில்—அரண்மனை அரசன் இல்லம். இது கோவில் என்றும் வரும்.

மாப்பிளை—மாப்பிள்ளை ளகரம் தொகுத்தல்.

கருங்கையிடம் ஓடிவந்த வஞ்சி "அத்தான்
காற்சிலம்பு கேட்டார்கள்; காணேன் என்றேன்!
குரங்காகி விழித்தார்கள் பின்னர் ஒன்றும்
கூறவில்லை" என்றுரைத்தாள்! கருங்கை யாளன்
அரங்கிலவர் கேட்டதென்ன ? சொன்னதென்ன ?
அப்படியே சொல்லென்றான் "மணமு டிக்க
அரைக்காசும் கையிலில்லை கருங்கை யார்க்கும்
ஐயையோ வேலையில்லை! சிலம்பி ருந்தால்

ஆகாமல் இருக்குமா மணந்தான் ?–என்றே
அழுத்தமுறச் சொல்லிவிட்டேன் என்றாள் வஞ்சி!
"ஏகேடி என்பெயரை ஏன் இ ழுத்தாய் !
இலைமறைக்கக் காம்பையும்நீ காட்ட லாமா?
நீகூறி னுய்நீட்டி நீட்டிக் கேட்டே

நிறுத்திக்கொண் டார்அவர் தம் பேச்சை என்ருய்
காகாஎன் பதைநிறுத்திக் கொண்ட காக்கை
கருத்தையெல்லாம் துப்பறியச் செலுத்திற் ருகும்!

அரங்கில்—அரண்மனையில்; அவையில். இவ்விரண்டு பாட்டுகளிலும் முதற்பாட்டுக் குளகப் பாட்டு சிலம்பிருந்தால் என முடியாமல் இருப்பதால். ஏகேடி—ஏகேட்டை அடைந்தவளே! கேடுகெட்டவளே!

காகா என்பதை நிறுத்திக்கொண்ட காக்கை, கருத்தையெல்லாம் துப்பறியச் செலுத் திற்று ஆகும்—காகா என்று கத்துவதைக் காக்கை நிறுத்திக்கொண்டால், அது தன் கருத்தை இரை இருப்பதைத் துப்பறியத்தானே திருப்பியதாகப் பொருள். அதுபோல் அவர் கள் உன் பேச்சுக்கு ஒன்றும் சொல்லாமல் நிறுத்திக் கொண்டார்கள் என்ருல் என்ன பொருள்?—உன் சொல்லால் அவர்கட்கு ஏற் பட்ட ஐயப்பாட்டின் அடிப்படையில் சிலம் பைத் தேடிப் பிடிக்க வேண்டும் என்பதை மனத்தில் வைத்துத் தானே!

## இயல் 41

மற்றும் வஞ்சியை நோக்கிக் கூறுவான்: அரசினர் என்மேல் ஐயப்பாடு கொள்ள வைத்து விட்டாய்! அரசரால் அனுப்பப்படும் உளவறி பவர்கள் உளவறிந்து கொண்டு—வையப்பா சிலம்பை என்று என்னை நோக்கிச் சொல் வார். அப்படியே நான் சிலம்பை அவர்கள் எதிரில் வைத்தால், வந்து விடப்பா, உன்னேடு

வஞ்சியையும் அழைத்துக்கொண்டு என்பார்கள். உன் உடம்பு நையும்படி அடிபடு அப்பா என்பார்கள். தலையை நறுக்கிப்போடப், படு அப்பா என்பார் என்று அஞ்சிச் சொன்னான்.

பின்னும் வஞ்சியை நோக்கி, மடமையால் இத்தீய செயலைச் செய்துவிட்டோம்; என்பான். நாட்டு மக்கள் நம்மை மதிக்க மாட்டார்கள் என்று மனம் நைவான், உடைமையை (சிலம்பை) உடையவரிடம் கொண்டு போய்க் கொடுத்து எம்மை ஒன்றும் செய்யவேண்டாம். என்போம் என்பான். மடமட வென்று போய்ச் சிலம்பை எடுத்தான்; மீண்டும் அதை நோக்கினான். இதை மார்பில் அணைத்துக் கொண்டு என் வறுமை போக்கவந்த செல்வமே என்று கூறி மறுபடியும் அதை இருந்த இடத்தில் வைத்தான்.

மற்றும் தனக்குள் நினைக்கின்றான்—

நமக்குத்தான் இந்தச் சிலம்பு மிகப் பெரிது. வேந்தர்க்கு இது சிறு துரும்புதானே! ஆதலால் கட்டாயம் தேவை என்று அரசர் தேடிக்கொண்டிருக்க மாட்டார் என்று நினைப்பான்.

அரசியாரின் திருமங்கலத்தைப் பகுத்துணராமல் கவர்ந்துபோன பாவியைக் கண்டு பிடிக்க, பத்தாயிரம் பேர்களைப் போவீர்கள் என்று சினத்தால் தகத்தகவென்று ஆடுவார்; பல்லைத் தடதடவென்று கடித்துக்கொள்வார் வேந்தர் என்று நினைப்பான்—

என்பன இவ்வியலிற் காண்க.

ஐயப்பா டென்மீது கொள்ள வைத்தாய்
அரசர்விடும் உளவறிவோர் உளவறிந்தால்
வையப்பா சிலம்புதனை என்பார்; வைத்தால்
வந்திடப்பா வஞ்சியையும் அழைத்துக் கொண்டு
நையப்போ டப்படப்பா தலையைத் துண்டாய்
நறுக்கிப்போ டப்படப்பா என்பார் என்றான்
செய்யப்போய் நலமொன்றைத் தீயைப் போய்நீ
திருடிவந்தாய் வஞ்சிஎன்றான் வருந்தி நின்றான்.

நையப்போடப்படு அப்பா போடப்படு, அடிக்கப்படு.

போடு அப்ப என்பது போடப்பா எனப் புணர்ந்தது.

நறுக்கிப் போடப்படு அப்பா என்பதும் அப்படி.

செய்யப்போய் நலமொன்றை நலம் தோன் றச் செய்யப்போய். தீயை என்றது சிலம்பை.
போ ஏடி போடி மரூஉ,

மடமையினல் இச்செயலைச் செய்தோம் என்றான்
மக்கள்நமை மதியாரே என்று நைந்தான்
உடைமையினை உடையவர்பால் சேர்த்தே எம்மை
ஒன்றும் செய் யாதீர்கள் என்போம் என்றான்
மடமடென வேநடந்தான்; சிலம் பெடுத்தான்
மற்றுமதை நோக்கினன் மார்பில் வைத்தே
மிடி போக்கும் செல்வமே என்று கூறி
மீண்டுமதை இருந்தஇடம் தன்னில் வைத்தான்.

மடமை—அறியாமை. இச்செயல்—திருட்டுச் செய்கை.

மிடி—துன்பம்; வறுமை.

மிகப்பெரிது நமக்கெல்லாம் இச்சிலம்பு
வேந்தர்க்குச் சிறுதுரும்பே ஆதலாலே
அகத்தியமாய்த் தேடிடார் எனநினைப்பான்.
அரசியார் திருவடியின் மங்கலத்தைப்
பகுத்துணராப் பாவியினைத் தேடுதற்குப்
பத்தாயிரம் பேரைப் போவீர் என்று
தகத்தகெனக் குதித்திடுவார் வேந்தர்; பல்லைத்
தடதடெனக் கடித்திடுவார் எனநினைப்பான்

அகத்தியம் — இன்றியமையாதது; இதில் அகம் என்பது வேர்ச் சொல் திருவடியின் மங்கலம்—திருவடியின் நலம் செய்வதான சிலம்பு.

## இயல் 42

மற்றும் கருங்கை என்பான். சிலம்புக்காக நம்வீட்டையும் வந்து ஆராயக் கூடும் என்று வேலங்காட்டில் ஒருபால் புதைத்து வைத்தான் பின்னர் அந்த வேலங்காட்டையும் ஆராயக் கூடும் என்று சிலம்பை எடுத்துச் சென்று இடுகாட்டில் ஒரு பால் புதைத்துவைத்தான்.

நாட்டில் உள்ள எவர்களையும் உளவு காணும் நாட்டத்துடன் இப்படி உலவுகின்றார் என்று எண்ணி நடுங்குவான். தோட்டத்து வேலியினின்று வெளியில் எட்டிப் பார்ப்பான். கடைசியாகத் தொலைவில் பார்த்துக்கொண்டே தன் வீட்டுத் தெருக் குறட்டில் நிற்கும்போது அந்தத் தெருவில் ஆயிரம் பேர்களுக்கு நடுவில் செல்லும் ஓர் ஆணழகன், ஒரு சிலம்பும் கையு

மாக "இந்தத் தெருவில் இருப்பவர்களே, இதை வாங்கிக் கொள்வீரோ. சிலம்போ சிலம்பு" என்று கூறக் கேட்டான். நத்தை நிகர்த்த கண்களை உடையவனை அந்தக் கருங் கையன், ஐயா நம் அரசியலார்க்கு இதுதான் வேண்டும் நீவீர் வைத்திருக்கும் சிலம்பை என் னிடம் கொடுப்பீர். இந்தக் கோயில் வாயிலிலே நின்றிருப்பீர் என்று சொன்னான்.

அதற்குக் கோவலன் யார் நீவீர் என்று கேட்க, நான் இந்த அரசவையின் பழைய பொற் கொல்லன். என்பேர் கருங்கை! இந்த நாட் டின் அரசியார் தாம், இருக்கும் சிலம்போடு இன்னும் ஒரு சிலம்பு தேவை என்று நேரில் என்னிடம் சொல்லிவைத்திருக்கிறார்கள். அத னால்தான் நீர் என்னிடம் கொடும் என்று கேட்க லானேன். ஒரு நொடிப்போதில் அவர்களிடம் காட்டிவிட்டு திரும்பிவந்துவிடுவேன். நீர் உரைத்த விலையைப் பெறுவீர் என்று கூறிச் சிலம்பைப் பெற்றுக்கொண்டு போய்விட்டான். என்பன இவ்வியலிற் காண்க.

வீட்டையும்வந் தாராயக் கூடும் என்றே
வேலங்காட் டிற்சிலம்பைப் புதைத்து வைத்தான்.
காட்டையும்ஆய் வாரென்று சிலம்பைத் தோண்டிக்
கடிதோடி இடுகாட்டில் புதைத்து வைத்தான்.
நாட்டிலுள்ள எவர்களையும் உளவு காணும்
நாட்டத்தார் என்றெண்ணி நடுக்கம் கொள்வான்
தோட்டத்து வேலியினிற் எட்டிப் பார்ப்பான்
தொலைநோக்கித் தெருக்குறட்டில் நிற்கும் போதில்

தொலை—தூரம்

அத்தெருவில் ஆயிரம்பேர் நடுவிற் செல்லும்
ஆணழகன் ஒருசிலம்பும் கையு மாக
இத்தெருவில் இதுகொள்வீர் உள்ளீர் கொல்லோ
எழிற்சிலம்போ சிலம்பென்று கூறக் கேட்ட
நத்தைவிழிக் கருங்கையான் ஓடி "ஐயா
நம்அரசி யார்க்கொன்று வேண்டும்; நீவீர்
வைத்திருக்கும் சிலம்பினுடன் இந்தக் கோவில்
வாயிலிலே நின்றிருப்பீர்" என்று சொன்னான்.

ஆணழகன்—கோவலன். உள்ளீர் கொல்லோ—உள்ளீரோ—கொல் அசை,

யார்நீவீர் எனக்கேட்ட கோவ லற்கே
யான்இந்த அரசவையின் பழம்பொற் கொல்லன்;
பேர்கருங்கை; இந்நாட்டின் மன்னி யார்தாம்
பின்னுமொரு பொற்சிலம்பு தேவை என்று
நேர்என்பால் சொல்லிவைத்தார் அதனா லன்றோ
நீவிர்இதை வைத்திருப்பீர் என்று சொன்னேன்
ஓர்நொடியில் இதுசொல்லி மீளு கின்றேன்
உரைத்தவிலை பெறுவிர்என்று விரைந்து
சென்றான்.

கோவலற்கு—கோவலனுக்கு ஒருமை. அரசவையின் உறுப்பினர் என்று கோவலன் நினைத்துக் கொள்ளட்டும் என்று அரசவையின் பழம் பொற் கொல்லன் என்று புளுகி வைத்தான்.

பொற் கொல்லன்—பொன் முதலியவற்றால் அணிகலன்கள் செய்கின்றவன்.

## இயல் 43

பாண்டியனிடம் தோழிவந்து சொல்லலுற்ருள். "வேந்தரே! அன்னையார் வெப்பு நோய்க்கு ஆளானரோ என்றெண்ணி அவ் வெப்பம் தீர மருந்தளித்தேன். குளிர்ச்சி காட்டுகின்ற அவள் மேலுக்கும் மாற்றளித்தேன். அப்போதும் அன்னையின் துன்பத்திற்குத் தீர்வு காணேன். அன்னையே என்ன உங்கட்கு என்று கேட்டேன்', 'என்னை அடைந்துள்ள இந்த நோய் மனநோய் என்றன் தோழியே' செப்புக் குடத்திற்கும் இளநீர்க் காய்க்கும் கொங்கை நிகர்.

சேலுக்கும் வேலுக்கும் கண்கள் நிகர் என்று உரைத்த என் உடையவர் எவரிடம் கண்டார்? யானிருக்கையில் அவ்ளிடம் இவர்க்கு நாட்டம் எதற்கு?"

இவ்வாறு சொல்லி அன்னை அழுதாள். தேற்றினேன். தேறவேயில்லை. என்னை வெளியில் தள்ளி அறைக் கதவின் தாழிட்டாள். அன்றில் என்ருல் ஓர் அன்றில் அங்கே மற்ருென்று இங்கேயா, அருமையான உயிரும் பெருமைமிக்க உடம்பும் பிரிவ துண்டா இன்றைக்குத் தான் இந்தப் புதுமையைக் காணுகின்றேன் என்று சொன்னுள்.

அதற்குப் பாண்டியன் பகர்ந்தான்.

நான் பாட்டொன்று பாடினேன். எங்கே? என் அவையிலே. என் அவையிலே என்று? இன்று அப்போது என் அண்டையில் இருந்த ஒரு பாவாணர் கேட்டு இது ஒப்பற்றது நல்லது என்று. விரைவிற் சென்று என் மனைவியிடம் சொன்னர் இதற்காக ஒரு பழியைப் போட்டு

என்னைக் கொன்று விட்டாளே. புல்லை மலை யாக்குவது நல்லதாமா? பால் குடிக்கும் கன்றும் தம் தாயை மறக்கும். உணர்வானது பேரின்ப மாகிய அவளை மறவாது, என்று கூறினான் என் பது இவ்வியலிற் காண்க.

வெப்புக்கும் மாற்றளித்தேன்; குளிர்மை காட்டும்
மேலுக்கும் மாற்றளித்தேன் வேந்தே, அன்னை
எய்ப்புக்குத் தீர்வில்லை என்ன என்றேன்
இப்புக்க நோய்மனநோய் என்றன் தோழி
செப்புக்கும் இளநீர்க்கும் கொங்கை ஒக்கும்
சேலுக்கும் வேலுக்கும் கண்கள் ஒக்கும்
உப்புக்கும் துப்புக்கும் இதழ்கள் ஒக்கும்
ஊற்றுக்கும் சாற்றுக்கும் சொற்கள் ஒக்கும்

என்றுரைத்த என்உடையார் எவள்பால்
கண்டார்?
யானிருக்க அவளிடத்தில் இவர்க்கேன் நாட்டம்?
என்றிவ்வா றுரைத்தழுதாள் தேற்றத் தேருள்
எனைத்தள்ளி அறைக்கதவின் தாழும் இட்டாள்
அன்றில்களில் ஒன்றங்கே ஒன்றிங்கேயா?
ஆருயிரும் பேருடலும் பிரிவ துண்டா?
இன்றுதான் காண்கின்றேன் புதுமை என்றே
எழில்வேந்தர் வேந்தனிடம் தோழி சொன்னாள்.

வெப்பு—வெப்பம்.

மாற்று—மாற்றக் கூடிய மருந்து.

குளிர்மை—குளிர்ந்த தன்மை. மேல்—உட லின் வெளிப்புறம். எய்ப்பு—துன்பம்.

இப்புக்க நோய்—புக்க இந்நோய், புக்க—அடைந்த

செப்பு-செப்புக்குடம். இளநீர்-இளநீர்க்காய்.

உப்பு—சோற்றுப்பு. அது இனிய பொருளில் ஒன்று

துப்பு—பவழம்.

ஊற்று—புதுக்கருத்து.

சாறு—பழச் சாறு.

என்றுரைத்த என்னுடையார்—என்று இவ்வாறெல்லாம் உரைத்த என்னுடையவராகிய தலைவர்.

எவள்பால் கண்டார்?—எவளிடத்தில் அந்த உறுப்பு நலன்களையெல்லாம் கண்டு மயங்கினர்.

அன்றில்—ஆணும் பெண்ணும் இணைபிரியாதிருக்கும் ஒரு பறவை. இனம். ஒன்று பிரிந்தால் மும்முறை அழைக்கும். வராவிடில் விழுந்து சாகும்.

எழில்—அழகு.

பாட்டொன்று பாடினேன் அவைக்கண் இன்று!
பாங்கிருந்தார் தம்மிலொரு பாவாணர் தாம்
கேட்டொன்று நன்றென்று விரைவிற் சென்று
கிளிஒன்று மொழியார்பால் கிளத்த லானர்
போட்டொன்று கொன்றுளே என்னை மன்னி!
புல்லொன்று மலையாகச் செய்கின் றுளே.
ஊட்டொன்று கன்றும்தாய் தனை மறக்கும்
உணர்வொன்று பேரின்பம் மறவா தென்றுன்

பாட்டொன்று பாடினேன் அவைக்கண் இன்று என்பதை அவைக்கண் பாட்டு ஒன்று பாடினேன் என்று மொழி மாற்றி அமைத்துக் கொள்க, பாவணர்தாம் கேட்டு ஒன்று நன்று என்று—பாவாணர் கேட்டு; இது ஒப்பற்றது; நல்ல பொருள் அமைந்தது என்று.

கிளி ஒன்று என்பதில் உள்ள ஒன்று உவம உருபு. கிளிபோன்ற. போட்டு ஒன்று கொன்ருளே — ஒன்று போட்டுக் கொன்ருளே. இங்குள்ள ஒன்று — பழி! பழி போட்டுக் கொன்ருளே. கொன்ருளே — கொன்ருல் எப்படியோ அப்படிப்பட்ட தொல்லையைச் செய்தாளே.

ஊட்டு ஒன்று — பால் ஊட்டப் பெறுதல் அமைந்த ஒன்று—வினைத் தொகை. ஒன்றுதல் — அமைதல். உணர்வு ஒன்று — உணர்வாகிய ஒன்று. உணர்வு பேரின்பத்தை மறவாது என்பதால் உணர்வே பேரின்பம் என்பது பெறப் பட்டது.

## இயல் 44

இவ்வாறு பாண்டியன் நெடுஞ்செழியன் தோழியிடம் கூறித் தன் இருக்கையை விட்டு எழுந்து மற்றொருபால் பெற்றதான பெருங் கோயிலின்கண் அன்னை மன்னி கொண்டுள்ள உடலைத் தவிர்க்கச் செல்லும் போதில் "ஆண்டவரே தங்கள் கோயிற் சிலம்பொன்றைத் திருடியவன் அடியேனின் குடிலில் இருக்கின்ருன். அக்குடிலும் தொலைவிலுள்ளதன்று அண்மைத்தேயாகும். அந்தச் சிலம்பு அங்கே அவன் கையில் இருக்கின்றது" என்று கருங்கை சொன்ருன்.

அன்று மறைந்து இன்று வந்து சேருகின்ற காற்சிலம்பும் அரசியின் ஊடல் தீர்க்க ஏற்ற தாகும் என்று போய்க்கொண்டே காவலரை நோக்கி, அந்த ஆளைக் கொன்று அந்தச் சிலம் பைக் கொண்டுவாருங்கள்'' என்ருன்

அந்தக் காவலர்கள் பின் தொடரக் கருங் கைத் தீயன் கோவலனை நோக்கி மகிழ்ச்சியோடு கைகளை வீசிக்கொண்டே நடந்து போகின்ருன்.

அவ்வாறு போனவர்கள் கோவலனை அணு கினர்கள். அவர்களைக் கண்டு கோவலன் ஓடி விடக்கூடும் என்று கருதிய கருங்கையன் ''இவர் கள் அரசன் ஆணையால் சிலம்பு பார்க்க வந்திருக் கிருர்கள் என்று கூறி நிறுத்தினன்.

வந்த காவலர்கள் கோவலன் முகக் குறியை நோக்கிய பின் இவன் முகத்தில் கள்ளம் காண வில்லையே என்று கருதிச் சொன்னர்கள். அங் கும் சூழ்ந்திருந்த ஊர்மக்களும் கருங்கையானின் தலைவாங்கும் ஏற்பாட்டை அறிந்து கொண் டார்கள்.

பாண்டியன்நெ டுஞ்செழியன் தோழியின் பால்
இவ்வாறு பகர்ந்தேதன் இருக்கை நீங்கி
ஆண்டியன்ற பெருங்கோயில் மன்னி கொண்ட
ஊடலினை அகற்றுதற்குச் செல்லும் போதில்
ஆண்டவரே நும்கோயில் ஒருசிலம்பைத்
திருடியவன் அடியேனின் குடிலில் உள்ளான்
ஈண்டுளதே அக்குடிலும் அச் சிலம்பும்
இருக்கின்ற தென்றுரைத்தான் கருங்கைத் தீயன்

ஆண்டு — அங்கொருபால். இயன்ற — அமைந்த கட்டப்பட்ட. பெருங்கோயில்—காப்ப மைந்த மகளிர் இல்லம். பெருங்கோயில் மன்னி— பெருங் கோயிலிலுள்ள மன்னி. ஏழனுருபும் பயனும் உடன் தொக்க தொகை. நும்கோயில்— உங்கள் அரண்மனை.

அன்றுபோய் இன்றுவரும் காற் சிலம்பும்
அவள் ஊடல் நெருப்பணைக்க ஏற்ற தாகும்
என்றுபோய்க் கொண்டேதன் எதிரில் வாளால்
ஏவல்செயும் காவலரை நோக்கி "ஆளைக்
கொன்றந்தச் சிலம்புதனைக் கொணர்வீர் என்ருன்.
கோவலனை நோக்கியந்தக் காவ லாளர்
பின்தொடர முன்நடந்தான் கருங்கைத் தீயன்
பெருமகிழ்ச்சி உள் ஊரக் கைகள் வீசி.

நான் அவள் ஊடலைத் தவிர்க்கச் சொல்லும் சொற்களே அன்றி அன்று போய் இன்று வரும் காற் சிலம்பும் அவளுடல் நெருப்பு அணைக்க ஏற்றதாகும் என்பதில் உம்மை சிறந்து நிற்றல் காண்க. உள்ஊர—உள்ளத்தில் நிறைய. தன் கொள்கையில் வெற்றிகண்டான் கைகளை வீசி நடத்தல் இயல்பு.

கோவலனை அணுகினர் ; கருங்கைத் தீயன்
கோமானின் ஏவலால் சிலம்பு காணும்
ஆவலினல் இவர்வந்தார், காட்டும்; என்றே
அன்புரைபோல் வன்புரையை அமைத்துச்
சொன்னன்.
காவலரோ "கோவலனின் முகத்திற் கள்ளம்

காணவில்லை யேஎன்று கருதிச் சொன்னர்.
தாவலுற்ற ஊராரும் கருங்கை யானின்
தலைவாங்கும் ஏற்பாட்டின் நிலைய றிந்தார்

கருதி—ஆராய்ந்து.

## இயல் 45

கோவலன் முகத்தில் நல்ல குறி தோன்று கின்றதென்ருல் அது அந்த முழுத் திருடன் தனித் திறமையைக் காட்டுவதாகும். அவன் அகத்தில் உள்ள தீய குறியை அறிய வேண்டும். அதுதான் அவன் கையிலுள்ள சிலம்பு என இவ்வாறு கருங்கை கூற இவ்வுரையைக் கேட்ட ஊரார் எவரும் மேலோர்மேல் இவ்வாறு பழி சுமத்துதல் கொள்கையோ என்ருர்கள். அதே நேரத்தில் பகுத்துணர்தல் இல்லாத ஒரு கொடிய காவற்காரன் பட்டென்றுகோவலனை வெட்டி வீழ்த்திவிட்டான்.

அதனைக் கணட ஊரார் நடுங்குகின்ருர். மதுரையின் நலங்கள் அனைத்தும் கொலையுண்டு போயின என்று அவர்கள் நாணத்தில் ஒடுங்கு கின்ருர். கோவலனின் உடற் செந்நீர் ஊரில் ஆறு என ஓடுவது கண்டார். அந்தப் பாவி களைக் கொல்லுங்கள் கருங்கையைக் கொல்லுங் கள் என்ருர்கள் பலர். ஒருவன் என்னை விடுங் கள் என்று தன்னைப் பிடித்திருக்கும் ஊராரை நோக்கிச் சொன்னன். மற்றும் ஊராரிற் பலர்

வல்லவன், தான் வகுத்ததெல்லாம் வாய்க் கால் போலிருக்கிறது. அந்த வல்லான் வாய்மை

யினையும் கொல்லவல்லான் போலிருக்கிறது. இவ்வேந்தன் நல்லான்தான் என்று எண்ணி இருந்தோம். இவன் நடுவு நிலை கோணுதற்கு நாணுதவன், தொன்று தொட்டு வந்த ஆளும் திறம் இழந்துவிட்டான். மதுரையாகிய அன்னை இவனை சுமப்பாளா? பழிமூட்டையைச் சுமப் பாளா? செத்தான் கோவலன் என்பது உண் மைதான் என்ருலும் அவன், இந்த ஆட்சியைத் தொலைத்த பின்னும் இருப்பான் என்பது உண்மை.

—என்பன இவ்வியலிற் காண்க.

முகத்திலொரு நல்லகுறி தோன்றிற் றென்ருல்
முழுத்திருடன் தனித்திறமை அதுதான். அன்னேன்
அகத்திலொரு தீயகுறி உணர்தல் வேண்டும்.
அதுவன்ருே கையிலுள்ள காற் சிலம்பு !
மிகுத்திவ்வா றுரைத்த உரை கேட்டோ ரெல்லாம்
மேலோர்மேற் பழிசுமத்தும் நூலோ என்ருர்
பகுத்துணராப் பாவி ஒரு காவ லன்தான்
பட்டென்று கோவலனை வெட்டிச் சாய்த்தான்.

கோவலன் தனக்கே உரித்தான தனித் திற மையால் தன் முகத்தில் தோன்ற வேண்டிய தீய குறியை மாற்றி நல்ல குறியை ஏற்றிக் கொண் டான் என்று குறிக்க முகத்திலொரு...அதுதான் என்ருன். நூலோ=கொள்கையோ, நூல் — கொள்கை.

பகுத்துணரும் உணர்வு இல்லா...... தம்மிற் பல. காவற்காரர் சொன்னவற்றையும் எண்ணிப் பார்க்காமல் எடுத்தேன் கவிழ்த்தேன் என்று கோவலனை வெட்டி வீழ்த்திவிட்டான் என்பது.

பகுத்துணராக் காவலன் அங்கு அவற்றை உணரான். பட்டென்று கோவலனை வெட்டிச் சாய்த்தான் என்பதால் பெறப்பட்டது,

நடுங்குகின்றார் கொலைகண்டு மதுரை மூதூர்
நலங்களெலாம் கொலையுண்டு போனதென்றே;
ஒடுங்குகின்றார் நாணத்தில் உடம்பின் செந்நீர்
ஊர் ஆறாய் ஓடுவது கண்டார்; பல்லோர்
அடுங்கள்அப் பாவிகளைக் கருங்கை யானை
ஐயகோ என்றார்கள்! மற்றும் ஓர்ஆள்
விடுங்கள் எனைப் பழிதீர்ப்பேன் என்றான் தன்னை
விடாதிருந்த பல்லோரை நோக்கி ஆங்கே.

நாணத்தில் ஒடுங்குதல் - நாணம் மிகுதியாதல். மதுரை மூதூர்—மதுரையாகிய பழம் பதி. செந்நீர் — குருதி, அடுங்கள் — கொல்லுங்கள், விடுங்கள் எனைப் பழி தீர்ப்பேன் என்பானை விடாமல் பற்றிக் கொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கியே அவ்வாறு கூறினான்.

வல்லான் வகுத்ததெலாம் வாய்க்கால் போலும்.
வாய்மையினைக் கொன்றிடவும் வல்லான் போலும்!
நல்லான் தான் என்றிருந்தோம் வேந்தன் தன்னை!
நாணுதான் நடுவுநிலை கோணு தற்கே!
தொல்லாண்மை இழந்தானை மதுரை அன்னை
சுமப்பாளோ பழிமூட்டை சுமப்பாளோதான்!
இல்லான்தான் கோவலனே எனினும் அன்னோன்
இருப்பான் தான் இவ்வாட்சி தொலைத்த பின்னும்.

வல்லான்தான் என்பதிலும் கோவலன் தான் என்பதிலும் உள்ளதான் இரண்டும் அசை நிலைகள்; நீக்கிப் பொருள் கொள்க.

இருப்பான்தான். நல்லான்தான், இல்லான் தான் என்பவற்றில் தான் இரண்டும் தேற்றப் பொருள் தருவன. வல்லான் வகுத்ததெல்லாம் வாய்க்கால் போலும்—என்பதிலுள்ள போலும் என்ற சொற்போக்கால் வல்லான் வகுத் தான் என்ற காரணத்தால் அவன் வகுத்த வாய்க்கால் தகுதியுடையது ஆகிவிடாது என் பது பெறப்படும்.

தொல் ஆண்மை—பழய ஆளுந்தன்மை. திறமை இல்லாமற்றான் போனான் கோவலன் என்றாலும் அவன் இந்தப் பாண்டியனின் கொடுங்கோல் ஆட்சியை தொலைப்பான், தொலைத்த பின்னும் இருப்பான் என்பது இல் லான்தான் பின்னும் என்பதால் பெறப்படும்.

இவ்வாறு ஊரார் பலர் கூறினார்கள் என்க.

## இயல் 46

மன்றத்தில் இருந்த தமிழ்ப் புலவர் அனை வரும் கோவலன் கொலையுண்டு கிடப்பதை வந்து பார்த்து மனம் துடித்து மன்னவனுக்கு இருந்த சிறப்பெல்லாம் மறைந்தது என்றார்.

மற்றும் குறிஞ்சி, நெய்தல் முல்லை நிலத்துப் பெருமக்கள் தம் மனைவிமாரோடு ஒன்றாக மனம் ஒத்து, பொன் நெடுந்தேர் போன்ற கோவலன் சாய்ந்து கிடந்த ஒரு துன்பக் காட்சியைக் கண்டு,

தமிழகம் தென்றலுக்கும், செந்தமிழுக்கும் தாய் ஆகி இந்தச் சிறு செயற்கும் மடியேந்துவ துண்டோ? என்றார்கள்.

மற்றும் அது கண்ட நல்லோர் அன்பு நீர் பாய்ச்சி அறத்தை வளர்த்து மக்களில் உயர்வு தாழ்வகற்றி அதனால் ஏற்படும் துன்பம் இல்லாமல் தமிழ்ச் சான்றோர் பலரைப் பெற்று இந்த பழமையான உலகமக்களுக்கெல்லாம் ஒழுக்க நெறி காட்டி, தென்பு என்ற சொல்லுக்கே தென்னாட்டாரின் வீரம் என்பதையும், திறம் என்றாலே அறப்போர்த் திறமே என்பதையும் இன்பம் என்றால் மேலே சொன்ன இவைகளே என்பதையும் அருளிச் செய்த இத் தமிழ் நாட்டில் அறமே கண்டால் நாணத்தக்க படுகொலையா என்று கூறினார்கள்.

—மற்றும் பல சான்றோர்கள்

இவ்வுலகம் ஒரு மாணிக்கத்தை இகழ்ந்ததே. இந்த நாடு தான் பெற்ற புகழை இழந்துவிட்டதே, என்று மனம் பதைத்துப் பலரோடும் பல நாளும் பேசி வருந்துவார்கள்.

குழந்தைகளும் கோவலனின் உடல் வெட்டுண்ட கொடிய கனவே காணுவார் ஆனார் என்றால்

இந்த நாட்டில் முழங்குவன வீரமுரசு. கொடை முரசு, மணமுரசு என்ற மும்முரசு, அன்றி 'ஆட்சி முடிக' எனும் பெரு முழக்கமே என்றார்கள்.

—என்பன இவ்வியலிற் காண்க.

மன்றத்துப் புலவரெல்லாம் வந்து கண்டு
மனந்துடித்தார் மன்னவன்சீர் மறைந்த தென்றூர்!
குன்றத்து வாழ்மக்கள் நெய்தல் மக்கள்
குளிர்முல்லைப் பெருமக்கள் மனைமா ரோடு
ஒன்றொத்துப் பொன்நெடுந்தேர் சாய்ந் துடைந்த
ஒருதுன்பக் காட்சிகண்டு தமிழ கந்தான்
தென்றற்கும் செந்தமிழ்க்கும் தாயாய், இந்தச்
சிறு செயற்கும் மடி யேந்தல் உண்டோ என்றூர்

ஒன்றொத்து—ஒன்று ஒத்து ஒன்றில் ஒத்து-ஏழாவதன் தொகை நிலைத்தொடர். ஒன்றில் கொலைப்பட்ட இடத்தை கொலையுண்டானை பார்ப்பது என்பதான ஒன்றில், பொன் நெடுந் தேர் பொன்னுல் ஆகிய பெரியதேர் போன்ற வனை கோவலன். தாய் என்பதற் கேற்ப ஆதரிப்பதை மடியேந்தல் எனப்பட்டது.

அன்பென்ற நீர்பாய்ச்சி அறம்வ ளர்த்தே
அவனுயர்ந்தான் இவன்தாழ்ந்தான் என்ப தான
துன்பின்றித் தமிழ்ச்சான்றோர் பலரைப் பெற்றுத்
தொல்லுலகுக் கொழுக்க நெறி பயிற்று வித்துத்
தென்பென்றல் தென்னூட்டின் வீரம் என்றும்
திறம் என்றூல் அறப்போரின் திறமே என்றும்
இன்பென்றல் இவை என்றும் அருளிச் செய்யும்
எழில் நாட்டில் படுகொலையா என்றூர் நல்லோர்.

துன்பு - துன்பம் தொல்லுலகுக் கொழுக்க நெறி என்பதைத் தொல்லுலகுக்கு ஒழுக்க நெறி என்று பிரிக்க. தென்பு—தென் நாட்டாரின் வீரத் தனத்துக்கே சிறப்பாக வழங்கும் ஒரு காரணப்

பெயர் என்பதை இங்குக் காண்க. இன்பு— இன்பம்.

இன்பென்றால் இவை என்றும் - இன்பத்துக்குக் காரணம் எது என்றால் மேற்சொன்ன இவைகளே என்றும்.

இழந்ததுவே இவ்வுலகோர் மாணிக் கத்தை!
இழந்ததுவே இந்நாடு பெற்ற சீர்த்தி;
பழந்தமிழர் இவ்வாறு பதைத்தா ராகிப்
பல்காலும் பலரோடும் பேசி நைவார்
குழந்தைகளும் கோவலனின் உடல் வெட்டுண்ட
கொடுங்கனவே காணுவார் ஆனார் என்றால்
முழங்குவன மும்முரசா அன்றி ஆட்சி
முடிக எனும் பெருமுழக்கா என்றார் சான்றோர்.

இவ்வுலகு ஓர் எனப் பிரிக்க, சீர்த்தி-புகழ், பழந் தமிழர் என்பதில் பழமை இயற்கை அடை இனம் விலக்க வந்ததன்று. மும்முரசு=வீரமுரசு, கொடை முரசு, மணமுரசு.

## இயல் 47

மாதரி வையையிலே நீராடச் சென்றாள்: மதுரையினின்று அங்கு வந்த மாது ஒருத்தி தீதறியான் கோவலனும் அவன் நாட்டரசியின் சிலம்பைத் திருடியதாகத் தீயர் ஏதோ சொன்னார் என்று அரசன் கொலைபுரியச் சொல்லிவிட்டானும் ஊரெல்லாம் இதைப்பற்றிய இரக்கப் பேச்சுக்களைக் கேட்ட என் காதெல்லாம் இரங்குவன ஆயின என்றால் என் நெஞ்சம் கலங்குவதில் என்ன வியப்பிருக்க முடியும்?

வெட்டுண்டு கிடக்கும் அந்தக் கோவலனைக் காணுதற்கும், அதற்குக் காரணமாக என்ன நடந்தது என்றறிவதற்கும் எட்டுத் திசைகளிலும் அங்கங்கு உள்ளவர்கள் எல்லாரும் வந்துவிட்டார்கள். அவர்கள் கடல் போலத் தோற்றமளித்தார்கள். அவர்களால் திட்டுப் பெற்ருன் மன்னவன். அவ்வாறு திட்டியதன் இரைச்சலோ அந்தக் கடலின் இரைச்சலாயிற்று. நான் அங்குப் போய் முட்டுப்பட்டேன். பெருமக்கள் நெருக்கம் அப்படி. மனம் முறிந்துவிட்டது. நான்கேட்ட சேதி அப்படி.

இதுகேட்ட மாதரி தண்ணீரில் மூழ்கவில்லை. அவளின் அழுகையால் ஏற்பட்ட கண்ணீரில் தான் மூழ்கினள். விரைவாக இல்லம் சேர்ந்தாள். கண்ணகி அவளைப் பார்த்தாள். "நீவீர் நீராடற்கும் எண்ணவில்லையா? என்ன நேர்ந்தது? என்ன கேள்விப் பட்டீர்கள்! என்னை உடையவர்க்கு என்ன? அம்மா என் மனநிலை நலமிழந்துள்ளது. வருந்திக்கொண்டிருக்கின்றேன். சொல்லுங்கள்" என்ருள் அவள். அதற்கு மேலும் பேசும் ஆற்றலும் இல்லாதவள்

என்பன இவ்வியலிற் காண்க.

மாதரிதான் வையைநீர் ஆடச் சென்ருள்
மதுரையினின் றங்குவந்த மாதொ ருத்தி
தீதறியான் கோவலனும், நாட்டு மன்னி
சிலம்புதனைத் திருடியதாய்த் தீயோர் ஏதோ
ஓதியது கேட்டரசன் கொல்வித் தானும்
ஊரெல்லாம் இதுகுறித்த இரக்கம் கேட்கும்
கா தெல்லாம் இரங்குவன என்ருல் நான்உள்
கலங்குவதில் வியப்புண்டோ என்று சொன்னுள்

வையை—வையை ஆறு. ஓதியது—சொன்னதை. கொல்வித்தானும்—கொன்றானும் என்பதன் பிறவினை. ஆளைவிட்டுக் கொல்லும்படி செய்தானும் என்க. நான் உள்கலங்குவது-நான் உள்ளத்தில் கலக்கமடைவது.

வெட்டுண்ட கோவலனைக் காணு தற்கும்
வினையென்ன என்பதனை அறிவ தற்கும்
எட்டுண்டு திசையென்றால் அங்கங் குள்ளார்
எல்லாரும் வந்துற்றார் கடலைப் போல்வார்
திட்டுண்டான் மன்னவனே கூட்ட மக்கள்
செப்பியவை அக்கடலின் இரைச்சல் போலும்
முட்டுண்டேன் நான் மக்கள் நெருக்கத் தாலே!
முறிவுண்டேன் உளம், சேதி கேட்டே என்றாள்

வினையென்ன—வினைவு என்ன; கொலைக்குக் காரணமாக நடந்தவை என்ன.; என்ன—எப்படிப்பட்டவை.

எல்லாரும் வந்துற்றார் கடலைப் போல்வார்—எல்லாரும் ஒருங்கு வந்து சேர்ந்ததால் அக்கூட்ட மக்கள் கடலைப் போன்று இருந்தார்கள்.

திட்டு உண்டான்—வசை யடைந்தான்.

உளம் முறிவுற்றல்—உளம் மிக வருந்துதல்.

தண்ணீரில் மூழ்குமுனம் இதனைக் கேட்ட
தையலாள் மாதரிதான் அழுகை செய்த
கண்ணீரில் மூழ்கினாள்; விரைந்தாள் இல்லம்!
கண்ணகிகண் டாள் அவளை நீரா டற்கும்
எண்ணீரோ? என் உற்றீர்? யாது கேட்டீர்?

என்னுடையார் ஏதுற்ருர்? அம்மா என்றன்
உண்ணீர்மை நலமில்லை உழலு கின்றேன்.
உரைப்பிர் என்ருள் மேற்பேசும் ஆற்றல் அற்ருள்.

என் உற்றீர்—என்ன தீங்கு அடைந்தீர்கள் யாது கேட்பீர்—என்ன கேள்விப்பட்டீர்கள்.

உள்நீர்மை நலமில்லை—மன நிலைமை நன்ருயில்லை.

உழலுகின்றேன்—துன்புறுகின்றேன்.

உரைப்பீர் என்ருள் மேற் பேசும் ஆற்றல் அற்ருள்—மேலும் பேசும் ஆற்றலை இழந்தவளாகிய கண்ணகி உரைப்பீர் என்றவரைக்கும் சொல்லினுள்.

## இயல் 48

என்ன கேள்விப்பட்டீர் அம்மா என்று கேட்ட கண்ணகிக்கு மாதரி,

கோவலனின் கையில் வைத்திருந்த சிலம்பு பாண்டியனின் மனைவியின் சிலம்புதான் என்றும், அவன் அதைத் திருடினுன் என்றும் சொன்ன பொய்ச் சொல்லை நம்பி மன்னன் கொன்று போடச் சொன்னுன் கோவலனை.

என்று நான் நீராடச் சென்ற பொய்கைக் கண் மதுரை வாழ்வாள் ஒருத்தி அறிவித்தாள். அதுகேட்ட நான் நீராடவில்லை, உன்னிடம் வந்தேன். இந்தச் சேதியை நான் என் வாயால் உன்னிடம் உரைக்க லாயிற்று என்று தன்னெதிரில் வீழ்ந்த கண்ணகிமேல் தானும் வீழ்ந்தழுதாள்.

ஆ......ஐயோ என்று அரற்றி வீழ்ந்து கண்ணகி மயிலின் தோகை நிகர்த்த குழல் அவிழப்-பெற்றவளாய்ச்

சாவா என் அன்புக்கு? தமிழனென்று வாழ்வார் நல் வாழ்வு பெரும் பொருட்டுத் தமிழைக் காத்த பாண்டியர் வழியில் வந்தும் அறத்தைக் கொன்ருன் கோவா (அரசனு) மேலும் அவன் கொடுங்கோலன்.

ஒருவன் கோத்து முடிந்த சொல்லைக் கொண்டு கொலை செய்யச்சொன்னனு? அதற்கு என் அன்பர் செய்த குற்றம் என்ன?

ஓ, வானமே, காற்றே செங்கதிரே நீவீர் அறியாச் செய்தி ஒன்று இருக்கின்றதா சொல்லுங்கள்.

ஆம் ஆம் ஆம் அவன் அழிவான்! நாடும் தீயும் அறம் பிறழாத தீஎன் அன்பைக் கொன்ருனின் வாழ்வு போம்! ஆம்! ஆம்; புதியதல்லாத தமிழ்ப் பழங்குடியின் தலைக்குச் சூடிய மாமணி போன்ற என்னுடையானை, பழியாகிய மாசு துடைக்கக் கடவேன் என்று மாதரி ஐயை ஆகிய அங்கிருந்த மக்கள் ஆகியோரிடம் சொல்லிவிட்டுப் பூப்போன்ற அழகிய கையால் தன் முகத்தில் அறைந்து கண்ணகி சென்ருள்.

என்பன இவ்வியலிற் காண்க.

கைச்சிலம்பு மன்னியவள் சிலம்பே என்றும்
கள்ளம்செய் தான் அதனை என்றும் சொன்ன
பொய்ச்சொல்லை நம்பியே மன்னன் "கொன்று
போடச் சொன்னுன்செம்மல் தன்னை" என்றே

அச்செழுநீர்ப் பொய்கைக்கண் மதுரை
வாழ்வாள்
அறிவித்தாள். நீராடேன்; உன்பால் வந்தேன்;
இச்சேதி நானுரைக்க லாயிற் றென்றே
எதிர்வீழ்ந்தாள் மீது, மா துரியும் வீழ்ந்தாள்

மன்னன் கொன்று போடச் சொன்னுன் என்று மாதரி சொல்லும் போதே துயர் தாங்காமல் கண்ணகி தரையில் வீழ்ந்து விட்டாள் என்பதை எதிர் வீழ்ந்தாள் மீது மாதரியும் வீழ்ந்தாள் என்றதனுல் அறிக.

கைச் சிலம்பு—கோவலன் கையில் வைத்திருந்த கண்ணகியின் சிலம்பு.

கள்ளம் செய்தல்—திருடுதல். பொய்கைக் கண்—பொய்கை யிடத்தில்.

ஆஐயோ எனவீழ்ந்த கண்ண கிப்பேர்
ஆடுமயில் ; தோகைநிகர் குழல் விரிந்தே,
சாவாஎன் அன்புக்கு ? வாழ்வார் வாழ
தமிழ்காத்தார் வழிவந்தும் அறத்தைக்
கொன்ருேன்
கோவா ?அக் கொடுங்காலன் ? கோத்த சொல்லால்
கொலைசெய்யச் சொன்னனே? குற்ற முண்டோ?
ஓவானே ! காற்றே ! செங் கதிரே ! சொல்வீர்
ஒன் றுண்டோ நீவிர்அறி யாத செய்தி ?

கண்ணகிப்பேர் ஆடுமயில்—கண்ணகி என்னும் பேரையுடைய ஆடுமயில். தோகை நிகர் குழல்—மயிலின் தோகையை ஒத்த தலை மயிர்.

அவிழ்ந்தே — அவிழப் பெற்றது. கோத்த சொல்—இட்டுக்கட்டிய பொய்ச் சொல்:

ஆம்ஆம் ஆம் அவன்ஒழிவான் நாடும் தீயும்!
அறம்திறம்பா என்அன்பைக் கொன்ருன் வாழ்வு
போம்ஆம்ஆம் பொய்ஏற்பான் ஆட்சி அற்றுப்
போம்ஆம்ஆம் தமிழ்ப்பழங்கு டித்த லைக்கோர்
தூமணியைப் பழிமாசு துடைப்பேன் என்று
மாதரிஐ யைஇருந்தார் இடம் உரைத்தே
பூமணிக்கை முகத்தறைந்து மங்கை போனள்
புறத்திருந்தார் செயலற்று நின்றி ருந்தார்.

ஓ, வானே, காற்றே செங்கதிரே சொல்வீர் என்று சொல்லிய கண்ணகி, உடனே ஆம் ஆம் ஆம் அவன் அழிவான், நாடு தீயும் என்ற குறிப்பால் அவன் அல்லது செய்ததால் அழிவான், அவன் நாடு தீய்ந்துபோகும் என்னும் உணர்வு பெற்ருள் என்பது பெறப்படும். ஆம் ஆம் ஆம்—மெய் மெய் மெய் அடுக்குத் தொடர். ஆகும் என்பது ஈற்றல் அழிய ஆம் என்ருகும். பொருந்தும் என்பது பொருள். எனவே மெய் என்று ஆயிற்று. அறம் திறம்பா—அறநெறி பிசகாத. பூமணிக்கை—பூப் போன்ற அழகிய கை. புறத்திருந்தார்—புறத்து இருந்தார். மாதரி, ஐயை, மற்றுமிருந்த பொது மக்கள்.

## இயல் 49

தன் சிலம்பு ஒன்ருேடு இரண்டு கண்களின் (கண்ணீராகிய) கடல் ஓடி நானிலமெங்கும்

நிறையக் கண்டோர் அஞ்ச வழி பார்த்து எழுவகையாய்ப் பரவியுள்ள உயிரினங்களின் தொண்டுகள் நிறைந்த பத்துத் திசைகளையும் பஞ்சாக்கும் சினமுடைய நெற்றியின் நெறிப்பில் பறக்கும் எரியோடு மதுரைத் தெருக்கள் தோறும் பாண்டியனுக்கு நஞ்சாகவும், மக ளிர்க்கு அமுதாகவும் நான் கொலையுண்டவனின் மனையாள் என்ருள். மற்றும்,

எடுத்துவந்தது என் சிலம்பே அம்மை மாரே. எவள் சிலம்பையும் நாம் அறிவோம் அம்மமாரே. என் சிலம்பைத் தன் சிலம்பு என்று உரைக்கக் கேட்ட பாண்டியன் இரு துண்டாய் வெட்டச் செய்தான் என் துணையை. அம் மன்னனின் புன் செயலால் இந்த அமைதி யான உலகம் என்பதொரு பூவிலிருந்து ஓரிதழ் போனதன்றே.

என் துணைவன் பன்னாளும் பரத்தையுடன் வாழ்ந்தவன்; அதனால் செல்வம் அனைத்தையும் பறிகொடுத்தவன்; பின் என்னை அடைந்து என் சிலம்புகளில் ஒன்றை இந்நாளில் இங்கு விற்று இங்குப் பிழைப்பு நடத்த வந்தவன், இனத்தில் உயர்ந்ததான தமிழ்ப் பழஞ் சீர்க் குடியில் பிறந்தவன். என் வாழ்வை இனிமேல் துலக்கும் பொன் விளக்கை இரு துண்டாய்க் காணுவதோர் இடமும் இன்ன தென்று அறியேன் என்று கூறினாள் கண்ணகி. நாட்டினர் எல்லாரும் அவளைச் சூழ்ந்து கொண்டு நீ பட்ட துன்பம் யாம் பட்டோம் என்று கூறினர்கள். என்பன இவ்வியலிற் காண்க.

செஞ்சிலம்பே ஒன்ருேடி ரண்டு கண்ணின்
முந்நீர்போய் நானிலமே செறியக், கண்டோர்
அஞ்சுவான் ஆறுபார்த் தெழுவ கைத்தாய்
எட்டீகைத் தொண்டுவளர் திசைகள் பத்தும்
பஞ்சாக்கும் வெஞ்சினத்து நுதல்நெ றிப்பின்
பறக்கும்எரி யொடுமதுரைத் தெருக்கள் தோறும்
நஞ்சுபாண் டியற்கமுது மகளிர்க் காக
நான்காணீர் கொலையுண்டோன் மனையாள் என்ருள்

ஒன்ருேடிரண்டு—ஒன்ருேடு இரண்டு எனப் பிரிக்க. இரண்டு என்பதைக் கண்ணேடு சேர்க்க, முந்நீர் — கடல். நானிலம் — உலகு செறிதல் — நிறைதல். அஞ்சுவான் — அஞ்ச. ஆறு பார்த்து—வழிபார்த்து. எட்டு ஈகை— (1) வழக்கத்தால் ஈதல் (2) உரிமையால் ஈதல் (3) அச்சத்தால் ஈதல் (4) ஏமாற்றத்தால் ஈதல் (5) உவகையால் ஈதல் (7) வெகுளியால் ஈதல் (8) அவலத்தால் ஈதல். இவற்றில் ஏமாற்றத் தால் ஈதல் என்பது உன் தந்தை இறந்து நுண்ணுடம்போடு மற்ருேருலகில் இருக் கின்ருன், அவனுக்கு மன நிறைவு உண்டாக எனக்குக் கொடு என்றவனுக்கு ஈதல். அவலத் தால் ஈதல் என்பது—இறந்தானின் வழியினர் இறந்தார் பொருட்டு ஏற்படும் அவலத்தால் பல் வகையாலும் ஈதல். வெஞ்சினத்து—கொடிய சினத்தையுடைய. நுதல் — நெற்றி, புருவம் நெறிப்பின் — சினத்தால் ஏற்படும் சுருக்கம் நஞ்சு பாண்டியற்கமுது மகளிர்க்காக—நஞ்சு பாண்டியனுக்கு, அமுது மகளிர்க்கு ஆகத் தக்க அவள் சொல்லப்போகும் சொற்கள் பாண்டிய னுக்கு நஞ்சாகும் நாட்டு மகளிர்க்கு அமுதாகும்;

நாட்டு மகளிர் பாண்டியன் செய்த பெருங் குற்றத்துக்குத் தக்கவாறு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று எண்ணுவார்கள் ஆதலால் அவர்கட்கு அவன் சொன்ன சொற்கள் அமுதே யாகும்.

என்சிலம்பே எடுத்துவந்த தம்மை மாரே
எவள்சிலம்பும் நாமறியோம் அம்மை மாரே
என்சிலம்பைத் தன்சிலம்பென் றுரைக்கக்
கேட்டோன்
இருதுண்டாய் வெட்டுவித்தான் துணையை!
மன்னன்
புன்செயலால் இவ்அமைதி யுலகம் என்ற
பூஒன்றில் இதழ்ஒன்று போயிற் றன்றே!
தென்னாட்டு வாழ்வரசி எதிர்பார்க் கின்ற
திருவெல்லாம் வேரோடு சாய்ந்த தன்றே

என் சிலம்பே எடுத்து வந்தது அம்மை மாரே என்பதை எடுத்து வந்தது என் சிலம்பே அம்மைமாரே என மொழி மாற்றுக. நாம் அறியோம்—என்று உளப்பாட்டுத் தன்மைப் பன்மை, தன் கணவனையும் உட்படுத்தி நாம் அறியோம் என்றாள். தன் சிலம்பு—என்றது பாண்டியனை. மன்னி சிலம்பு மன்னன் சிலம்புதானே. வெட்டுவித்தான்—வெட்டும்படி செய்தான். இது வெட்டினான் என்பதன் பிற வினை. துணையை—கோவலன் வாழ்வரசி வாழ்க்கையின் அரசி; குடும்பத்தின் அரசி; கட்டுக் கழுத்தி என்றும் சொல்வதுண்டு வாழ்வரசி எதிர் பார்க்கின்ற திரு எல்லாம்—கணவனோடு வாழ்கின்ற ஒருத்தி எதிர் பார்க்கின்றவை

உடன் உறைதல் துணையாதல், இன்பந்தருதல் மக்களைப் பெறுவித்தல் முதலியவை.

பன்னாளும் பரத்தையிடம் வாழ்ந்தோன்; செல்வம்
பறிகொடுத்தோன் என்அடைந்தென் சிலம்பில்
ஒன்றை
இந்நாளில் விற்றிங்குப் பிழைக்க வந்தோன்
இனத்திலுயர் தமிழ்ப்பழங்கு டிப்பி றந்தோன்;
என்வாழ்வை இனித்துலக்கும் பொன்வி ளக்கை
இருதுண்டாய்க் காணுவதோர் இடமும் காணேன்.
என்னுமுன் கண்ணகியை எவரும் சூழ்ந்தார்—
யாம்பட்டோம் நீபட்ட துன்பம் என்றார்.

இனத்தில்—மக்கள் பிரிவில். உயர் தமிழ்—வினைத்தொகை, உயர்ந்த தமிழ். தமிழ்ப் பழங்குடி—உலகில் முதலில் தோன்றிய குடி. உலக மக்களில் முதலில் நாகரிகம் பெற்ற குடி என்க. அவன் இறந்து கிடக்கும் இடத்தை அறியாதிருக்கின்றேன் என்று குறிப்பிட்டாள் இருதுண்டாய் காணுவதோர் இடமும் காணேன் என்பதால். எவரும் சூழ்ந்தார்—கோவலன் கொலையுற்றது முதல் நாட்டு மக்கள் அதே கவலையாய்த் தெருக் களிற் கூடியிருந்தனர். ஆதலால் உடனே எவரும் சூழ்ந்தார் எனப்பட்டது. யாம் பட்டோம் நீ பட்ட துன்பம் என்றார்—என்பதை நீ பட்ட துன்பம் யாங்கள் பட்டோம் என மொழி மாற்றுக.

## இயல் 50

கண்ணகியை மக்கள் கோவலன் உடல் கிடந்த இடத்திற்கு அழைத்துச் சென்று—இடத்தை—நெருங்கும்போது புண் விளங்கும் அவ்வழகிய உடம்பைச் சூழ்ந்திருந்த கடல் போன்ற பெருமக்களில் ஒரு புலவன் அவ் வுடலின் அருகில் நின்றபடி—பாண்டியன் நெடுஞ்செழியன் மதிகேடன். கொடுங்கோலன் என்பதை மக்களுக்குக் காட்டுமொரு திண்ணிய நெஞ்சினன் இந்நாட்டில் எவனுமில்லை என்று எண்ணிச் செத்தாய் என்றான். மற்றொருவன் சொல்லுவான் :

பாதியுடல் கண்ணகிக்கும், உன்னுடைய மற்றொரு பாதியுடல் மாதவிக்கும் ஆக்கினாய் என்றால் இந்நாட்டில் புகுந்த சாதியை ஒழிப்பவன் வேண்டுமென்று அதற்காகத் தவங்கிடக்கும் தமிழகத்தின் குறை நீக்கச் செத்தாய் நீ.

இனிதான தமிழ்ப் பண்பாடு உயிர் என்கின்றவனே! தீது அறியாதவனே! பாண்டியன் உன்னைக் கொன்றான். ஆயினும் உன்றன் சாகாத புகழுடம்பால் அவன் சீரழிந்தான்.

இவ்வாறு அங்குச் சூழ்ந்திருந்த பெருமக்கள் பலவாறாக இறந்தவனுக்கு இரக்கம் காட்டினார்கள்; அறநெறிக்கே ஒவ்வாத பாண்டியனைப் பழித்தார்கள். அதே நேரத்தில், ஒதுங்கிடுக! வழிவிடுக! என்பதான ஓர் செம்மையான ஒலியின் நடுவிலிருந்து திருந்திய கற்புடையவள். சேல் விழிதான் கரிய முகில் குழல்தான் என்று காட்டும் அந்த இளைய கண்ணகி; கோவலனின்

அழகிய உடலின் மீது வீழ்ந்து புரளலானுள் என்பன இவ்வியலிற் காண்க.

கண்ணகியை அழைத்தேகி உடல் கிடந்த
காட்சியினைக் காட்டுதற்கு நெருங்கும் போதில்
புண்நகும்அப் பொன்னுடலைச் சூழ்ந்தி ருந்த
பொங்குகடல் மக்களிலோர் புலவன் நின்று
மண்ணகத்தின் தமிழரசன் பாண்டி யன்தான்
மதிகேடன் ; கொடுங்கோலன் ; என்று காட்டும்
திண்ணகத்தான் எவனுள்ளான் என்ப தெண்ணிச்
செத்தாய்நீ என்ருன்மற் ருெருவன் சொல்வான்

நெருங்கும் போதில் — உடலிருக்கும் இடத்தை நெருங்கையில். நகும்—விளங்குகின்ற பொன்னுடல்—அழகிய உடல். பொங்கு கடல் மக்கள்—பொங்குகின்ற கடல்போன்ற மக்கள். பொங்குதல்—கடல் முழக்கம்; மக்களிடம் அழு மொலிபோல; திண்ணகத்தான்—ஒருவருமில்லை என்று எண்ணிச் செத்தாய் நீ என்றது.

நான் உயிர் இழப்பதன் மூலமாகவாவது பாண்டியனின் தகுதியின்மையை மக்களுக்கு விளக்குகின்றேன் என்று செத்தான் என்பதை விளக்க.

பாதியுடல் கண்ணகிக்கும் மற்றும் உன்றன்
பாதியுடல் மாதவிக்கும் ஆனுய் என்ருல்
சாதிஒழிப் பான்ஒருவன் வேண்டு மென்று
தவங்கிடக்கும் தமிழகத்தின் குறைத விர்க்க
ஏதுடலம் எதுதொண்டு எவ்வா றுய்தல்?

இனிதான தமிழ்ப்பண்பா டுயிரே என்போய்
தீதறியாய்! மன்னனுனைக் கொன்ருன்! உன்றன்
சாகாத புகழுடம்பாற் சீர ழிந்தான்.

பண்பாடுயிர்—பண்பாடு உயிர். தவங்கிடத்தல்—ஒழுக்க நெறி நின்று முயலல்.

இவ்வாறு பெருமக்கள் பலவா ருக
இறந்தவனுக் கிரங்கலுற்ருர் அறநெ றிக்கே
ஒவ்வாத மன்னவனைப் பழித்தல் செய்தார்
"ஒதுங்கிடுக! வழிவிடுக" என்ப தாம்ஓர்
செல்வொலியின் நடுவினின்று திருந்து கற்புச்
சேல்விழிதான் கார்குழல்தான் என்று காட்டும்
அவ்விளைய கண்ணகிதான் கோவ லன்தன்
அழகுடலின் மேல்விழுந்து புரள லுற்ருள்.

செவ்வொலி—செவ்வையான ஒலி—பொருளுள்ள ஓசை. புரிகின்ற பொருளுள்ள ஓசை. அழகுடல்—பிணத்தை; பிணத்தில் அழகிருக்குமா எனில் இருக்கும். இருந்தானின் அழகை இருக்கையில் உற்று நோக்கி மகிழ்வதில்லை மனை மக்கள், பிறர் எவரும். ஆனல் இறந்தபின் ?

## இயல் 51

கோவலன் உடல்மேல் விழுந்தழுது கண்ணகி நான் என் செய்வேன் என் துணையே. வாழ்க்கை இன்பம் எனக்கு ஏது உண்டு. பொன்னைச் செய்யலாம், பொருளைச் செய்யலாம், சாதல் அடைந்து போய்விட்ட உன்னை

நான் இனியும் உண்டாக்கல் உண்டோ. அரசன் செய்த இக் கொலைத் தீர்ப்புக்கு முன்னமேயே மாண்ட ஒரு மாசில்லாதவனை மீண்டும் உயிர் பெறச் செய்தல் ஒன்று மட்டும் முடியாது என்று எண்ணியிருந்தால் இப்போது ஓவியம் போன்ற உன்னை இழப்பேனா என்றாள்.

கோவலன் இருக்கும் காலத்தில் அவன் முகத்தைக் காண்பாள். அப்போது அதை அவன் காண்பான் ஆதலால் நாணி அவள் பார்க்காமல் இருந்து விடுவாள். இப்போது இறந்து கிடக்கும் நிலையில் அவன் முகத்தைக் கண்டு கண்டு அம் முகத்தோடு தன் முகத்தை ஒற்றி அகத்திலுள்ள துன்பப் பெருக்கமே கண்ணீராகிப் பெருக்கெடுக்க அக் கண்ணீரால் அவன் முகம், கழுத்து, தோள்கள் முதலிய எல்லா உறுப்புக்களையும் தழுவி, அவன் காலின் நகம் கண்டு, கால் கண்டு, கைகள் கண்டு நடுக்கமுற்று அவன் விரலில் கண்ட கணையாழியில் சாய்ந்து விட்டாள். அவனுடைய நகம் சொன்ன கதை ஆழி சொன்ன கதை, பிற தோள் முதலியவை சொன்ன கதை அனைத்தையும் எண்ணி எண்ணி அரற்றலானாள்.........இன்னவைகள் தாம் நடந்தவைகள் என்று என்னிடம் சொல்லமாட்டீரா? ஏன் கொன்றான் என்பதையும் விளக்கமாட்டீரா? கன்னமிட்டவன் கொள்ளத் தக்க தீர்ப்புக்குக் காரணத்தை நானறிய உரைக்க மாட்டீரா? அந்த மன்னவனை நான் கண்டு நம் குடிக்கு வாய்த்த பழியைத் தீர்ப்பேன் என்று எண்ணவில்லையா? என்று இவ்வாறெல்லாம் சொல்லிக் கொண்ட கண்ணகியை நோக்கி இருந்த பெருமக்கள் நடந்தவைகளைச் சொல்லத்

தொடங்கினர்கள் என்பவை இவ்வியலிற் காண்க.

என்செய்வேன் என்துணையே? வாழ்க்கை தன்னில்
ஏதுண்டாம் எனக்கினிமேல்? இந்நி லத்தில்
பொன்செயலாம் பொருள்செயலாம் சாத லுற்றுப்
போனஉனை நான்இனியும் படைத்தல் உண்டோ!
மன்செய்த இக்கொலைத்தீர்ப் புக்கு முன்னே
மாண்டஒரு மாசிலனை மீண்டும் ஆக்கல்
ஒன்றுமட்டும் முடியாதே என்ப தெண்ணி
இருப்பானேல் ஓவியத்தை இழவேன் என்றாள்.

ஓவியத்தை—ஓவியம் போன்ற உன்னை, படர்க்கை முன்னிலையில் வந்தது. இழவேன்—இழக்கமாட்டேன். மாசிலன்—மாசு இலன் குற்றம் செய்யாதவன்.

முகம்காண்பாள் அவன்காண முகங்காணாள்
முகம்கண்டு முகங்கண்டு முகத்தை ஒற்றி
அகம்கண்ட துயர்ப்பெருக்கே கண்ணீ ராக
அகம்,கண்டம் முகம்,தோள்கள் தழுவிக் காலின்
நகம்கண்டு கால்கண்டு கைகள் கண்டு
நடுக்குற்று விரலாழி கண்டு வீழ்ந்தாள்
நகம்கண்டு சொன்னகதை ஆழி சொன்ன
நடந்தகதை எண்ணிஎண்ணி அலற லானாள்.

சாகாதிருந்தபோது அவன் முகத்தைப் பார்ப்பாள். அப்படிப் பார்ப்பதை அவன் பார்ப்பதால் முகத்தைப் பார்க்க மாட்டாள்.

அவள் இப்போது அவனுடைய முகம் கண்டு, முகம் கண்டு வருந்துகின்ருள். அகம் என்றது இங்கே மார்பை, கண்டம் என்றது கழுத்தை, மார்பு முதலியவைகளை மட்டும் சொல்லி இருந் தாலும் நெற்றி தலை உச்சி முதலிய உறுப்புகளை யும் கொள்க. நகம் கண்டு சொன்ன கதை யாவது :—நான் உன் மார்பில் புதைந்து வடுச் செய்தேன். அதை நீ காணும்போதெல்லாம் அன்புறுவாய் என்பது. மற்றும் தோள்கள் முதலிய உறுப்புக்கள் சொன்ன கதைகள் தெரிந்த கதைகளே.

இன்னநடந் தனவென்று சொல்லீர் போலும்!
ஏன்கொன்ருன் என்பதையும் விளக்கீர் போலும்!
கன்னமிட்டான் கொளத்தக்க கொடிய தீர்ப்பின்
காரணத்தை நானறியச் சொல்லீர் போலும்!
மன்னவனைக் கண்டுநான் நம்கு டிக்கு
வாய்த்தபழி தீர்ப்பேன்என் றெண்ணீர் போலும்
என்றுரைத்த கண்ணகியை நோக்கி ஆங்கே
இருந்தவர்கள் நிகழ்ந்தவற்றை உரைக்க லானர்.

இன்ன—பலவின்பாற் குறிப்பு வினையா லணையும் பெயர். சொல்லீர் போலும்—சொல்ல மாட்டீர் போலும்—அசை. விளக்கீர் போலும் முதலியனவும் அவ்வாறே கொள்க. கண்ணகி இவ்வாறு சொன்னதின் உட்கருத்து சொன் ஞல் நல்லதாயிற்றே. அவைகளையும் சொல் லாமற் போனீரே என்பதாம். ஆங்கே இருந் தவர் கண்ணகியை நோக்கி நிகழ்ந்தவற்றை உரைக்கலானர் என்பது வெளிப்படை.

# இயல் 52

நடந்தவற்றை மக்கள் சொல்லலுற்றது: அம்மையாரே உம் காற் சிலம்பு ஒன்றை இவர் (கோவன்) தெருத்தோறும் விலை கூறி வருகையில் கருங்கையன் என்பவன் "இப்படி ஒரு சிலம்பு வேண்டும் தேடுக என்று தன்னிடம் சொன்னதாய்ச் சொல்லித் தன் இல்லத்தின் எதிரில் கோயில் தெரு முன்றிலில் இருப்பீர் என்று இவரை இருக்கச் செய்து ஓடி அந்த மன்னனிடம், முன்னர் திருட்டுப்போன சிலம்பும் கையுமாக இருக்கின்றான் என்று சொன்னான்.

அப்பாவி அதைக்கேட்டு ஆராயாமல் அவனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருவீர் என்று கூறிவிட்டான். கருங்கையனும், காவலாளரும் வந்தார்கள். இவன் நல்லவன் எப்படி நாம் கொல்லுவது என்று சும்மா இருந்தார்கள். அப்போது கருங்கையன் இவன் திறமைமிக்க திருடன், ஆதலால் தான் நல்லவன் போல் நடிக்கின்றான் என்றான். அங்கிருந்த நாங்கள் அவர்க்கு ஊறு இழைப்பது சரியல்ல என்று சொல்லிக் கொண்டிருக்கையில் காவலர்களில் ஒரு முரடன் தன் வாளால் கொன்றுவிட்டான்.

அந்தக் கருங்கையன் யாவன்? — எனில் மன்னியாரின் கோவிலிலே அம்மன்னியில் சிலம்பைத் திருடி வந்த வஞ்சி என்பவளால் "என்னை மணந்துகொள்" என்று கெஞ்சப் பட்டவன். அவள் ஆசையினால் கருங்கையன் அச் சிலம்பை மறைத்துக்கொண்டு அச்சத்தால் அச் சிலம்புதான் இச் சிலம்பு என்றான் என்றார்கள்.

இதைக் கேட்ட கண்ணகி இறந்தவரே எழுந்து வந்து உரைத்தது என்று எண்ணிச் சென்றாள் என்பன இவ்வியலிற் காண்க.

அம்மையீர் உம்ஒருகாற் சிலம்பை ஊரி
னகத்துவிலை காணுகையில் கருங்கை என்போன்
நம்அரசி இவ்வாறென் றெனக்கு வேண்டும்
நாடுகெனச் சொன்னதாய்ச் சொல்லி இந்தச்
செம்மலினைத் தன்னில்லத் தெதிர்த்த கோயில்
தெருப்பக்கம் இருப்பீர்எனச் சொல்லி ஓடி
அம்மன்னர் இடம்,திருட்டுப் போன தான
அருஞ்சிலம்பும் கையும்ஆய் உளான்ஆள் என்றான்.

ஊரினகத்து—ஊரின் அகத்து, ஊருள். நம்மரசி என்று கூறிக் கோவலனை தன்னோடு ஒருவன் ஆக்கிக் கொள்கிறான் கருங்கையன் என்க. நாடுகென—நாடுகஎன, தேடு என்று. செம்மலினை—கோவலனை இந்த என்றது அங்குள்ள கோவலன் உடலைச் சுட்டியது. எதிர்த்த கோயில்—எதிரில் அமைந்துள்ள கோயில். உளான் ஆள்—இருக்கின்றான் அந்த ஆள்.

அப்பாவி அதுகேட்டே ஆரா யாமல்
அவற்கொன்று சிலம்புகொண்டு வருக என்றான்.
இப்பால்அக் கருங்கையன் காவ லாளர்
வந்தார்கள் காவலரும், "குறிநன் றுனர்
எப்படிநாம் கொல்லுவோம்" என இருந்தார்
கருங்கையான் "இவன்திருடன் திறமை மிக்கான்
தப்பாது கொல்க" என்றான் நாங்க ளுந்தாம்
சரியல்ல எனமறுத்தோம் அதேநே ரத்தில்

அவற்கொன்று — அவன் கொன்று என்று பிரித்துப் பொருள் கொள்க. இப்பால்—இவ் விடம். குறிநன்ருனர்—முகக் குறி நன்ருக அமை யப் பெற்றிருக்கின்ருர். என இருந்தார் — என்று கூறி சும்மா இருந்தார்கள். பாட்டு முடியவில்லை. அடுத்த பாட்டைத் தொடர் கின்றது.

காவலரில் ஒருமுரடன் வாளாற் கொன்ருன்
கருங்கையன் யாவன்எனில், மன்னி யாரின்
கோவிலிலே அவர்சிலம்பைத் திருடி வந்த
கொடுவஞ்சி மணந்துகொளக் கெஞ்சப் பட்டோன் ;
ஆவலினுல் கருங்கையன் அதைம றைத்தான்
அச்சத்தால் இச்சில்ம்பை அதுதான் என்ருன்
யாவும்இவை எனக்கேட்டாள் இறந்தவர்தாம்
எழுந்துவந்து ரைத்தவைஎன் றெண்ணிச்
சென்ருள்.

அவர் என்றது அரசியை உயர்வுபடுத்திப் பலர்பாலாற் சொன்னது. கொடுவஞ்சி — கொடுமையான வஞ்சி என்பாள். கொடுவஞ்சி மணந்து கொளக் கெஞ்சப்பட்டோன் —கொடு வஞ்சியால் "மணந்து கொள்" என்று கெஞ்சப் பட்டவன் ; கருங்கையன். எனக் கேட்டாள் இறந்தவர்தாம் எழுந்துவந்து உரைத்தவை என்று எண்ணிச் சென்ருள் — என்று மக்கள் சொல்லக் கேட்ட கண்ணகி இறந்தவரே (கோவ லனே) எழுந்துவந்து உரைத்தவைபோல நடந் தவை நடந்தவாறு தெரிந்து கொண்டேன் என்று நினைத்துப் போனுள்.

## இயல் 53

பாண்டியன் நெடுஞ்செழியன் மனையாளின் கோயிலிற்குப் பரிவோடு வருகை தந்தான். மன்னி அவனை நோக்கி "நாட்டு மக்கள் எங்கணும் கூடி நம்மைப்பற்றி இழிவான சொற்களைச் சொன்னார்கள் என்று கேள்வியுற்றேன். அவ்விடத்தில் நாம் உரைத்ததாகச் சொல்லும் அறத்திற்குக் கேடாயிற்றாம். கொலையுண்டான் மாண்புடையவன், குற்றவாளி அல்லன் என்றெல்லாம் மக்கள் வருந்துகின்றார்கள் என்றும் கேள்வியுற்றேன். மனநோய் அடைந்தேன்.

கொலையுண்டோனின் மனைவி ஒரு கற்புமிக்கவள் ; — இவ்வாறு கூறுகின்றார்கள். அந்த மங்கையின் உள்ளம் துன்பம் அடைந்தால் நம் நிலைமை என்ன ஆகும்? அறம் பிழைத்தார் யார் என்றன் உள்ளம் நிலைகலங்கலாயிற்று. அச்சம் என்ற நெருப்பினில் நானொரு புழுவானேன். இந்த நாட்டார் என்ற புலிவாயில் நம் வாழ்வு மானொற் போன்ற ஒரு மனத் தோற்றம் கொண்டிருக்கின்றேன்.

கோமகள்தான் இவ்வாறு கூறும்போது கோடி மக்கள் கூடிவர உடன் நடந்த கண்ணகி கையிற் சிலம்பு ஒன்றோடும், மடித்த இதழ், மேலேறிய புருவம் சேர்ந்த விழியினோடும், வேகின்ற மனத்தோடும் எம் குடியின் சீரை வீழ்த்தினேனும், என் துணையை வீழ்த்தினேனும், ஆகிய மன்னனின் தீமை மிகுந்த கோயில் எங்கே என்று கேட்டாள். என்பன இவ்வியலிற் காண்க.

பாண்டியனெ டுஞ்செழியன் மனைவி யின்பால்
பரிவோடு வருகைதந்தான் நாட்டு மக்கள்
ஈண்டினர் எங்கணுமே நம்மைப் பற்றி
இழிவுரைத்தார் என்றுநான் கேள்வி யுற்றேன்
ஆண்டுநாம் இட்டதென்று சொல்லும் தீர்ப்பும்
அறக்கேடே ஆயிற்ரும் கொலையுண்டானேன்
மாண்புடையான் ; குற்றமிலான் என்றெல் லோரும்
வருந்துகின்ரூர் என்பதையும் யுணர்ந்தேன்
என்ருள்.

பாண்டியன் நெடுஞ்செழியன் வருகை தந்தான் என்பதில் பாண்டியன் நெடுஞ்செழியன் எழுவாய். வருகை தந்தான் என அனைத்துமோர் சொல்லாகக் கொண்டால் அது பயனிலை. இல்லாவிடில் வந்தான் என்பதை பயனிலை என்றும், வருகை செயப்படுபொருள் என்றும் கொள்க. நாட்டு மக்கள் எனத் தொடங்குவது மன்னியின் சொற்கள். என்ருள் பயனிலை, மன்னி தோன்ரு எழுவாய். பரிவோடு—ஆசையோடு. ஈண்டினர் எங்கணுமே — எங்கணுமே ஈண்டினர் என மாற்றுக. ஈண்டினர்—கூடினர். இழிவு — இழிவான பேச்சு; ஆகுபெயர். ஆண்டு—அங்கு; தீர்ப்புரைத்த வழியில். நாம்—நீங்கள் என்றபடி.

கொலையுண்டோன் மனைவி ஒருகற்பின் மிக்காள்!
கூறுகின்ரூர் இவ்வாறு! மங்கை உள்ளம்
அலையுண்டால் நம்நிலைமை என்ன ஆகும் ?
அறம்பிழைத்தார் யார்வாழ்ந்தார் ? என்றன்
உள்ளம்

நிலைகலங்க லாயிற்றே? அச்சம் என்ற
நெருப்பிலொரு புழுவானேன் நாட்டார் கூட்டம்
புலிவாயில் நம்வாழ்வு மானே ஆறு
போலுமொரு மனத்தோற்றம் உடையேன்
என்றாள்.

அலையுண்டால்—துன்புற்றால் அறம் பிழைத்தார் யார் வாழ்ந்தார்—அறம் பிழைத்தவர்களில் யார் வாழ்ந்தார்? நாட்டார் கூட்டம் புலி— நாட்டார் கூட்டம் என்கின்ற புலி. மனத் தோற்றம் என்றது எண்ணத்தில் பட்டதை.

கோமகள்தான் இவ்வாறு கூறும் போது
கோடிமக்கள் கூடிவர உடன் நடந்த
மாமயிலாள் கையிலொரு சிலம்பி னோடும்
மடித்தஇதழ் எடுத்த நுதல் விழியி னோடும்
வெம்மனத்தி னோடும்,எம் குடியின் சீர்த்தி
வீழ்த்தினேன்; என்துணையை வீழ்த்தி னேனின்
தீமையுறு கோயிலெங்கே? என்று கேட்டாள்
சென்றவர்கள் ஓடிவர முன்வி ரைந்தாள்!

கோமகள் — பாண்டியன் மனைவி. மாமயிலாள் — அழகிய மயில் போன்றவளான கண்ணகி. விழியினோடும் என்பதிலுள்ள ஓடும் என்பதை மடித்த இதழ் என்பதனோடும் ஒட்டுக. எடுத்த நுதல் — மேலேறிய புருவம் அமைந்த. வேம்மனத்தினோடும்—வேம்—வேகும். ஈற்றயல் கு. கெட்டு வந்தது. நோகும்—நோம், போகும்— போம் எனப் பிறவும் காண்க. சீர்த்தி—புகழ், கோயில் — அரச மாளிகை. கோயில் எங்கே என்று கேட்டாள். சென்றவர்கள் ஓடிவர முன்

விரைந்தாள்—அரசன் கோயில் எங்கே என்று கேட்டு உடன் வந்த கோடி மக்கள் ஓடிவரும்படி அவ்வளவு விரைவாக முன் சென்றாள்.

## இயல் 54

அரியணைமேல் இருந்த பாண்டியன் நெடுஞ் செழியன் அரண்மனை வாயில் காப்போனைத் தன்னிடம் அழைத்து பெருமக்களின் கூட்டத் தோடு அவள் (கண்ணகி) வருவாள். உட்புக வேண்டும் என்று கேட்பாள். உடனே என்னி டம் வா. பொங்கிவரும் கடல்போன்ற அந்த மக்களுக்கு அஞ்சாதே! தணற் பிறம்பு போன்ற அந்தக் கண்ணகிக்கு அஞ்சாதே தான் வந்திருப் பதை அரசனிடம் புகல் (சொல்) என்பாள். அவ்வாறு என்னிடம் நீ வந்தால் நான் இடும் ஆணையில் தவறிவிடாதே. போ அங்கே என்று கூறினான். அப்படியே அப்படியே என்று வாயி லோன் போனான்.

பெருமக்கள் பின்னால் இருக்க முன்னே வந்து கண்ணகி பிழை செய்தான் கடை காக்கும் காவலோயே ஒரு சிலம்பும் கையுமாய் உயிர் போன்ற மணவாளரை இழந்த ஒருத்தி வந்துள் ளாள். இதை நீ போய்ச்சொல் என்று உரைக்கக் கேட்டு, அந்தக் காவற்காரன் ஓடிவந்தான்:

ஒருத்தி மட்டும் உள்ளே வருக. உரைபோய் நீ என்று மன்னன் உரைக்கவே ஓடிவந்தான் கண்ணகிக்கும் கூடி இருந்த பெருமக்களுக்கும் தொழுது எழுந்து, தாயே நீவீர் ஒருவர்மட்டும் உள்வரலாம். இது மன்னர் ஆணை! எழுந் தருள்க.

நாட்டவரே இது மன்னர் ஆணை. அதுவன்றி என் விருப்பம்போல் நடத்தல் நல்லதா என்றான். தொழுத காவற்காரனைக் கையமைத்து மக்கள் தம்மை கைதொழு தனியளாகப் பழுதுடையானாகிய பாண்டியனின் அவையின் நடுவில் பழுதில்லாக் கற்புடையாளாகிய கண்ணகி சென்று நின்றாள். என்பன இவ்வியலிற் காண்க.

சிங்கம்சு மந்திருக்கும் இருக்கை யின்மேல்
சேர்ந்திருக்கும் நெடுஞ்செழியன் கடைகாப் போனை
அங்கழைத்துப் பெருமக்கள் கூட்டத் தோடும்
அவள்வருவாள்; புகக்கேட்பாள்; என்னி டம்வா
பொங்கிவரும் கடற்கருஞ்சேல் தணலுக் கஞ்சேல்
புகல்என்பால் இடும்ஆணை தவறி டாதே
அங்கேசெல் என்றுசொன்னான் கடைகாப் பாளன்
அப்படியே அப்படியே என்றான் சென்றான்.

சிங்கம் சுமந்திருக்கும் இருக்கை—சிங்கம் சுமந்திருத்தல் போலத் தச்சுவேலை செய்யப் பெற்றதான இருக்கை. கடை காப்போன்—வாயில் காப்போன். அவள் வருவாள் — என்றது அவள் என்றால் கண்ணகி என்பதை முன்னமே அனைவரும் அறிந்திருந்தார் ஆதலால் புகக் கேட்பாள் — அரண்மனையினுள் புக உத்தரவு கேட்பாள். கடல் — மக்கள் கூட்டம். தணல்—கண்ணகி, ஆணை —கட்டளை. இவ்வாறு முன்கூட்டியே அரசன் கூறியதுகொண்டு கோடி மக்களுடன் கண்ணகி வருவதும் அவர் நோக்கமும் அரசன் தெரிந்துகொண்டிருந்தமை தெரிகின்றது.

பெருமக்கள் பின்னிருக்க முன்னேவந்து
பிழைசெய்தான் கடைகாக்கும் காவ லோயே
" ஒருசிலம்பும் கையுமாய் ஒருத்தி வந்தாள்
உயிர்போன்ருன் தனை இழந்த ஒருத்தி வந்தாள்
உரைபோய்நீ " என்றுகண் ணகி உரைக்க
ஓடிஞன் " ஒருத்திமட்டும் வருக உள்ளே
உரைபோய்நீ " எனமன்னன் உரைக்கக் கேட்டே
ஓடிவந்தான், கண்ணகிக்கும் மக் களுக்கும்

தொழுதெழுந்து " தாயேஎன் தாயே நீவீர்
ஒருவர்மட்டும் உட்செல்க மன்னன் ஆணை ;
எழுந்தருள்க! நாட்டவரே மன்னன் ஆணை
என்விருப்பம் போல்நடத்தல் நன்றே" என்ருன்
தொழுதானைக் கையமைத்து மக்கள் தம்மைத்
தொழுதுகை கண்ணகிதான் தனிய ளாகப்
பழுதுடையான் பாண்டியனின் அவையின் நாப்பண்
பழுதில்லாக் கற்புடையாள் சென்று நின்ருள்.

கண்ணகி உரைக்க (அரசனிடம்) ஓடிஞன் என்றது அவன் அச்சத்தை. கண்ணகிக்கும் மக்களுக்கும் தொழுதெழுந்தான் என்றதால் கடை காப்போன் தான் உயிர் தப்பியதாய் உணர்ந்தான் என்பதாயிற்று, நாப்பண்-நடுவில்.

## இயல் 55

அவை நடுவில் வந்து நின்ற கண்ணகியை மன்னன் நீ சொல்வது என்ன என்று கேட்க அதற்கவள் என் ஒரு சிலம்பினை விலை கூறி இங்கு வந்தானை நீவிர் கொன்றது ஏன் என்று

மங்கை கேட்டாள். அதற்கு வேந்தன் இடர் செய்து திரியும் கள்வனை நான் கொல்லச் செய்தேன். மற்றப்படி என் சொங்கோல் செய்யத் தக்கது என்னதான் என்று மன்னவன் கேட்கக் கண்ணகி, சிலம்புபற்றி நீவீர் என்ன ஆராய்ந்தீர்? உம் செங்கோல்தான் எப்படிப் பட்டது. என்று கூறிப் பின்னும்

கள்வனை நீர் கண்டீரோ? விற்க வந்தவரின் கைச் சிலம்பை ஆராய்ந்தீரோ? மாசற்ற ஒருவன் விள்வு (சொல்வது) கேட்டீரோ? தீயவன் ஒருவன் விண்டதுவும் (சொன்னதுவும்) தக்கதென நினைத்திட்டீரோ? உள்ளுக்குள் நடந்தவற்றை நீவீர் தெரிந்து கொள்ளவில்லை. வாழ்க்கை இன்பத்தைக் கொள்ளும் ஒருத்தியும் அடைய ஒட்டாமல் என்னைக் கொண்டவனைக் கொல்வதுண்டோ என்று கூறி,

உம்முடைய சிலம்பைக் கொண்டுவரும்படி செய்வீர். என் சிலம்பு இதோ உள்ளது! என்று கண்ணகி கூறிய அளவில் மன்னன் தன் சிலம்பைக் கொண்டு வரச் செய்து அதை அவன் முன் வைத்தான்.

மாலை அணிந்தவரே! உம் சிலம்பினுள் இருக்கும் பரல்கள் என்ன? சாற்றுக என்று கண்ணகி கேட்க, எம் சிலம்பின் பரல் முத்து என்றான். என் சிலம்பில் இருக்கும் பரல் மாணிக்கம். பார்க்கப் போகின்றீர் என்றாள்.

என்பன இவ்வியலிற் காண்க.

என்னநீ சொல்வதென மன்னன் கேட்டான்
என்சிலம்பை விலைகூறி இங்குற் ருேனை
என்னநீர் கொன்றதென மங்கை கேட்டாள்
இடர்விளைக்கும் கள்வனைநான் கொல்வித்தேன். மற்
றென்னஎன் செங்கோல்தான் செய்யத் தக்க
தென்றுரைத்தான் மன்னன்தான்! மங்கை நல்லாள்
என்னநீர் ஆராய்ந்தீர் சிலம்பைப் பற்றி?
என்னநும் செங்கோல்தான் என்று கூறி

கள்வனைநீர் கண்டீரோ, விற்க வந்தோன்
கைச்சிலம்பை ஆய்ந்தீரோ மாசிலா தோன்
விள்வனைத்தும் கேட்டீரோ ஒருதீ யோன்தான்
விண்டதனை ஆயாமல் கொல்வீர் என்று
விள்வதுவும் தக்கதென எண்ணிட் டீரோ
விளைவுண்மை காணீரோ வாழ்க்கை இன்பம்
கொள்வாளும் கொள்ளாமல் செய்தீர் என்னைக்
கொண்டானைக் கொன்றீரே என்று கூறி

உம்சிலம்பைக் கொணர்விப்பீர் என்சி லம்பும்
உள்ளதிதோ! என்றுரைக்க மன்ன வன்தான்
வெஞ்சிலம்பைக் கொணர்வித்து முன்னே வைத்
தான்
வேந்தரே உம்சிலம்பின் பரல்கள் என்ன
அஞ்சாமல் சொல்களன்று மங்கை கேட்க
எம்சிலம்பின் பரல்முத்தே என்ருன் மன்னன்
வஞ்சமிலாக் கண்ணகிதான் என்சி லம்பின்
மாணிக்கம் பார்க்கப்போ கின்றீர் என்ருள்,

என்ன நீ சொல்வது என்பதை நீ சொல்வது
என்ன என மாற்றுக. இங்குற்ருேன்—இங்கு

உற்றேன்—இந் நாட்டில் வந்தோன்; கோவலன். என்ன நீர் கொன்றது என்பதை நீர் கொன்றது என்ன என்று மாற்றிப் பொருள் கொள்க? இரண்டாம் பாட்டில் விள்வு—சொல்லல் தொழிலாகு பெயர். வினவுண்மை—வினவு உண்மை; உண்மை வினவு. உண்மையாக நடந்தது. மூன்றும் பாட்டில் வெஞ்சிலம்பு—வேந்தனுக்குத் தீமை செய்வதால் என்க. பரல்—கலகல என்ன இன்னொலி செய்யச் சிலம்பினுள் இடப்படும் சிறு கற்கள், விதைகள். செல்வர்கள் கல்லும் விதையும் தள்ளி முத்தும், மணியும் பிறவும் இடுவார்கள். அவையும் பரல் என்றே சொல்லப்படும். பார்ப்பீர் என்ருள்—உடைக்கப் போகின்றேன். சிலம்பைப் பார்க்கப் போகின்றீர்கள் என்ருள் கண்ணகி.

விளம்புவீர்—சொல்லுவீர்.

## இயல் 56

அவையில் கொண்டுவந்து வைக்கப்பட்ட சிலம்பை நோக்கிக் கண்ணகி

என்னைப் பிரிந்தாய். என் துணைவன் கையிற் சென்ருய். மதுரையின் தெருக்களில் உலவினுய். உனைப் பிரிந்த என் துணைவனின் உயிரைப் போக்கும் பொருட்டு அரசன் அரண்மனையில் இருந்தாய்; என் மனப்புயலை எழுப்பினுய் மன்னன் மாட்சியில் ஒரு வடுவும் தோன்றச் செய்து விட்டாய். இனிதான என் சிலம்பே வா! வா! என்று கூறினுள். கூறி அரசனின் முகம் நோக்கிக் கூறலானுள்.

உம் சிலம்புதான் என்று கூறினீர் இச் சிலம்பை. அவ்வாறன்று இது என் சிலம்பு! என்று கூறிக்கையிலெடுத்துக் கீழே போட்டு உடைத்தாள். மாணிக்கங்கள் தோற்றமளித்தன.

அதன் பிறகும் நும் சிலம்பு—(அரண்மனைக் குரியது) கொண்டு வரச் செய்க என்றாள்; கொண்டு வரப்பட்டது. அதையும் உடைத்தாள். முத்துக்கள் தோற்றமளித்தன. அதன் பிறகும் தனது மற்றொரு சிலம்பையும் உடைத்து மாணிக் கங்கள் காட்டினாள்.

அது கண்ட பாண்டியன் மனமுடைந்தான்; ஐயையோ தீயவன் சொல்லைக் கொண்டு இந்தத் தீய தீர்ப்புக் கூறிவிட்டேன். கோவலனின் உயிரைப் பிரித்தேன். நானே கள்வன். கோவ லன் கள்வன் அல்லன். பழ நாட்டின் மன்னர் வழி வந்தேன். நாட்டை ஆளும்முறை தவறினேன். என்றான் இறந்தான்.

என்பன இவ்வியலிற் காண்க.

எனைப்பிரிந்தாய் என் துணைவன் கையிற் சென்றாய்
இம்மதுரைத் தெருவினிலே உலவி வந்தாய்
உனைப்பிரிந்த என் துணையின் உயிரைப் போக்க
ஊராள்வோன் அரண்மனையில் இருந்தாய் என்றன்
மனப்புயலை எழுப்பினாய் மன்னர் மன்னன்
மாட்சியிலே வடுவொன்றும் தோன்றச் செய்தாய்
இனிதான என்சிலம்பே வாவா என்றாள்
ஏந்தலவன் முகம்நோக்கிக் கூற லுற்றாள்.

தன் சிலம்பைக் கண்டவுடன் அதனை வர வேற்று அரசனை நோக்கிக் கூறத் தொடங்கி

னள் என்கின்றது இச் செய்யுள். ஊர்—நாட்டுப் பொது மக்கள். ஏந்தல்—அரசன்.

உம்சிலம்பென் றீர் இதனை என்சி லம்பே
என் றுரைத்தே அதைஎடுத்தாள் உடைத்தாள்
போட்டே
செஞ்சிலம்பின் மாணிக்கம் சிதறி மன்னன்
விழிக்கெதிரில் உருக்காட்டிச் சென்று வீழ
நும்சிலம்பே கொணர்கஎனக் கொண்டு டைக்க
நுறுங்காத வெண்முத்தும் சிதறப்—பின்னும்
கொஞ்சுகிளி கைச்சிலம்பும் போட்டு டைத்துக்
குண்டுமா ணிக்கங்கள் கண்டீர் என்ருள்.

உம் சிலம்பே என்றீர் இதனை என் சிலம்பே—என் துணைவரிடத்துப் பறித்த இச் சிலம்பை உம் சிலம்பு என்று சொன்னீர். அவ்வாறன்று இது என் சிலம்பேயாகும். உடைத்தாள் போட்டே—போட்டே உடைத்தாள். ஏ அசை. போட்டு உடைத்தாள் என்க. போட்டுடைத்தாள்—கீழே அடித்து உடைத்தாள். கல், உளி பாறை முதலியவற்ருல் உடைத்தல் உண்டு அவ்வாறன்று என்று காட்டவே போட்டு எனப் பட்டது. முன்பு காணப்போகின்றீர் என்றவள் உடைத்து வெளிப்படுத்திக் கண்டீர் என்று இறந்த காலத்தாற் சொன்னுள். அங்கு அரசன் வைத்த சிலம்பை இதுவும் உம் சிலம்பல்ல என் சிலம்பே என்ருள் எவ்வாறு கண்டுபிடித்தாள்? —தன் சிலம்பு தனக்குத் தெரியாதா?

முதலில் அச் சிலம்பை உடைத்தவள் பின்னும் அரண்மனையில் முன்னே இருந்த சிலம்பை ஏன் கொண்டுவரச் சொல்லி உடைத்துக் காட்டி

ளுள்? அரண்மனைச் சிலம்பு முத்துடையதே என்பதை அவையார்க்கும் அரசனுக்கும் காட்டு வதற்காக. அவ்வாறு காட்டாவிட்டால் அரண் மனைச் சிலம்பு மாணிக்கப் பரல் உள்ளதுதான், அரசன் மறதியாகச் சொல்லிவிட்டான். முத்துச் சிலம்பென்று என்றும் பிறகு சொல்லக் கூடு மன்ரூே? அன்றியும் அரண்மனைச் சிலம்பு முத்துச் சில்ம்பு என்பதைக் கண்ணகியும் தெரிந்து கொள்ள வேண்டுமன்ரூே. இனி, அரண்மனைச் சிலம்பையும் ஆய்ந்தாயிற்று. மற்றும் தன் கைச் சிலம்பை உடைப்பானேன். மாணிக்கச் சிலம்பு என் சிலம்பு என்றவள் தன்னுடைய தல்லா ததைத் தன்னுடையதென்று சொன்ளுள் என்று அவையத்தாரும் மன்னனும் நினைக்கக்கூடு மல்லவோ.

அதுகண்டான் பாண்டியன் தான் மனம்பி ளந்தான்
ஐயகோ ஐயகோ தீயன் சொல்லால்
இதுசெய்தேன் உயிர்பறித்தேன் நானே கள்வன்
யான்துணிந்த கோவலனே கள்வன் அல்லன்
முதியவெலாம் தம்மினுமோர் முதிய தென்னும்
முன்னுன தென்னுட்டின் வழிவந் தேமன்
பதைகாக்கும் முறைபிழைத்தேன் என்ருன் வீழ்ந்
தான்
பதைக்காமல் துடிக்காமல் இறந்து யர்ந்தான்.

அது கண்டான்—கோவலன் சிலம்பே நம் சிலம்பன்று என்னும் அது கண்டான்; கண் டான் பாண்டியன் தான்—கண்டவனுன பாண்டி யனே, மனம் பிளந்தான்—உள்ளத்தோர் பேர திர்ச்சி கொண்டான்; இது செய்தேன்— அன்மையில் இவ்வாறு தீர்ப்பளித்தேன், உயிர்

பறித்தேன்—கோவலன் உயிரைப் பறித்தேன், யான் துணிந்த—யான் கள்வன் என்று முடிவு செய்த, முதிய எலாம் — பாண்டிய நாடு தவிர மற்றச் சேர சோழ நாடுகளும், ஆரிய நாடும், கடலுக்கப்பால் அமைந்தவைகளும், முன்னை தென்னடு — கலை நாகரீகம், ஒழுக்கம் முதலிய வற்றில் முன்னே நிற்கும், தென்னுட்டின் வழி வந்த — தென்னுட்டு மக்களின் வழிவழியே வந்தே, மன்பதை காக்கும் முறை — மக்களைக் காக்கும் ஆட்சி முறையில், பிழைத்தேன்—தவறி னேன், என்ருன் வீழ்ந்தான்—என்று சொல் லிக் கொண்டே தரையில் வீழ்ந்தான்.

பதைக்காமல்—சாவு நேருமே என்று மனம் பதைக்காமல், துடிக்காமல்—சாக்காட்டுத் துன் பத்தால் உடம்பு துடிக்காமல், இறந்து உயர்ந் தான் — அவ்வாறு இறந்ததனுல் உயர்வு பெற் ருன். முறை பிழைத்தவன், உயிர் பறித்தவன் ஆகிய பாண்டியன் இறந்து உயர்வது எப்படி? அறிந்து செய்தானல்லன் தவறிச் செய்தான். அதற்கே அவன் உயிரைவிட்டான். பிழை உணர்ந்து வருந்துவதே போதும் அதன் மேலும் உயிர் விடுதல் உயர்வேயாகும். அது அவன் பெற்ற புகழேயாகும்.

## இயல் 57

ப.ாண்டியன் நெடுஞ்செழியன் இறந்தான் என்ருல், பாண்டியனின் உயிர் போன்றவளான திருவாட்டி உயிரோடு இருப்பதென்பது உ.ண்டோ? அவையிற் கூடியிருந்தோர் அனை வரும் இரங்கும்படி இறந்து போனுள்.

"நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது"

என்ற வள்ளுவர் சொல் காண்பீர் என்று அதற்கு எடுத்துக்காட்டு ஆனார்போலும். காதல் வாழ்வு என்பதற்கு இலக்கணம் காட்டிச் சென்றார் போலும்.

மாணிக்கப் பரல் இட்டும் பொன்னும் இன்னும் மணியிட்டும் பணிசெய்து முடித்துள்ள பாணியைக் கண்டோர் ஆணிப் பொன்னால் செய்த சிலம்போ என்று சொல்லும்படி வெண்கலத்தால் அழகுண்டாக்கச் செய்து முடித்த சிலம்பை வைத்துப் பாண்டியனின் செங்நெறியையும் அவன் மனைவி ஆகியோரின் உயிரையும் வென்று பின் மன்னனின் அவையை விட்டுப் பெருமை உடைய வாயிலுக்கு அப்புறத்தே என் என்ற பெருமக்கட் கடலை அடைந்தாள் கண்ணகி.

அங்கே கண்ணகி சொன்னது: என் மணவாளன் கள்வன் அல்லன் யானே கள்வன் என்று உயிர் பிரிந்தான். மன்னியும் உயிர் துறந்தாள் என்றால் என் மணவாளன் உயிர் பெற்று வந்துவிடுவானோ? அவன் இழப்பால் இனி நீங்கள் தான் இங்கு வாழமுடியுமா?

பாண்டியனெ டுஞ்செழியன் இறந்தான் என்றால்
பாண்டியனின் உயிர்போன்றாள் இருப்ப துண்டோ
ஈண்டினோர் இரங்கிடவே தானும் ஆங்கே
இறந்திட்டாள்! நத்தம்போற் கேடும் மற்றும்
ஆண்டுளதாம் சாக்காடும் வித்த கர்க்கல்
லாலரிது வள்ளுவனார் அருளும் இச்சொல்
காண்டிரென எடுத்துக்காட் டானார் போலும்
காதல்வாழ் வியல்காட்டிச் சென்றார் போலும்.

ஈண்டினேர்—அவையில் கூடியிருந்தவர்கள் நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும் வித்தகர்க்கல்லால் அரிது என்றது குறட்பா, மற்றும் ஆண்டு என்பவற்றைக் கூட்டியும் ஆகும் என்பதை ஆம் எனக் குறைத்தும் இப்பாட்டில் வந்துளது அடியளவு கருதி.

இக் குறட்பாவின் கருத்து : செல்வம் பெருகும் காலத்திற் போலவே மனத்துயரின்றிச் சாக்காடு அடைவதும் ஆற்றலுடையார்க்கன்றி மற்றவர்க்கு இயலாது என்பது. நந்துதல் என்பதே நந்தம் அது வலிந்து நத்தம் ஆயிற்று. பெருகுதல் என்று பொருள். வித்தகர்—ஆற்றலுடையவர், வள்ளுவனர் அருளும் இச் சொல்... இக் குறட்பா. இச் சொல் காண்டிர்—காண்பீர். என—என்று, எடுத்துக்காட்டு ஆயினர்—எடுத்துக் காட்டுவார்போல உயிர் துறந்தார், காதல் வாழ்வு இயல் காட்டிச் சென்ருர் போலும்—அன்றியும் காதல் வாழ்வினது இலக்கணத்தை உலகிற்குக் காட்டிச் சென்ருர் போலும். அது துணையின்றித் தனித்து வாழ ஒப்பாமை.

மாணிக்கப் பரலிட்டு பொன்னும் மற்றும்
மணியிட்டுப் பணியிட்ட பாணி கண்டார்
ஆணிப்பொன் னேஎன்னும் வெண்கலத்தின்
அழகான சிலம்பிட்டுப் பாண்டியன்தான்
கோணிட்ட நெறிவென்றும் அன்னேன் அன்பின்
கோமாட்டி உயிர்வென்றும் அவை அகன்றே
ஏணிட்ட வாயிலினின் றப்புறத்தே
என்என்ற பெருமக்கட் கடல் அடைந்தாள்

பணி இட்ட—வேலை செய்துள்ள, பாணி—தச்சுத்திறம். கோண் இட்ட — கோணுதலான,

நெறி—பாண்டியன் போக்கு. அவை அகன்று —பாண்டியனின் அவையை நீங்கி. ஏண்— பெருமை. என் என்ற பெருமக்கட் கடல்— கண்ணகி வெளியில் வரக் கண்டவுடன். என்— என்ன நடந்தது என்று ஆவலோடு வினவுகின்ற பெருமக்களாகிய கடல்.

என்நல்லான் கள்வனல்லன் யானே கள்வன்
என்றுரைத்தான் உயிர்பிரிந்தான் மன்னன் அன்பு
மன்னியுந்தான் உயிர்பிரிந்தாள் எனினும் என்றன்
மணவாளன் உயிர்பெற்று வருதல் உண்டோ
மன்னிறந்தான் ஆனாலும் அவன்வ ழக்கம்
மற்றரசின் துறைதோறும் படித லாலே
இன்னலினைச் செய்யாதோ அருமை மக்காள்
எவ்வாறு வாழுவீர் இனிமேல் இங்கே.

## இயல் 58

மற்றும் கண்ணகி கூறுகின்றாள்.

அரசனாகிய அவன் நாட்டின் பொதுச் சொத்தை இழந்து விடவில்லை. தன் தனிச் சொத்தை இழந்தவன். அந்த நிலையில் அவன் அரசனல்லன் ஒரு வழக்காளி முறையீட்டாளன் இவ்வாறாக.

ஒருதனி ஆள் தன் வழக்கைத் தானே தன் பால் சொல்லிக் கொள்வதும், தீர்ப்பையும் தானே கூறிக்கொள்வதும் முறையோ? அல்லது அரசனின் ஆட்டமெலாம் சட்டந்தானோ?

அரசர் அவையத்தார் படைத்தலைவர் அரசனுக்கே ஆட்கள் என்றால் அறம் என்ன ஆகும்?

அவ்வமைச்சர் முதலியவர்களை ஆதரித்து வருவது பொதுமக்களாகிய உங்கள் பணமா? அல்லது அரசனின் கைக் காசா? இந்த அமைச்சர் முதலியவர்களால் வேறொன்றும் முடியாது. அரசனின் அழிவு வேலைக்கே துணைபோக முடியும் என்றால் அமைச்சர் ஏன்? அவையினர் ஏன்? படைத்தலைவர் ஏன்? இவர்கள் நோக்கம் அரசரோடு கூடிக்கொண்டு பொறுக்கித் தின்பதா?

சமையப் பற்றோ தீயதான சாதிப் பற்றோ மற்றுள்ள தம் நலம் பற்றும் பற்றோ எந்தப் பற்றும் சிறிதும் இல்லாத தமிழ்ச் சான்றோர்கள் உதவியது சட்டம்.

இச் சட்டத்தில் உள்ளவாறே பொருந்தும்படி ஓர் எழுத்தும் தவறாதபடி ஆட்சியை நடத்திச் செல்பவன் எவனோ அவன் அரசன். இந்த ஆள் என் அருமையான துணையைக் கொன்று போட்டான். சட்டம் எங்கே? இவன் சட்ட நெறி நின்றான் என்பது எங்கே? என்பன இவ்வியலிற் காண்க.

அரசனவன் பொதுச்சொத்தை இழக்க வில்லை
அரசனவன் தம்பொருளை இழந்திருந்தான்
அரசனவன் அந்நிலையில் அரசன் அல்லன்
அரசனவன் வழக்காளி, தனியாள்! என்றால்
ஒருதனியாள் தன்வழக்கைத் தானே தன்பால்
உரைத்துக்கொள் வதும்தீர்ப்பும் தானே கூறி
அருந்துணையைக் கொல்வதும் முறையோ தீய
அரசன்விளை யாட்டெல்லாம் சட்டம் தானோ!

தன்பொருள்—காணுமற்போன தன் சிலம்பு. அரசனவன் அங்நிலையில் அரசனல்லன்—தனக்குரிய சிலம்பை இழந்திருக்கின்றேமே என்று அவன் எண்ணுவதான அங்நிலையில். தீய என் பதை விளையாட்டு என்பதோடு கூட்டுக. இப் பாட்டில் அறியத் தக்கவை. பொதுச் சொத்துக்கு அரசன் என்ற அலுவலை ஏற்றுக்கொண்டுள்ள ஒருவன் சொந்தக்காரன் ஆகமாட்டான். அரசன் என்பவன் ஒரு தனியாளும், அரசு என்ற பதவியும் உடையவன் தனிச் சொத்து என்பது இவ்விடத்தில். சிலம்பு. அதுபற்றி அவன் முயலும் முயற்சி தனிமுறையைச் சேர்ந்தது. தன் சிலம்பு பற்றிய வழக்கைத் தானே தீர்ப்பதாகப் புகுந்தது பிழை. அதற்குத் தானே தீர்ப்புக் கூறியது முறையல்ல என்பவை முதலியவைகள்.

அமைச்சர்கள் அவையத்தார் படைத்த லைவர்
அரசனுக்கே ஆட்களென்றால் அறம்என் னுகும்?
அமைச்சர்களை அவையினரை படைமே லோரை
ஆதரிப்ப தும்பணமா அவன்கைக் காசா?
அமைச்சர்களால் அவையினரால் படைமே
லோரால்
அழிவுக்கே துணைபோக முடியும் என்றால்
அமைச்சர்ஏன் அவையினர்ஏன் படைமே
லோர்ஏன்
அரசனெடு பொறுக்கித்தின் பதுவா நோக்கம்!

அவையத்தார்—அரசனுக்குக் கருத்துரைப் போரின் கூட்டம்; இவர்கள் மக்கள் நலம் கருதிப் பரிந்து பேசுவோர். படைமேலோர்—படைத் தலைவர்கள். படை: தேர்ப் படை,

யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை, என்னும் நான்கு பிரிவுடையது.

சமையப்பற் றேதீய சாதிப் பற்றே
தந்நலப்பற் றேமற்றும் எந்தப் பற்றும்
உமியளவும் இல்லாத தமிழ்ச்சான்றோர்கள்
உதவியது சட்டம்! அதில் உள்ள வாறே
அமையும்வகை ஓரெழுத்தும் தவறு வாறே
ஆட்சியினை நடத்துவோன் அரசன் ஐயோ
தமியேனின் அருந்துணையைக் கொன்று
போட்டான்
சட்டம் எங்கே சட்டநெறி நின்ற தெங்கே

தந்நலம்—தம் நலம், தமிழ்ச் சான்றோர் என்பதால் பன்மையாற் கூறப்பட்டது. சமையப் பற்றோ என்பதில் உள்ள ஓ எண்ணுப் பொருளது. பிறவும் அப்படி. பற்றற்ற தமிழ்ச் சான்றோர்கள் — மக்களின் பொதுநலம் கருதித் தொண்டு செய்யும் இல்லத் துறவிகள். தமிழரசர் காலத்தில் சட்டம் செய்பவர் இல்லத் துறவிகளே.

## இயல் 59

மேலும் கண்ணகி பேசுகின்றாள். அதன் தொடர்ச்சி வருமாறு :

அரசனது தீய ஆற்ல்களே சட்டமானால் அச்சட்டமே நாட்டில் பரவி இருக்குமானால் அவ்வரசனின் அதிகாரத் தோரணையே மற்றும் ஆளும் கூட்டத்தாரின் தோரணையானால் மதுரை வாழும் பெருமக்களே என் துணைவர் பெற்ற தீங்கைத்

தாமே நீவிரும் பெற்ருக வேண்டும். உங்கள் மனைவிமாரும் என்போலத்தானே மங்கலமிழக்க வேண்டும். காதலின்பத்தை இழக்க வேண்டும். என் நிலையை நோக்குங்கள். என் துணைவரை இழக்கப் பெற்றேன். இனி நான் பெறப்போவ தென்ன? பொன்னணி சுமக்கும் கேடு ஒன்ரு எனக்கு. கழுத்தில் அணிந்த பூமாலை ஒரு கேடா? — என்று கூறி அவைகளைக் களைந்து மின்னல் வீசியதுபோல் மேலே விட்டெறிந் தாள்.

இது கண்ட பெருமக்கள் ஆ ஆ இன்னும் என்ன நடக்குமோ என்று வருந்தினர்.

கண்ணகி என் இளமை ஏன்? என்று கூறித் தன் கூந்தலைப் புய்த்தெறிந்தாள்.

இது கண்ட பெருமக்கள் அம்மா எம் அம்மா எம் அம்மா என்று வேண்டிக் கெஞ்சுகின்றதை யும் சிறிதும் கண்ணகி கருதாமல், என் கண்ணு ளன் தனது வலது கையால் புணர்ச்சியின் தொடக்கத்திலேயே முதலில் ஏந்தும் இடது முலை விம்மல் எதற்கு? என்று அதனைப் புய்த்து எறிந்தாள். என்பன இவ்வியலிற் காண்க.

அரசனது விளையாட்டே சட்ட மானல்
அச்சட்ட மேநாட்டை ஆளு மானல்
அரசனவன் அதிகாரம் பரவல் ஆனல்
அந்தோஅந் தோஎன்ருன் அன்புமிக்க
பெருமக்காள் என் துணைவர் பட்ட திங்கே
பெறவேண்டும்! அவரன்பு மனைவி மாரே!
இருக்கின்றீர் என்போலும் மங்க லத்தை
இழப்பீரோ காதலின்பம்! இழக்க லாமோ!

மங்கலம் — என் கணவர் இருக்கின்ருர் என்ற ஒரு நன்னினைவு. என்போலும் மங்கலத்தை இழப்பீரோ என்றது-இழக்கக்கூடாமை குறித்தது. காதலின்பமோ இழந்தால் வாழ முடியாது என்பாள். காதலின்பம் இழக்கலாமோ என்ருள். விளையாட்டு—தீய நடத்தை.

அதிகாரம்—அதிகார தோரணை.

என்நிலையைப் பாருங்கள் என்து ணைதான்
இழக்கப்பெற் றேன்இனிநான் பெறுவ தென்ன !
பொன்னெனக்கும் ஒருகேடா கழுத்த ணிந்த
பூமாலை ஒருகேடா எனக்க ளைந்தாள்.
மின்னெனமேல் விட்டெறிந்தாள்! மேலும் என்ன
விளைந்திடுமோ எனமக்கள் ஆ,ஆ என்ருர்
என் இளமை ஏன்என்ருள் விரிந்த கூந்தல்
இழுத்திழுத்துப் புய்த்துப்புய்த் தேள றிந்தாள்.

பெறுவதென்ன—பெறுவது ஒன்றும் இல்லை என்றபடி, பொன்னெனக்கும் ஒரு கேடா என்றது விரற் கணையாழியை, பூமாலை— பொன்னில் பூப்போல் இயன்ற கழுத்தணி. பொன்னெனக்கும்—உம்மை இழிவு சிறப்பு, மின் என—மின்னல் என. கண்டோர் சொல்லும் படி. மேலும் என்ன விளையுமோ என்றது தற்கொலை செய்து கொள்ளக் கூடுமோ என்று எண்ணியதை.

அம்மாஎம் அம்மாஎம் அம்மா என்றே
அங்கைஏந் திப்பல்லால் கெஞ்சு வாரை
இம்மிஅவள் கருதவில்லை என்கண் ணுளன்
வலதுகையால் முதல்ஏந்தும் இடது கொங்கை

விம்மல்ஏன் எனஅதனைப் புய்த்தெ றிந்தாள்
வீறுகொண்ட மக்கள்எலாம் மதுரை தான்ஏன்?
வெம்மைசேர் அரண்மனைஏன் படைஏன் வீடேன்
அமைச்சகத்தின் தேவைஏன் என்றெ ழுந்தார்.

பல்லாற் கெஞ்சுதல்—பல்லைக்காட்டிக் கெஞ்சுதல்—இதைப் பல்லெல்லாம் கெஞ்சுதல் என்பார்கள். கருதவில்லை—மக்கள் கெஞ்சுவது பற்றிய அவர்கள் எண்ணத்தைக் கருத்திற் கொள்ளவில்லை. முதல்—தொடக்கத்தில். புணர்ச்சியின் தொடக்கத்தில் கொங்கை விம்மல்—புணர்ச்சிக் காலத்தில் ஏற்படும் உணர்வின் பயன், புய்த்தல்—இது பிய்த்தல் என வழங்கும் அது பிழை வழக்கு, வீறு—வேறு ஒன்று இணைகொள்ள முடியாத சினம். படை ஏன் வீடேன்—என்றதால் வீடு பாசறை என்க. என்று எழுந்தார்—என்று கூறித் தம் கருத்துப்படி வேலை தொடங்கினர்.

## இயல் 60

மன்னவன் கோயில் அடியற்று வீழ்ந்தது. மக்கள் இட்ட தீ அதன் அடியை எரித்ததால். நடுவிடத்தை எரித்ததால்.

ஊர் என்பதே இல்லை என்னும்படி தெருக்கள் அனைத்தும் எரிந்தன.

மடமடவென்றும் சடசடவென்றும் இருக்கும் நிலை கெட்டு வீழ்ந்தவை அனைத்தையும் எரியானது எரித்ததால் அங்கங்கு இருந்தவர், இருக்கின்றவர் ஓடியவர் அனைவரும் புகைந்து

எரிந்தார்கள். அவர்களில் பெரிய தனக்காரர் கூடப் பொரிந்து போனர்கள்.

நாடு எங்கே நகர் எங்கே இவை இருந்தன எங்கே என்பதற்குரிய அடையாளங்கள் எங்கே என்று ஆராயும் ஆராய்ச்சியாளர் இவை இருந்தன என்பது பற்றிய வரலாற்றைக் கேட்ட செவிகள்தாம் எங்கே என்னும்படி கேடு செய்யும் தணற்காடு. இவ்வாருகக் கண்ணகி புரட்சியை முன்னின்று நடத்து கின்றவர்கள், அமைச்சர் வீடில்லை. அவரும் தீர்ந்தார். மறவரில்லை, படைவீடில்லை. உச்சிக் குடுமிக்காரர் எவரும் இல்லை. அவர்கள் பிணங் கள் உறங்குவார்போல் காட்சியளிக்கக் கூடும் என்பதன்று; ஒரு மலை போன்ற சாம்பலையே காணலானர்.

யானை முதலியவுமில்லை. என்று கூறிச் சென்று கொண்டிருந்தார்கள். என்பன இவ் வியலிற் காண்க.

அறம்கொன்ற பாவிக்குத் துணையி ருந்த
அமைச்சனர் வீடில்லை அவரும் தீர்ந்தார்
திறங்காட்டும் மறவரில்லை படைவீ டில்லை
சிறிதுச்சிக் குடிமியினோர் எவரு மில்லை
உறங்கினர் போலிருப்பார் என்ப தில்லை
ஒருகுன்றச் சாம்பலாய்க் காணப் பட்டார்
முறஞ்செவிகள் முதல்யாவும் இறக்கக் கண்டார்
முன்னின்ற கண்ணிகிபு ரட்சிக் காரர்

பாவி—மனக்கோட்ட முடையவர். பாவு தல்—மனம் பொருள்களின்மேல் பரவுதல். பெயர் இறுதி நிலை. மறவர்—போர்

வீரர், சிறிது ஆகிய உச்சிக்குடுமியினோர் எனப் பட்டது, குன்றம்—மலை. முறம்செவி—யானை. புரட்சியை முன்னின்று நடத்துகின்றவர்—முன்னின்ற கண்ணகி புரட்சிக்காரர் எனப் பட்டனர்.

## இயல் 61

அம்மதுரையை விட்டுச் செல்லும் கண்ணகி இவ்வாறு சொல்லிக்கொண்டே செல்லுவாள். இருவராக நானும் என் கணவரும் மதுரையிற் புகுந்தோம். இன்று தனியாக நான் மட்டும் செல்லுகின்றேன், திரிகின்றேன். வஞ்சிக்கே (சேர நாடு) செல்வேன், அன்புடையானுடைய திருப்புகழில் எனக்கும் இடம்தேடிக் கொள் வேன். இருள் கொண்ட மதுரையில் அதற் குரிய வாயில் இல்லை. என் உடையானைச் சேருதற்குரிய வழியும் இல்லை. மகிழ்ச்சி நில வாத நாட்டில் பிறந்தாலும் இறந்தாலும் பெருமை இல்லை.

பிறந்தவர்கள் இறக்கும் வரைக்கும் துன் பமேயன்றி வேறில்லை. எனினும் பண்டைக் காலத்திலிருந்து ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத் திக்கு ஒருவன் என்று சிறந்து வாழும் தென்னாட் டுத் தமிழர் எவரும் மறந்தறியாத அறம் அன்பு வாய்மை ஆகியவற்றைக் கொண்டு,

வையத்துள் வாழ்வாங்கு வாழ்வாராயின் பிறந்தவர்கள் பெறக்கூடிய துன்பங்களைப் பெறு வதில்லை. அவர்களின் பிள்ளைகளும் அவ்வாறே.

உலகம் தோன்றிய காலமாகத் தமிழகத்தில் உருப்பெற்ற ஒழுகலாறுகள் நன்றாக நிலை

பெற்று வருவதால் ஒழுக்கம் என்பதே இது தான் என்று பன்னூட்டு மாந்தர் எல்லாரும் மேற்கொண்டார்கள். விளக்க முறுகின்ற அவ் வொழுக்கம்தான் உயிரினும் காக்கப் பெறுதல் வேண்டும் என்று கூறியருளினர் திருவள்ளுவர்.

எலியொத்தவர் எழுந்தாரேல் புலிகள் ஆவார்கள். எளியவரும் வலியவரால் இறத் தல் இல்லை என்பன இவ்வியலிற் காண்க.

இருவேமாய் இந்நகரிற் புகுந்தோம் அந்தோ
ஏகலுற்றேன் இதைவிட்டுத் தனியள் ஆகத்
திரிகின்றேன்; வஞ்சிக்கே செல்வேன் அன்பன்
திருப்புகழில் எனக்கும்இடம் தேடிக் கொள்வேன்
எரியுண்ட மதுரையிலே வாயில் இல்லை.
என்னுடையான் தனைச்சேர வழியு மில்லை.
பெருமகிழ்ச்சி உ.லவாத நாட்டில் யாரும்
பிறந்தாலும் இறந்தாலும் பெருமை இல்லை

இருவேம்—இருவராகிய யாம், திரிகின் றேன்—இன்ன இடம் செல்வதென்னும் உறுதி யில்லாமல் திரிகின்றேன். வஞ்சிக்கே செல் வேன்—வேறு வழியில்லாமல் சேர நாட்டுக்கே செல்வேன். எரியுண்ட மதுரையில் என் அன் பனை அடைதற்குரிய வாயில் இல்லை. வழியு மில்லை. நிலவுதல்—பொருந்தி மேம்படுதல். எரியுண்டுபோன மதுரையிலிருந்து நான் என் அன்பன் அடைந்த புகழை அடையவேண்டு மானல் அப்புகழ் தொடங்கப் பெறுவதுமில்லை, தொடக்கம் அடைந்தாலும் நீடிப்பது முடியாது என்பாள். எரியுண்ட மதுரையிலே வாயிலில்லை சேர வழியுமில்லை என்ருள். பின், பெரு

மகிழ்ச்சியில்லாத நாட்டில் பிறத்தலும், சாதலும் பெருமை தரா என்பதையும் நோக்குக.

பிறந்தவர்கள் இறக்கும்வரை பெறுவதெல்லாம்
பெருந்துன்பம் என்றாலும் பண்டு தொட்டே
சிறந்தொருவற் கொருத்திஒருத் திக்கொருத்தன்
எனவாழும் தென்னாட்டுத் தமிழர் யாரும்
பிறந்தறியா அறம்அன்பு வாய்மை கொண்டு
பேருலகில் வாழ்வாங்கு வாழ்வா ராயின்
பிறந்தவர்கள் பெருந்துன்பம் அடையார் அன்னோர்
பிள்ளைகளும் துன்பமே பெறமாட் டார்கள்.

பண்டுதொட்டே — பண்டைக்கால முதற் கொண்டே, அன்னோர்—அவர்களின்.

உலகுதொடங் கியநாளாய்த் தமிழ கத்தில்
உருப்பெற்ற ஒழுகலா றுகள்தாம் நன்றே
நிலைபெறலால் ஒழுக்கமெனல் இதுவாம் என்றே
நீணிலத்து மாந்தரெல்லாம் மேற்கொண் டார்கள்
இலகுமிவ் வொழுக்கந்தான் உயிரின் மேலாய்
எண்ணியே ஓம்பிடுக என்றார் தேவர்;
எலியானார் ஒழுக்கத்தால் புலிகள் ஆவர்
எளியாரும் வலியாரால் இறப்ப தில்லை

ஒழுகலாறுகள்—நடந்துகொள்ளும் முறைகள். நீணிலத்து மாந்தரெல்லாம்—பன்னாடுகளிலுமுள்ள மக்கள் எவரும், இலகும்—விளக்கமுறுகின்ற. மேலாய்—என்பதிலுள்ள, ஆய் ஆக என்பதின் திரிபு. ஆய்-செய்தேன் வாய்ப்பாட்டு வினையெச்சம் ஆக-செயவெனெச்சம். இவ்வாறு வருவன வந்தன. எலியானார் ஒழுக்கத்தால்

புலிகள் ஆவார்—எலிபோலும் ஆற்றலிலாத வரும் ஒழுக்கந்தவருர் ஆயினல் அவர்களே புலிகள் போல் ஆற்றல் மிக்கவர் ஆவார்.

## இயல் 62

மதுரையிலே எரிமூளும் முன்பே சிலர் தீயமன்னன் இருக்கும் இம்மதுரை ஏன் என்று சோழ நாடு சென்ருர்கள். சிலர் இது நன்று என்று சேர நாடு சென்ருர்கள். இது காடல்ல தீதான ஆட்சி இல்லாததால் இது நாடுதான் என்று தங்கினர்கள் சிலர். பல இடங்களும் திரிந்தவர்கள் கடைசியாகச் சிலர் மிதித்த கிளையும் பிடித்த கிளையும் அற்று வீழ்வார் போல் தீயொழுக்கத்தால் விலகிவாழும் ஆரியர் ஊரில் சேர்ந்தார்கள்.

குன்றின் வாழ்க்கை விரும்பியவர்கள் அங் குச் சென்று தீயொழுக்கமேயுடைய நாகர் இவர் என்று திரும்பினர்கள்.

ஓட்டமுள்ள இந்த ஆறு காட்டாறு என்று கண்டும் சிலர் அங்கே குடித்தனமும் தொடங் கினர்கள்.

செந்தமிழராகிய நாம் காடாயினும், மேடா யினும் நலம் ஏறும் என்று கூறினர்போல அங்குத் தங்கியவர்கள் நாடோறும் செவ்வை யுற உழைத்து நலமே கண்டார்கள்.

தாயகம் மதுரை என்று சிலர் அதை விட்டு நீங்காதவராய்த் தணலிலேயே புகுந்திறந் தார்கள்.

தாயகம் என்பது மதுரை மட்டுமன்று. தென்னாடாகிய பொன்னாடு முற்றும் தாயகம் தான் என்று எண்ணியவர்கள் மதுரையிற் புகுந்த தீய்க்குத் தப்பிக்க சோனாடு முதலிய எவ்விடத்திலும் சென்று வாழலானார்கள் என்பன இவ்வியலிற் காண்க.

மதுரையிலே தீமூளும் முன்பே தீய
மன்னவனின் மதுரையேன் என்றகன்றார்
இதுநன்றே என்றாராய்ச் சேர நாட்டை
எய்தினர் மகளிர்சிலர் மக்கள் சில்லோர்.
எதுநாடு? தீதாட்சி இன்மை யாலே
அதுநாடே என்றுசிலர் சேர்ந்தார்; சில்லோர்
மிதித்தகிளை பிடித்தகிளை அற்றார் ஆகி
வீழ்ந்தார்கள் விலகிவாழ் ஆரி யர்பால்

என்றகன்றார்—என்று அகன்றார். இன்மை யாலே—இல்லாததால். மிதித்த கிளையும் பிடித்த கிளையும் அற்றவர்கள். வீழ்ந்து துன்புறுதல் போலத் தீயொழுக்கத்தால் விலக்க விலகி வாழும் ஆரியர் வாழும் சேரியிலே சென்று துன்புற்றார்கள் என்பது "மிதித்த.........ஆரியர் பால்" என்பதன் கருத்து.

குன்றேறி வாழ்ந்திடலாம் என்று சென்றோர்
குறுக்கினிலே திரும்பினர் தீயொ ழுக்கம்
ஒன்றேறும் நாகரிவர் என்று கண்டே!
ஓட்டாறு காட்டாறே எனினும் சில்லோர்
சென்றேறிக் குடித்தனமும் செய்ய லானார்.

செந்தமிழர் சேருமிடம் காடோ மேடோ
நன்றேறும் என்ருர்கள் போலும் சென்ருர்
நாடோறும் நன்றுழைப்பார் நன்றே காண்பார்.

குறுக்கில் — சென்றுகொண் டிருந்ததற்கு நடுவே, ஒன்று ஏறும்—ஒன்ருகக் குடியேறப் பெற்ற, நாகர்—தென்னகத்தில் முதலிலே குடியேறிய ஆரியர்; மலை வாழ்வோர். நாகம்—மலை. ஓட்டாறு—ஓடுதலுற்ற ஆறு. நன்று ஏறும்—நலம் மிகும். என்ருர்கள் போலும்—என்று எண்ணினர். நன்று உழைப்பார்—அற வழியில் உழைக்கக் கூடியவர். நன்றே காண் பார் — நலத்தையே அடையக் கூடியவர்கள்.

தாயகத்தை விட்டகல எண்ணூர் சில்லோர்
தாயகத்தில் மூள் தணலும் நன்றே என்று
தீயகத்திற் புகுந்தார்கள்! தாய கந்தான்
தென்னுடு பொன்னுடென் ருேர்தீத் தப்பிப்
போயடைந்தார் சோணுடு சேர நாடு
புறம்போக்கும் மலைநாடு யாண்டும் நன்றே
தூயானைத் துறந்திட்டுத் துயரில் மூழ்கித்
தோகையவள் என்ஆனுள் காண்போம் இங்கே.

எண்ணூர் சில்லோர் — எண்ணுதவராகிய சிலர். தணலில் எரிவது மதுரையாயினும் அது தாயகம் என்று அத்தணலில் சிலர் மூழ்கி இறந்தனர். மற்றும் சிலர் தாயகம் என்பது மதுரைமட்டுமன்று தென்னுடாகிய பொன்னுடு தாயகமே என்று எங்கும் சென்று குடியேறினர் கள் என்பன இப்பாட்டிற் காண்க. கண்ணகி நிலை என்ன இனிக் காண்போம் என்று முடிக்கப்பட்டது.

## இயல் 63

கண்ணகி தொல்லேயான வழிகளேயெல்லாம் கடந்து சேர நாட்டின் நெடுவேள் குன்றத்தின் நீழலடியில் வந்துற்ருள். அங்குத் தோன்றிய குன்றவாணரிடம் தான் பெற்ற துன்ப வரலாற்றைக் கூறி உயிர் விட்டாள். இது கண்ட குன்றவாணர் நடுங்கிப் பாண்டியன் வஞ்சத்தைத் தாம் அறிந்தவரைக்கும் அங்கு வேண்மாள் என்ற தன் மன்னியோடும், மதுரை ஆசிரியர் சாத்தனுரோடும் வந்திருந்த சேரன் செங்குட்டுவனிடம் கூற அவர்கள் மிகவும் வருந்தினுர்கள். குன்றவாணர் சொல்லியவற்ருேடு மற்ற வரலாற்றையும் கூறக் கேட்டான் மன்னன்.

மன்னன் தன் மனேவியாகிய வேண்மாள் என்பாளே நோக்கி அன்புடையவளே இது பற்றி உன் மனத்திற் பட்டதைக் கூறு என்ருன் என்பன இவ்வியலிற் காண்க.

கெண்டைவிழி ஊற்றுநீர் ஆறே ஆகக்
கிளிப்பேச்சும் அழுதழுதே ஒலிஇ ழக்கத்
தொண்டையினில் நீர்வற்றக் கால்க டுக்கச்
சுடுவெயிலும் படுகுழியும் வெள்ள நீரும்
கண்டையோ எனக்கதறிக் கதறித் தாண்டிக்
களேப்போடும் இளேப்போடும் சேர நாட்டில்
அண்டைநெடு வேள்குன்றின் வேங்கை நீழல்
அடிநின்ருள்; குன்றத்தார் வருதல் கண்டாள்.

கண்டையோ—கண்டு ஐயோ, தாண்டி—கடந்து, களேப்பு—மனவலி இழப்பு, இளேப்பு—

உடல்வலி இழப்பு, அண்டை—அருகு, நீழல் அடி—நிழலின் கீழ்.

நெஞ்சத்தே வழிந்துவரும் துன்பச் செய்தி
நெடிதுரைத்தாள்; நின்றிருந்தாள் வீழ்ந்தி றந்தாள்
நஞ்சொத்த நடுக்கத்தை நன்னீர் ஒத்த
இரக்கத்தை நண்ணினோர் ஆகித் தென்னன்
வஞ்சத்தை வேண்மாளோ டிருந்த சேர
மன்னவனும் செங்குட்டு வன்பால் சொன்னார்
கொஞ்சத்தை அழுதபடி கேட்ட மன்னன்
கொள்ளாத ஆவலுற்றான் பிறவும் கேட்க.

நஞ்சொத்த நடுக்கம்—நஞ்சுண்டார்க்கு ஏற்படுவதுபோன்ற நடுக்கம், நெஞ்சின் இளகலுக்கு நன்னீர் உவமை. தென்னன்—பாண்டியன்.

தொன்மதுரை ஆசிரியர் சாத்த னார்தாம்
தோன்றலொடு வீற்றிருந்தார் அறிவோம் என்று
முன்னடைந்த பிறவெல்லாம் கூறி நின்றார்
முடிதாழாக் குட்டுவனும் முடிதாழ்ந் தான்! அம்
மன்னியவள் வாடாத முகம்வா டுற்றாள்
மனமிரங்கி னார்இருவர் கண்ணீர் விட்டார்!
அன்புடையாய் உன்மனத்திற் பட்ட தென்ன
அறிவிப்பாய் எனக்கேட்டான் குட்டு வன்தான்.

தோன்றல்—செங்குட்டுவன், முடிதாழ்தல்—துன்பக்குறி. முகம் வாடுதலும் அது, அறிவோம்—நமக்குத் தெரியும் என்றபடி—தனித் தன்மைப் பன்மை. வாடுற்றாள். வாடு உற்றாள்; வாடுதல் உற்றாள். வாடினாள் என்க.

## இயல் 64

உன் மனத்திற்பட்டதைக் கூறுக என்று சேரன் செங்குட்டுவன் கேட்டானன்றோ? அதற்குச் சேரன் மனைவியாகிய வேண்மாள்.

கண்ணகி தனித்திருந்தாள் தலைவனாகிய கோவலனோ மாதவி வீடாகிய அயலிடத்தில் வாழ் நாளெல்லாம் கழித்தான்.

அந்த நிலையிலும் கண்ணகி தன்னைத்தான் காத்துக்கொண்டாள். அதன்பின் கண்ணகியுடன் இன்பமடைய வந்த கோவலன் தன் வறுமை கூறிக் கேட்டான் அழகிய சிலம்புகளையும்.

கேட்டபடி கண்ணகி கொடுத்து அன்பு மாறாத மனத்தோடு மதுரைக்கு அவனுடன் சென்று பாண்டியன் கோவலன்மேற் சொன்ன பெரும்பழிச் சொல்லைத் தீர்ப்பதன் மூலம் தன்னை மணந்தானைக் காத்தாள். தமிழர் குடியின் தொல் சீர்த்தியையும் காத்தாள். அதன் பொருட்டு வந்த அல்லல்கள் எண்ணி அயர்ந்துவிட வில்லை.

அதன்பின் அவன் இறந்ததற்காகத் தானும் இறந்தாள்.

பன்னாளும் கணவனோடு கூடி அடையத்தக்க இன்ப வாழ்வை அவள் பெற்றாளில்லை. தன் மணவாளன் ஒருநாள் படுகொலைக்கு உள்ளானான். ஆக அதற்குக் கண்ணகி துன்புற்றாளேனும் கோவலன் பெற்றதான தீய பழிச்சொல் நீடிப்பதைத் தடுக்க விரைவாகச் சென்று பாண்டியனிடம் வழக்கிட்டுத் தன்

சிலம்பால் அவனை வென்ருள். அவ்வாறு வென்றதாகிய அந்தத் திருநாளை வாழ்த்தாமல் தீர்ந்துவரும் நாள் சிறிது போதே ஆனுலும் அது தீய நாளேயாகும்.

முன்னைய நாளில் அரிய செயல் செய்த மகளிரின் உருவை அமைத்து இயற்றிய தச்சுத் திறம் பொருந்திய கல்லைக் கண்டு மகளிர் அடைந்ததே கற்பு என்று கடலில் மூழ்கியுள்ள குமரி நாடு இயம்பும் என்று பின் நாளில் நாம் அறிந்து வைத்தோம்.

கண்ணகியின் அரிய செய்கை, பிழை செய்யும் பிற நாட்டு மாதர்கள் கண்டு திருந்தும்படி தெற்குப் பகுதியிலுள்ள இந்த வஞ்சி நாட்டிலே வஞ்சியாகிய கண்ணகியின் திருவுருவம் அமைந்த கல் நாட்டுவது நன்ருகும் என்று கூறினுள்.

என்பன இவ்வியலிற் காண்க.

தனித்திருந்தான் தலைவனயல் வாழ்நா ளெல்லாம்
தன்னைத்தான் காத்துக்கொண் டாள்அ தன்பின்
இனிக்கவந்தே இல்லாமை சொல்லிக் கேட்டான்
எழிற்சிலம்பை! அளித்தேதன் அன்பு மாரு
மனத்தோடு மாமதுரை சென்றே வாய்த்த
மாப்பழிச்சொல் தீர்த்துமணந் தான்சீர் காத்தாள்
அனைத்துலகும் புகழ்தமிழர் குடிச்சீர் காத்தாள்
அல்லலெண்ணுள்; அவனிறந்தான் என இறந்தாள்

முதல் வரியை "தலைவன் அயல் வாழ்நாள் எல்லாம் தனித்திருந்தான் என" மாற்றிப் பொருள் கொள்க. அயல்—மாதவி வீட்டில்!

வாழ் நாள் எல்லாம் வாழும் நாட்களில்; வாய்த்த மாப்பழி—கோவலன் சிலம்பைத் திருடினுன் என்பது. மாப்பழி—பெரிய பழிச் சொல் ஆகுபெயர். "தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர் விலாள் பெண்" என்ற திருக்குறளைக் கண்ணகி ஒழுக்கம் ஒத்திருத்தல் இப்பாட்டில் காணப் பட்டது.

ஒருநாளும் பெறத்தக்க இன்ப வாழ்வும்
பெற்றறியாப் பொற்பாவை தன்மணுளன்
ஒருநாளில் படுகொலைக்குள் ளாகத் துன்பம்
உன்ருன்என் ருலும்,அவன் பெற்ற தீச்சொல்
வருநாளும் நில்லாமல் விரைந்து சென்று
வழக்கிட்டுப் பாண்டியனைச் சிலம்பால் வென்ற
திருநாளை வாழ்த்தாமல் இருந்த நாள்தான்
சிறுநாளே எனினும்அதுதீய நாளே.

நீண்ட காலமாகக் கணவனிடமிருந்து பெறத்தக்க இன்ப வாழ்க்கையைப் பெற்றறி யாத பொற்பாவை போன்ற கண்ணகி என் பாள் பெருநாளும் பெறத்தக்க—பொற்பாவை என்ருள், வருநாள் — அண்மையான எதிர் காலம்.

முற்கண்ட நாளிலெல்லாம் அரிது செய்த
மொய்குழலார் உருவெழுதி இயற்றும் தச்சுக்
கற்கண்டு பெற்றதுவே கற்பாம் என்று
கடல்கண்ட குமரிநா டியம்பும் உண்மை
பிற்கண்டோம். கண்ணகியின் அரிய செய்கை

பிழைகண்ட பிறநாட்டு மகளிர் காணத்
தெற்கண்டை வஞ்சியிலே வஞ்சி யாளின்
திருவுருவக் கல்நாட்டல் நன்றே என்றாள்.

முற்கண்ட நாளில்—முற்காலத்திலெல்லாம், அரிது—செயற்கரிய செயல், இயற்றும்—செய்கின்ற, தச்சுக்கல்—தச்சுத்திறம் பொருந்திய கல், கடல்கண்ட—கடல் விழுங்கிய, குமரி நாடு—இப்போது கடல் கொண்டுள்ள தென் பெரும் பரப்பு ஆன நாடு. குமரி நாடு ஏழ் தெங்கம் முதலிய நாற்பத் தொன்பது உள் நாடுகளை உடையது. தமிழ் பெற்று வளர்த்து உலகிற்கு நாகரீகம் சொன்னது. தெற்கண்டை—தெற்கு அண்டை, தெற்கில் அண்டை, ஏழனுருபின் பொருளது. வஞ்சி—சேரநாடு, வஞ்சியாள்—வஞ்சிக் கொடிபோன்ற கண்ணகி.

## இயல் 65

தன் குடிமக்களின் வறுமையை இழுத்துக் கட்டிச் சாகடித்து, வில்லின் நாணை இழுத்துக் கட்டித் தன் திறத்தால் வேற்று நாட்டுக் குடியைத் தன்பால் இழுத்து அன்பினால் கட்டித் தன்னாட்சியைக் காட்டத்தக்க கொடியைக் கம்பிக் கயிற்றை இழுத்து மேலே கட்டிய பாண்டியனைச் சீறித் தன் மடியை இழுத்துக் கட்டிக்கொண்டு மார்பின்மீது கச்சை இழுத்துக் கட்டிக்கொண்டு சென்ற கண்ணகியின் சீரை வாழ்த்தும்படி இழுத்துக் கட்டுவேன் உலகை என்று பனம் பூவை இழுத்துக் கட்டிய மாலை யணிந்த சேரன் சொன்னான்.

இல்லத்தில் பொருந்துவதான வாழ்க்கை இன்பத்தைக் கொடாது கோவலன் சொல்லில் உள்ள ஓரெழுத்தும் தள்ளாது நடக்கும் இளம் பெண்ணாகிய கண்ணகி, வெல், அல்லது மாள் என்று பாண்டியனிடத்தில், விலக்கென ஒன்று போக மற்றொரு சிலம்பில் ஒளி பொருந்திய மாணிக்கம் என்று காட்டி அவனால் தன் கணவன் பெற்ற ஓரிழுக்கை விலக்கிய கற்பின் தாயாகிய கண்ணகிக்கு கல் ஒன்று நாட்டு என்ற உன் சொல் ஒவ்வொன்றின் ஒரு காற் பகுதியும் கோடி பெறும். செல்லாது என்று கழிக்கப் பெறும் சொல் உன் சொற்களில் ஒன்றுமில்லை.

தெள்ளி வைத்த தமிழில் நல்ல கருத்தைத் திருத்திவைத்த சொல்லாளே பொன்னை உருக்கிப் புள்ளிவைத்த பச்சை மடமயிலே நீ புகழ்ந்த கண்ணகியை மறவேன் என்று கூறிச் செங்குட்டுவன் வெள்ளியாற் செய்த தேர்ப் படியில் கால் வைத்துத் தன் வேண்மாளை ஒளி பொருந்திய நெற்றியுடையாளை இனிய அமிழ்தை அள்ளிவைத்துச் (தேரை) செலுத்து என்றான்.

தன் கோவிலின் முன் தான் அணைத்து வைத்தபடியே அந்த வேண்மாள் என்னும் பொன்னை இறக்கி வைத்தான். என்பன.

—இவ்வியலிற் காண்க.

பிடியிழுத்துக் கட்டிச்சாக் காட்டில் தள்ளி
வில்லிழுத்துக் கட்டித்தன் திறத்தால் மற்றக்
குடியிழுத்துக் கட்டித்தூய் ஆட்சி காட்டக்
கொடியிழுத்துக் கட்டியதென் னவனைச் சீறி

மடியிழுத்துக் கட்டித்தன் மார்பின் கச்சு
வாரிழுத்துக் கட்டியகண் ணகிசீர் வாழ்த்தும்
படியிழுத்துக் கட்டிடுவேன் உலகை என்ருன்
பனையிழுத்துக் கட்டியபூந் தாரன் சேரன்

கண்ணகியின் திருவுருவக்கல் நாட்டுவது நன்று என்று மன்னி வேண்மாளை நோக்கி மன்னன் சொன்னது இது! மிடி—வறுமைத் துன்பம். சாக்காடு—சாவு, தூய் ஆட்சி—தூய ஆட்சி, தென்னவனை—பாண்டியனை. பனையிழுத்துக் கட்டிய பூந்தாரன் என்றதால் சேரனுக்கு பனைமாலை உரியதெனல் அறியப்படும்.

இல்ஒன்று வாழ்வின்பம் அளியான் சொல்லின்
எழுத்தொன்று தள்ளாத இளைய பெண்ணுள்
வெல்ஒன்று மாள்ஒன்று பாண்டி யன்பால்
விளைக்கொன்று போகமற் ருெருசி லம்பில்
எல்ஒன்று மாணிக்கம் காணக் காட்டி
இழுக்கொன்று காத்தாட்குக் கற்பின் தாய்க்குக்
கல்ஒன்று நாட்டெனும்உன் சொல்ஒவ் வொன்றின்
கால்ஒன்று கோடிபெறும் கழிவொன் றில்லை.

இல் ஒன்று என்பதிலுள்ள ஒன்று பொருந்திய என்று பொருள் படுவது, ஒன்றுதல்—பொருந்துதல். ஒன்று வாழ்வின்பம்—பொருந்திய வாழ்வின்பம். வினைத்தொகை நிலைத்தொடர். அளியான் - கொடாதவன்; கோவலன். எழுத்தொன்று தள்ளாது இருத்தலாவது—ஓரெழுத்தும் பிழையாமல் நடந்து கொள்வது. வெல் ஒன்று மாள்—என்னை வெற்றி கொண்டு வாழ்ந்திரு அல்லது தோற்று மாண்டுபோ, எல்—ஒளி. ஒன்று—பொருந்திய, இழுத்துக்

காத்தல்—இழுக்கினின்று காத்தல். இச்செய்யுளின் இல்லை, என்பது அடுத்த பாட்டினால் முடியும்.

தெள்ளிவைத்த தமிழினிலே நற்கருத்தைத்
திருத்திவைத்த சொல்லாளே பொன்னு லாகிப்
புள்ளிவைத்த பசுந்தோகை மயிலே நீதான்
புகழ்ந்துரைத்த கண்ணகியை மறவேன் என்று
வெள்ளிவைத்த தேர்ப்படியிற் கால்வைத் தேதன்
வேண்மாளை வாணுதலை இன்ன மிழ்தை
அள்ளிவைத்துச் செலுத்தென்றான் கோயி
லின்முன்
அணைத்துவைத்த படிபொன்னை இறக்கி வைத்
தான்.

வாள்நுதலை—ஒளிபொருந்திய நெற்றியை உடைய வேண்மாளை, வாணுதல்—அன்மொழித் தொகை. இன்னமிழ்தை—இனிய அமிழ்தை, அன்மொழித் தொகை, செலுத்தென்றான்—தேரைச் செலுத்து என்று தேர்ப்பாகனிடம் சொன்னான். கோவில் — அரசன் மாளிகை. பொன்னை—பொன் போன்ற மனைவியை.

## இயல் 66

இளங்கோ வேண்மாளும், அமைச்சன் வில்லவன் கோதையும் சாத்தனாரும் விளங்குகின்ற ஓவியம் மிகுந்த அழகிய மன்றத்தில் தனியே கூடி,

மென்மையான உள்ளத்தினனான கோவலனின் மெய்ம்மையைக் காக்கும் பொருட்டுப்

பாண்டியன் ஒத்துக்கொள்ளும் முறையில் வழக்குரைத்துத் தன்சிலம்பால் வென்ற உலகத்து மாதர் மணியாகிய கண்ணகிக்கே வளம் பொருந்திய அரண்மனையை இடமாகக் கொண்டிருக்கும் பெரிய ஆட்சியானது.

கல்லே கற்பு வரலாற்றைப் பேசும்படி ஓர் உருவத்தை நாட்ட எண்ணி முடித்தோம் என்று செங்குட்டுவ மன்னன் மக்கள் பேரவையினரிடம் சொல்லி முடித்தான்; கேட்ட அவையினரில் மேலோர்,

கண்ணி முடியில் ஒழுகும் தேனை உண்ணும் வண்டுகள் வண்ணம் பாடக் கவிழ்த்துள்ள முடியுடை மன்னவா வாழ்க, நீவிர் பண்ணி முடித்தோம் என்ற முடிவை நாங்கள் வாழ்த்திப் பாடி முடித்தோம் என்று பதிலைக் கூறி முடித்துக் கழுவி வேலை முடித்துப் பெற்ற மணியை பதித்ததான சிலம்போடு வந்த வஞ்சியின் திருவுருவக் கல்லோடு வஞ்சி நாடும் வாழ்க என்றார்கள்.

இதைக் கேட்ட மன்னன் பின்னும் சொன்னான்.

ஒரு பாதி ஆடவர்கள் மற்றொரு பாதி மாதர்கள் ஆகிய இருபாதியும் வாழ்கின்ற இந்த நாட்டில் இருக்கும் மனையாள் கணவன் ஆகிய இருவர்க்குள் உன்னில் ஒரு பாதி நான் என்று தன் மனைவியிடம் கணவன் சொல்வதுண்டு. அவ்வாறே மனைவி சொல்வதுண்டு என்றால் ஒரு பாதிக்கு வந்த துன்பம் மற்றொரு பாதிக்கும் உண்டு என்போம். அதைக் கண்ணகிபாற் கண்டோம் என்றான்.

—என்பன இவ்வியலிற் காண்க.

இளங்கோவேண் மாள்தானும் அமைச்ச னை
எழில்வில்ல வன்கோதை சாத்த னும்
விளங்கோவ மணிமன்றில் தனி இருந்தே
மென்கோவ லன்வாய்மை காக்கத் தென்னன்
உளங்கொள்ள வழக்குரைத்துச் சிலம்பால் வென்ற
உலகத்து மாதர்மணி ஆம் அவட்கே
வளங்கோயிற் பேரரசு ''கல்லே கற்பு
வரலாறு பேசும்வகை உருவம் நாட்ட

இளங்கோ வேண்மாள் — செங்குட்டுவன் மனைவி, வில்லவன் கோதை—அமைச்சன், சாத்தனர் — மதுரை ஆசிரியர் சாத்தனர், விளங்கோவ மணிமன்றில்—விளங்கு ஓவம் மணி மன்றில், விளங்குகின்ற ஓவியம் பொருந்திய அழகிய மன்றத்தில், ஓவம்—ஓவியம், மணி—அழகு. மன்று—ஆராய்ந்து முடிக்கும் இடம், மென் கோவலன்—வலியற்ற உள்ளத்தையுடைய கோவலன், வலியுற்ற உள்ளத்தனையின் பரத்தையிடம் பொருளை இழத்தலும், அவளுடன் உறைதலும் செய்யான் என்க, உளங்கொள்ள—மனதில் படும்படி, வளங்கோயிற் பேரரசு—வளப்பம் உடைய அரசியல் ஆட்சி, கோயில்—அரசியலும், அரண்மனையும், அரசன் இல்லமும் ஆகும். நாட்ட என்பது அடுத்த பாட்டில் தொடர்கின்றது.

எண்ணிமுடித் தோமென்று குட்டு வன்தான்
இயம்பிமுடித் தான்கேட்ட மக்கள் மேலோர்
கண்ணிமுடித் தேன்வண்டு வண்ணம் பாடக்
கவித்தமுடி மன்னவா, வாழ்க! நீவீர்
பண்ணிமுடித் தோமென்ற முடிவை வாழ்த்திப்

பாடிமுடித் தோம்என்று பதில்மு டித்தே
மண்ணிமுடித் தேபெற்ற மணிச்சி லம்பின்
வஞ்சியொடு வஞ்சிதான் வாழ்க என்றார்.

எண்ணி முடித்தோம் என்று குட்டுவன் சொன்னான் எனில் இளங்கோ வேண்மாளும் அமைச்சனும் ஆசிரியர் சாத்தனாரும் உருவம் நாட்ட எண்ணி முடித்தோம் என்று கூறிய வாறு. இவ்வாறு மற்றவரையும் தன்னுடன் உட்படுத்திக் கூறுவது உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாகும். வில்லவன் கோதையோடும் உம்மையைச் சேர்க்க. மக்கள் மேலோர்— மன்னனின் அவைக்கண் கூடியிருந்த பெருமக் களின் முன்னிற்கும் தலைவர்கள். படித்திருவாளர் என்பர். இவர்களையே வடமொழியாளர் பிரதி நிதிகள் என்பர். கண்ணிமுடி—மாலை முடிப் பில் அல்லது கண்ணி சூடப்பெற்ற தலையில், கண்ணி — தலையில் சூடப்பெறும் மாலைத் துணிக்கைக்கும் சொல்க. மண்ணி முடித்தே பெற்ற மணி—மண்ணி மாசகற்றி, முடித்தே— மற்ற வேலைகளை முடித்தே, பெற்ற—அடைந்த, மணி—மாணிக்கம் முதலியவை. மண்ணப்படு வது, மணி காரணப் பெயர். மணி கல்லுடன் இருக்கும். அந்தக் கல்லாகிய மாசு தவிர்க்கப் பெறுவது மணி என்க. சிலம்பின் வஞ்சி யோடு—சிலம்பாற் சிறந்த வஞ்சியும். மூன்ற னுருபும் பயனும் உடன் தொக்கதொகை. வஞ்சியொடு—ஒடு உம்மைப் பொருளது.

ஒருபாதி ஆடவர்கள் வாழ்கின் றார்மற்
றொருபாதி மாதர்களும் வாழ்கின் றார்இவ்
விருபாதி யும்வாழும், இந்த நாட்டில்
இருக்குமனை யின்கணவன் இருவர் தம்முள்

ஒருபாதி நான்என்று மனைவி சொல்வாள்
ஒருபாதி நான்என்பான் கணவன் என்ருல்
ஒருபாதி பெற்றதுயர் பிறபா திக்கும்
உண்டென்போம் ; கண்ணகிபால் கண்டோம்
என்ருன்

இச் செய்யுளின் கருத்து மக்களில் ஒரு பாதி ஆடவரையும் ஒருபாதி மகளிர்களையும் கொண்ட இந் நாட்டில் இருக்கும் மனைவி கணவன் என்ற இருவர் தமக்குள் கணவனுகிய நான் மனைவியாகிய உன்னில் பாதியல்லவா? மனைவியாகிய நான் கணவனுகிய உன்னில் பாதியல்லவா? ஆதலால் உனக்கு வரும் இன்ப துன்பங்களில் எனக்கும் சரிபாதி பங்குண்டு என்பார்கள். அதனுல் ஒருபாதி பெற்ற துயர் அவ்வுடம்பில் மற்றொரு பாதிக்கும் ஆக வேண்டும். இப்படி நாம் எண்ணுகிறோம். இது போலும் ஒழுக்கத்தைக் கண்ணகியிடம் கண்டோம் என்று செங்குட்டுவன் சொன்னுன் பெருமக்களிடம் என்பது ஒருபாதி நான் என்று மனையாள் சொல்வாள்—உன் உடலில் ஒருபாதி நானென்று மணுளன் சொல்வான்,

## இயல் 67

மற்றும் செங்குட்டுவன் அவையினரிடம் கூறுவான்.

மணவாளன் தன் கைப்பிள்ளை பாலுக்கு வழியில்லாத குறைபாட்டைப் பொறுக்க முடியாமல் இறந்தான் என்ருல் அவன் மனைவி அப் பிள்ளையின் தாய் என்ன செய்கின்ருள்.

மார்பில் அடித்துக்கொண்டு தலையை விரித்துக் கொண்டு கூத்தடித்துப் பாட்டொன்றும் நீளப் பாடி அண்டை அயல் மாதர்கட்கு வரவேற்பளித்துத் தன் அல்லல் நிலையை விரிவாகக் கூறிப் பாலில்லாத பிள்ளை தொண்டை வறண்டு ஒழியும்படி செய்கின்ற மன இருளுக்குக் கண்ணகி ஒரு சுடர் விளக்குப் போல்வாள்.

தன்னை அயல் ஆடவன் நெருங்காமல், தன்னை மணந்தவனை ஒரு தீமை நெருங்காமல், தன் பழங்குடிக்குரிய பெருமையைக் கெடுக்கின்றவன் அங்ஙனம் கெடுக்க நெருங்காமல், முயலுகின்ற அவளுடைய நெஞ்சத்தைச் சோர்வு நெருங்காமல் காப்பவள் எவளோ அவள்தான் இல்லக் கிழத்தி. நகை போட்டுக்கொள்வதும் நல்ல ஆடை உடுத்திக் கொள்வதும் கூத்துப் பார்க்கப் போவதுமே கடமை என்று எண்ணுகின்ற மனக்கப்பலானது தான் தத்தளிக்கும் துன்பக் கடலைத் தாண்டிச் சேர கண்ணகி ஒரு கலங்கரை விளக்கமல்லவா?

இறந்தவனுக்கு இருக்கின்றவர்கள் உதவி செய்வது என்பதென்ன? அவனிருந்தபோது அவனுக்கு இருந்த குறைபாடுகளை நீக்குவதே யாகும்.

அதுவல்லாமல் இறந்தவனின் உடலுக்குத் தேரும் மாலையும் ஏற்பாடு செய்வதும் அவன் வேறிடத்தில் சிறந்திருக்கின்றான் என்று எண்ணுவதும், அவ்விடத்தில் அவன் சீரடைய இங்குள்ள பார்ப்பனருக்கு முறம் அரிசி முதல் செருப்பு ஈறாக முடிவணங்கிக் கொடுப்பதுவும் மடமையாகும் என்றான்.

—என்பன இவ்வியலிற் காண்க—

கொண்டவன்தன் கைப்பிள்ளை பாலில் லாத
குறைதாங்க முடியாமல் செத்தான் என்றால்
கொண்டவள் தன் மார்படித்துத் தலைவி ரித்துக்
கூத்தாடிப் பாட்டொன்று நீளப் பாடி
அண்டைஅயல் மாதர்களை வரவேற் றுத்தன்
அல்லல்விரித் திருப்பாள்பால் இல்லாப் பிள்ளை
தொண்டைவறண் டொழியவைப்பாள் மன இ
ருட்குத்
தோகையவள் கண்ணகிஓர் சுடர்வி ளக்கே.

கைப்பிள்ளைக்குத் தாய்ப்பால் இல்லை. இந்தக் குறைபாட்டைக் குழந்தையின் தந்தை பொறுக்க முடியாமல் இறந்துவிடுகின்றான். இறந்து விடவே உடனே அவன் மனைவி தன் மார்பில் அடித்துக் கொண்டு ஆடிப்பாடிவரும் மாதர்களை வரவேற்றுக் கொண்டிருந்தாள். பாலில்லாக் குழந்தை தொண்டை வறண்டு இறந்து போகின்றது. இந்த முட்டாள் தனத்துக்கு—மன இருட்டுக்குச் சுடர் விளக்காவாள் கண்ணகி என்பது இப்பாட்டு. சுடர் விளக்கு—கதிரவன்போல் ஒளி செய்யும் விளக்கு, சுடர்—கதிரவன்.

தனைஅயலான் நெருங்காமல் தனைம ணந்தான்
தனைத்தீமை நெருங்காமல் தன்கு டிச்சீர்
தனைக்கெடுப்பான் நெருங்காமல் முயல்வாள்
நெஞ்சம்
தனைச்சோர்வு நெருங்காமல் காப்பாள் இல்லாள்!
புனைஆடை அணிகுவதும் கூத்துப் பார்க்கப்
போவதுமே கடமைஎன எண்ணு கின்ற
மனக்கப்பல் துயர்கடலைத் தாண்டிச் சேர
மங்கைஒரு கலங்கரைவிளக்க மன்றோ?

கலங்கரை விளக்கு என்பதை ஆங்கிலத்தில் லைட் அவுசு என்பார்கள். காப்பாள் இல்லாள்— காப்பாள் எவளோ அவள் இல்லக் கிழத்தி, புனை ஆடை—அழகிய ஆடை, புனை—அழகு. மேற்பாட்டாலும் இப்பாட்டாலும் கண்ணகி தன் கணவன் இறந்தது கண்டும் அழுது கொண்டே இருந்து விடாமல் தன் வழக்குக் கெட்டு விடாமல் ஓடி வென்ற அருமையையும், தன்னலத்தைச் சிறிதும் நோக்காமல் - உண்ணாமல் -உறங்காமல் தன் குடிப் பெருமை காப்பதே முதற் காரியம் என்று எண்ணிப் புகுந்த அருமையையும் குறிப்பால் விளக்கியபடி. இனி மூன்றும் பாட்டு வருமாறு

இறந்தானுக் குதவிஎனல் இருந்த போதில்
இருந்தபொதுக் குறைநீக்கல் ஆகும்; அன்றி
இறந்தானின் உடலுக்குத் தேரும் தாரும்
ஏற்பாடு செய்வதுவும் வேறி டத்தில்
சிறந்தான்என் றெண்ணுவதும் அங்கே அன்னோன்
சீரடைய இங்குள்ள பார்ப்ப னர்க்கு
முறங்காணும் அரிசிமுதல் செருப் பீராக
முடிதாழ்த்துக் கொடுப்பதுவும் மடமை என்றான்.

இறந்தானுக்கு உதவி எனல்—இறந்த ஒருவனுக்கு இருப்பவன் செய்யும் உதவி என்பது, இருந்த போதில்—இருந்த பொதுக் குறை நீக்கல் ஆகும், அவன் உயிரோடு இருந்த போது அவனுக்கிருந்த பொதுக் குறையை நீக்குவதே யாகும். பொதுக்குறை என்பது, அவன் மாம் பழத்தின் மேல் ஆசைப்பட்டதும் பிறவற்றின் மேல் ஆசைப் பட்டதும் அல்ல. தன் குடும்பத்தின் மேல் பிறர் கொண்டபகை; குடிப்பழி

போக்க எண்ணுவது; அவன் முடிக்காத நூல் திட்டம் முதலியவை, தார்—மாலை, வேறிடத்தில் சிறந்தான் — வேறு உலகத்தில் மக்களுடல் அல்லாத மற்றச் சிறப்புடல் பெற்றான், முறங் காணும்—அளந்தால் முறங்காணும் அளவு, இப் பாட்டால் கண்ணகி மடமை மேற் கொள்ளாமல் கோவலன் தன் குடிப்பெருமை காக்கும் பொருட் டுத் தான் மன்னன் சிலம்பைத் திருடியதில்லை என்பதை எண்பிக்க வேண்டும் என்று நினைத்து அக்குறை பாட்டை நீக்கத் துடித்தான் என்பது பெறப்பட்டது.

## இயல் 68

மேலும் செங்குட்டுவன் சொல்வான் :

சோழ நாட்டில்பிறந்தாள். பாண்டி நாட் டில் தொலையுற்றான். அதைச் சொல்ல வந்த வள் போல் நம் மேட்டுப் பாங்கான இடத்தில் அமைந்த நம் அருமை வஞ்சி நாட்டில் வந்தாள். உலகமெல்லாம் சென்று பரவும் கற்புடைய கண்ணகியின் திருவுருவை அமைப்பதற்குவாய்ப் பான கல் எங்கிருந்து எடுப்பது என்று ஆராய்ந்த போது இமயமலையின் கல்லே தகுந் தது என்று முடிவு செய்துள்ளோம். அதற்கு ஒரு காரணம் உண்டு. வடக்கு மலையிற் காணப் படும் கல் தெற்குமலைக் கல்லைப் போல் முதிர்ச்சி யுடைய தல்ல என்றாலும் தெற்குமலை நம் முடை யது. அதனை உடமையாகக் கொண்டு காத்து வருகின்றவர் செந்தமிழர். அவர்கள் நம்மை இகழும் பகைவர் அல்லர். தெற்குடைய தமிழை இகழ்ந்த வடவரிடம் நம் திறத்தைக் காட்டி நாம் பெறும் கல்லிற் சிறப்பு உண்டு என்றான் .

இது கேட்ட மற்றவர்கள் பல யானைகட்கு இடையில் இருக்கும் ஆட்டுக்கு வால் குழைத்து எழுகின்ற வரிப்புலியே வெல்க என்றூர்கள்.

மேலும் செங்குட்டுவன் சொன்னது: வடநாட்டிலிருக்கும் தமிழ்ச் சான்றோர்கள் இங்கு வந்து, ஆரிய்பர் தமிழைப் பழித்தார் என்பதையும் சொல்லிச் சென்றூர்கள், மேலும் அத்தமிழ்ச் சான்றோர் அவ்வாறு பழித்தவர் களிற் குறிப்பிடத் தக்கவர் கனகனும் விசயனும் ஆவார் என்றனர். அவர்களிடம் தென்னாட்டுப் போர்த்திறங்காட்டி அவர்களை வென்றோமில்லை யானல் வடக்கின் கண் இருந்து வந்து சொல்லிப் போனவர்களின் நெஞ்சம் என்ன ஆகும். உலகம் முழுதிலும் தமிழன் சீர் என்ன ஆகும்? என்றான். அது கேட்ட அவையினர், தமிழைப் பழித்தவன் எங்கிருந்தாலும் அங்கே சென்று அவனை அழித்துயர்க என்று கூறினர்கள். என்பன இவ்வியலிற் காண்க.

சோணாட்டிற் பிறந்துபின் பாண்டி நாட்டில்
தோகைதான் பட்டதெல்லாம் சொல்லு வாள்போல்
சேணுள்ள நம்அருமை வஞ்சி நாட்டைச்
சேர்ந்தாள்! இப் பாரெல்லாம் செல்லும் கற்பு
வாணுதலாள் திருவுருவம் அமைப்ப தற்கு
வாய்ப்பான கல்எங்கே எடுப்ப தென்று
காணுங்கால் இமையத்துக் கல்லே என்று
கண்டுவைத்தோம் காரணம்உண் டதற்கும்
என்றான்.

சேண் — உயர்வு, பார் — உலகு, உண்ட தற்கும் — உண்டு அதற்கும், இமையம் — ஒளி

செய்வது, இமைத்தல் ஒளி செய்தல்,— இமையம் — இமையமலை, கண்டு வைத்தோம்— முடிவு செய்து வைத்துள்ளோம், காரணம் அடுத்த பாட்டில்.

தெற்குமலைக் கல்லைப்போல் முதிர்ச்சி யில்லை
வடக்குமலை யிற்காணும் கல்லில்! ஆனால்
தெற்குமலை நம்முடைமை அதனைக் காப்போர்
செந்தமிழர் நமையிகழும் பகைவர் அல்லர்
தெற்குடைய தமிழிகழ்ந்த வடக்கர் தம்பால்
திறங்காட்டிக் கொள்ளும்கல் சிறப்பிற் றென்றான்
மற்றுமுள்ளோர் பல்யானை இடையாட் டுக்கும்
வால்குழைக்கும் வரிப்புலியே வெல்க என்றார்.

தெற்குமலை—பொதிகை முதலிய மலைகள், வடக்குமலை—இமையமலை. தெற்கில் உள்ள மலைகள் மிக முதிர்ந்தவை என்பதும் வடக்கு மலைகள் இளையன என்பதும் இக்கால ஆராய்ச்சியாலும் கண்ட உண்மை. திறங்காட்டிக் கொள்ளும்கல் அவ்வகையில் சிறப்புடையது. சிறப்பிற்று—சிறப்புடையது ஒன்றன் பாற் குறிப்பு வினைமுற்று, மற்றுள்ளோர்— அவையினர். மற்று அசை. பல யானைகளுக்கு மிடையில் தனக்குத் தேவைப் பட்டதான ஆட்டை உண்ணுவதற்காக வால் குழைக்கும் அதாவது பாய முயலும் வரிப் புலியே என்றனர் அவையினர் என்க. புலி வால் குழைப்பது எழுமுன்.

ஆங்கிருக்கும் தமிழ்ச்சான்றோர் ஈங்கு வந்தார்
ஆரியர்கள் தமிழ்பழித்தார் என்று சொன்னார்
தீங்குள்ளார் கனகனெடு விசயன் என்றார்
செந்தமிழர் திறங்காட்டா திருந்தோ மானல்

ஆங்கிருக்கும் தமிழ்ச்சான்ருேர் நெஞ்சம் என்ஆம்
அனைத்துலகில் தமிழன்சீர் என்ஆம் என்ருன்
யாங்குள்ளான் தமிழ்பழித்தான் ஆங்குச் சென்றே
அழித்துயர்க என்ருர்அங் கிருந்தோர் யாரும்.

ஆங்கிருக்கும் தமிழ்ச் சான்ருேர்—வடக்கில் இருக்கும் தமிழ்ச் சான்ருேர், ஈங்கு—வஞ்சி நாட்டில், செங்குட்டுவனிடம். தீங்குள்ளோர்—தீங்கு எண்ணுபவர், திறம்—போர்த்திறம், நெஞ்சம் என் ஆம்—மனம் புண் படும் என்றபடி, உலகம் முழுவதும் பரவி இருக்கும் தமிழன் பெருமை என்ன ஆகும் என்பது 'அனைத்...... .. என்னும்' என்பதால் பெறப்படும்.

## இயல் 69

பெருமக்களிடம் இவ்வாறு இயம்பிய செங்குட்டுவமன்னன் தன் அமைச்சன் வில்லவன் கோதையை நோக்கி உன் எண்ணம் எப்படி? மேலே நடப்பது எப்படி என்ற அளவில், அவ்வில்லவன் கோதை அரசனுக்கு வாழ்த்துக் கூறித் தன் சொல்மாரி பொழியத் தொடங்கினன்.

வரிப்புலியைக் கொடியாகக்கொண்ட சோழனும், கயலைக் கொடியாகக் கொண்ட பாண்டியனும் உம்மிடம் மாறு பட்டுக் கொங்கர் செங்களத்தில் வந்து தோளை எடுத்த எடுப்பிலேயே தோல்வியுற்று,அவ்வாறு தோற்றதற்கு அடையாளமாகத் தம் இரு கொடிகளையும் சேர்த்து நும்பால்கொடுத்த நாளில் அவர்கள் எடுத்த ஓட்டத் திசைகள் நன்ருக எடுத்துக் கூறக் கூடியவைகளே.

கொங்கணர், கலிங்கர், கருநாடர், பங்களர் கங்கர் கட்டியர் ஆரியர் ஆகியோர் தமிழருடன் கைகலந்து போரிடும் போதே நும் அரியயானை வேட்டையை நேரிருந்து நான் அன்று கண்டேன். இன்றும் என் நெஞ்சமாகிய அரங்கில் காணுத நேரமில்லை. ஊரில் தங்கிப் பார்த்து வர எம் கோமாட்டிக் விற் கொடி கீழ் உமை எதிர்த்த ஆரியரின் ஆயிரம் தோள்கள் அறுதலைக் கண்டவர்கள் அவை பறந்து எங்கே போய்த் தங்கின என்பதைப் பார்த்தறியார்.

—என்பன இவ்வியலிற் காண்க.

இவ்வாறு குட்டுவன் தான் பெருமக் கள்பால்
இயம்பினேன், தன்னருமை முதல மைச்சர்
வெவ்வேலிற் கண்வைத்தால் தெவ்வர் அஞ்சும்
வில்லவன்கோ தைதன்னை நோக்கி "எண்ணம்
எவ்வாறு மேல்நடப்ப தென்ன" என்றான்
யாண்டுபல வாழ்கநின் கொற்றம் என்றே
அவ்வமைச்சன் கார்முகிலாய்க் கண்கள் மின்னக்
குரலிடித்துச் சொன்மாரி பொழிவா னுங்கே.

வெவ்வேலிற் கண்வைத்தால் தெவ்வர் அஞ்சும் வில்லவன் கோதை என்பதில் உள்ள வெவ்வேல்—வெம்மையான வேல். அவ்வேலை நோக்கிய அளவிலே பகை நடுங்கிவிடும் சிறப்புடைய வில்லவன் கோதை என்க. தெவ்வர் அஞ்சும் என்பதற்குத் தெவ்வர் அஞ்சும் சிறப்புடைய என்று கொள்க, தெவ்வர் — பகைவர். கார்முகில்—கரியமுகில், மாரி—மழை.

வாளெடுத் வரிப்புலியார் கயலார் நும்பால்
மாறுபட்டார்; கொங்கர்செங் களத்தில் வந்தார்;
தோளெடுத்த எடுப்பினிலே தோல்வி கண்டார்
தொகுத்தெடுத்தே இருகொடியும் நும்பால் தந்த
நாள்,எடுத்த ஓட்டத்தைத் திசைகள் எட்டும்
நன்றெடுத்துக் கூறுவன. கொங்க ணர்கள்
கோளெடுத்த கலிங்கர்,மறக் கருந டர்கள்
கொடும்பங்க ளர்,கங்கர் கட்டி யர்கள்.

ஆரியர்க ளுடன்தமிழர் கைக லக்கும்
அப்போரில் நும்மரிய யானை வேட்டை
நேரிருந்து நான்அன்று கண்டேன் இன்றும்
நெஞ்சரங்கில் காணாத நேர மில்லை!
ஊரிருந்து பார்த்துவர எம்கோ மாட்டி
உடன்சென்ற விற்கொடிக்கீழ் உமைஎதிர்த்த
ஆரியத்து மன்னர்தோள் அறுதல் கண்டார்
ஆயிரம்தோள் பறந்தவிடம் காணு கில்லார்.

வரிப்புலியார் — புலிக்கொடியுடைய சோழன், கயலார்—கயற்கொடிப் பாண்டியன், கோள்—வலி, எடுத்த—கொண்ட, மறம்—வீரம், கொங்கணர் முதல் ஆரியர் ஈறாக இங்குக் கூறிய அனைவரும் கூடி வந்து இழைத்த போரில் தமிழர் கைகலந்து போரிட்டுக் கொண்டிருந்தனர் என்று ஒன்று கூட்டிப் பொருள் கொள்க. எங்கோமாட்டி என்றது இந்தச் செங்குட்டுவன் அன்னையை, ஊரிருந்து பார்த்தல் என்றது இமயத்தைச் சார்ந்த ஊர்களை. அடுத்த பாட்டைத் தொடர்கின்றது.

## இயல் 70

அப்படிப்பட்ட தகுதியுடையீர் இந்நிலவுல கத்தைத் தமிழ் நாடாக்குவதான இந்தக் கொள்கையை எதிர்க்க என்ன தகுதி யடைந் தார்கள். எந்நாட்டிலுள்ள நல்லவர்களும் அடை யத் தக்க மெய்த் தகுதியாகிய கற்பு நிலையை விளக்குவதற்கல்லவா இமையத்துக் கல் எடுக்க வில் எடுத்தீர்.

ஆதலால் நும் கொள்கையை விளக்கி அஞ் சல் எழுதுக வடபுலத்து மன்னர்க்கு! நம் வருகையை அவர்கள் ஏற்றுக் கொள்வதற்காக.

அன்றியும் இது குறித்து நம் நாட்டில் பறை முழக்கம் செய்து வைக்க. இது மற்ற நாட்டி லும் எட்ட வேண்டும். அதற்காகவே பல நாட்டு ஒற்றர்களும் இங்கு இருக்கின்றார்கள். எட்ட வைப்பது அவர்கள் கடமை.

தமிழ்ப் படை எழுக வீரமில்லாத வடநாடு நோக்கி.

அந்த வடநாட்டார் நம்மை எதிர்க்க எண் ணினால் அவருண்டு, நம் வீரத்தை அறிந்துள்ள அவர்களின் மூத்தவர்கள் உண்டு.

தென்னாட்டின் பழம் வீரம் அன்றும் இன்றும் என்றும் உண்டு.

என்று தன் தோளைத் தூக்கிய வண்ணம் கூறினான் (வில்லவன் கோதை) அரசன் மகிழ்ந்து மாவீரர் எங்கே? நாற்படைத் தலைவர் எங்கே? பட்டத்து யானை எங்கே? ஆகட்டும் ஆகட்டும் பறையறையச் செய்க என்று கூறினான்.

—என்பன இவ்வியலிற் காண்க.

அத்தகையீர் கடல்சூழ்ந்த இந்நி லத்தை
அந்தமிழ்நா டாக்குவதாம் இந்தக் கொள்கை
எத்தகுதி எவருடையார் இதைஎ திர்க்க?
எந்நிலத்து நல்லாரும் எய்தத் தக்க
மெய்த்தகுதி யாம்கற்பு விளக்க அன்றோ
வில்லெடுத்தீர் இமயத்துக் கல்லெ டுக்க!
வைத்தெழுது வீர்அஞ்சல் உங்கள் கொள்கை
வடபுலத்து மன்னர்க்கு வருகை ஏற்க

அத்தகையீர்—அப்படிப்பட்ட (மேற்கூறிய) தகுதியுடைய வேந்தரே! அந் தமிழ் நாடாக்குவதாம் இந்த—அந்தமிழ் நாடு ஆக்குவதாகிய இந்த, எத்தகுதி என்பதிலுள்ள தகுதி—வீரம் என்க.

இந்நாட்டில் இதுகுறித்துப் பறைமு ழக்கம்
எழப்புரிவீர்; பன்னாட்டின் ஒற்றர் யாரும்
தம்நாட்டிற் கறிவிக்கக் கடமைப் பட்டார்
தமிழ்எழுக வீரமிலா வடக்கு நோக்கி!
அந்நாட்டார் நமைஎதிர்க்க எண்ணு வாரேல்
அவருண்டு நமையறிந்த மூத்தோ ருண்டு
தென்னாட்டின் பழவீரம் அன்றும் இன்றும்
என்றுமே உண்டென்றான் எடுத்த தோளான்.

எழப் புரிவீர்—எழும்படி கட்டளையிடுவீர்! இந்நாட்டில் பறையறைந்தால் அது பன்னாட்டிலும் பரவுமோ என்று எண்ண வேண்டாம். ஒற்றர் அதைத் தம்தம் நாட்டிற்கு எட்ட வைப்பது அவர்கள் கடமை என்பான். "பன் நாட்......பட்டார்" என்றான், தமிழ் எழுக— தமிழர் படை எழுக. தமிழ் என்றால் தமிழர் படைக்கும் ஆகும்.

மட்டற்ற மகிழ்ச்சிகொண்ட மன்னன் "எங்கே
மாவீரர்" எங்கேநாற் படைத் தலைவர்?
பட்டத்து யானைஎங்கே? ஆக ஆக
பறையறைவிப் பீர்என்றான் "நாட்டி லெங்கும்
குட்டுவனார் நம்மன்னர் வாழ்க நாளும்
கோதைஉருக் கல்கொணர வடக்குச் செல்வார்
வட்டத்து மன்னரெலாம் திறைகொ ணர்க
வரவேற்க" என்றுபறை முழக்கம் கேட்டான்.

எங்கே மாவீரர்? எங்கே நாற்படைத் தலைவர்? பட்டத்து யானை எங்கே? என்பன விரைவு பற்றியவை. அரசன் பறை அறைவிப் பீர் என்று கூறினான், உடனே பறை முழக்கம் கேட்டான் என்ற நயம் இங்கே காண்க. ஆக ஆக—வேலை ஆகட்டும் ஆகட்டும் என்ற பொரு ளில்—அதாவது விரைவு பற்றி வந்த அடுக்குத் தொடர். வட்டத்து மன்னர் என்றது வழி முழுதும் உள்ள சிற்றரசரை, கொணர்க — கொண்டுவருக,

## இயல் 71

வஞ்சி நாட்டின் இறைவன் வாழ்க! நிலை பெற்ற அவன் விற்கொடியும் வெண் கொற்றக் குடையும் வாழ்க! விரைந்து செல்லக் கூடிய வெகுளியினால் வெப்பம் அடைந்துள்ள கண்களை யுடைய காலாட் படையினர் வாழ்க! வெற்றி பொருந்திய இன்பப் பனைமாலை வாழ்க! படையுடைய மன்னவன் நெஞ்சு எப்படியோ அப்படி வீரு முழக்கம் செய்யப் பறைவாழ்க!

நின்று எக்களிக்கின்ற சங்கு எனும் செல்வம் வாழ்க! எம் மூலச் சொத்தாகிய சங்கத் தமிழ் வாழ்க! எப்போதும் தெற்கில் வாழ் தமிழர் வாழ்க!

போகும் வழி (படை வீரர் கால் பட்டு) குழியாகும் படியும், சுமக்கும் நிலமானது சுமை தாங்க முடியாமல் நெளிவு அடையும்படியும், எட்டுத் திக்கிலும் தூள் எழும்படியும் அதனல் வானம் இருளடையும் படியும் ஒரு வீரனுடன் மற்ெருரு வீரன் இடிபட்டு, அவர்கள் விழி நெருப்பைப் பொழிய மடமட வென்று முற்பட்டுத் தோளால் விடுக்கும் கருவிகளையும் (அம்பு முதலிய) எறிகின்ற கருவிகளையும் (ஈட்டி முதலிய) தொட்டு வீசும் கருவிகளையும் (வாள் முதலிய) ஒன்றை ஒன்று எட்டும் படியும் நிலை கெட்டு ஒழியத் தகுந்தது பகைதான் ஒழியத் தகுந்தது பகைதான் என்றும் எமது இறைவனுகிய செங்குட்டுவன் பெறுவது புகழே என்றும் எம் வெற்றிப் பேச்சுக்கே எம்மொழி பயன்படட்டும் என்றும் ஒப்பற்ற தமிழர்கள் படையானது முற்பட்டுத் தீ முடுகியது என்று சொல்லும்படி விரைவது ஏன் எனில் வடபால் உள்ள மலையின்கல் எடுப்பதற்கே ஆகும்.

ஆடி நடந்தன படையின் குதிரைகள். வரிசையாக நடந்த யானைகள் அசைந்து நடந்தன. தேர்கள் கலகல என்று பாடி நடந்தன. முன்னணியிற் செல்லும் காலாட் படை தொடங்கிப் பின் வரும் தேர்ப்படை வரைக்கும் உள்ள அனைத்துப் படை வரிசைகளையும் ஓடிப்பார்ப்பதென்று எண்ணி நேரே ஓடுகின்ருர் ஓடுகின்ருர் அப்படியும் காணுதவராகி இன்னும் ஓடிக்கொண்டே இருக்கின்ருர்கள். என்ருல் உயர்

வுடைய அந்த வஞ்சி நாட்டுப் படையின் நீளம் நீலமலை வரைக்கும் ஆகும், என்பன இவ் வியலிற் காண்க.

தந்தத்தன தந்தத்தன தான தான
தந்தத்தன தந்தத்தன தான தான
வஞ்சிக்கிறை செங்குட்டுவன் வாழ்க வாழ்க
மன்பொற்கொடி திங்கட்குடை வாழ்க வாழ்க
மிஞ்சிச்செலும் வெங்கட்படை வாழ்க வாழ்க
வென்றிப்பனை இன்பத்தொடை வாழ்க வாழ்க
நெஞ்சொக்கமு ழங்கப்பறை வாழ்க வாழ்க
நின்றெக்களி சங்கத்திரு வாழ்க வாழ்க
துஞ்சத்தகு வெங்கட்பகை வீழ்க வீழ்க
வஞ்சிப்படை வென்றிப்படி வாழ்க நேரே.

வஞ்சிக்கிறை — வஞ்சிக்கு இறை, வஞ்சி— வஞ்சி நாடு; கருவூர், இறை — மன்னன். மன் — நிலை பெற்ற, பொற் கொடி. மிஞ்சி — விரைந்து, வெங்கண் — பகை மேற் கொண்ட வெகுளியால் கொடுமை வெப்பம் கொண்ட கண்ணையுடைய, வென்றி—வெற்றி, தொடை— மாலை, நெஞ் சொக்க முழங்கப் படை — நெஞ்சு ஒக்க முழங்கு அப்படை, நெஞ் சொக்க முழங் குவதாவது — தலைவன் நெஞ்சம் எப்படி வீறு கொண்டதோ அப்படி வீறு கொண்டு முழங் குவது, நின்றெக்களி — நின்று எக்களி; எக்களி — எக்களிக்கும்; ஆரவாரம். வினைத் தொகை. சங்கத்திரு—சங்கம் திரு. சங்காகிய செல்வம். சங்கம்—அம் சாரியை, இவ்வாறு வீரப்பண் பாடிக் கொண்டு காலாட்படை சென்றதென்க.

தனதனதன தனதனதன தத்தத் தத்தா
தனதனதன தனதனதன தத்தத் தத்தா
வழிசூழிபெற நிலநெளிவுற எட்டுத் திக்கே
மலிபொடிஎழ மிசைஇருள்பெற ஒட்டுப் பட்டே
விழிஎரிதர மடமடஎன முற்பட் டுத்தோள்
விடுபடைஎறி படைதொடுபடை எட்டத் தொட்டே
ஒழிவதுபகை ஒழிவதுபகை தட்டுக் கெட்டே
உறுவதுபுகழ் எமதிறைஎன வெற்றிச் சொற்கே
மொழிஎனஒரு தமிழர்கள்படை முற்பட் டுத்தீ
முடுகியதென விரைவதுவட வெற்புக் கற்கே.

மலிவு—மலிந்த; மிகுந்த, மிசை—வான். ஒட்டுப்பட்டே-ஒருவரோடொருவர் நெருங்குதல் பெற்று, தட்டுக் கெட்டே என்பது ஒழிவது பகை என்பதன் முன்னிருத்திப் பொருள் கொள்க, வெற்றிச் சொற்கே மொழி—வெற்றிப் பாட்டுப் பாடுவதற்கே எம் தமிழ் மொழி. வெற்பு—மலை, இமயமலை என்க. இவ்வாறு பாடிக்கொண்டே வஞ்சி நாட்டின் குதிரைப் படை, யானைப் படை, தேர்ப் படை சென்றன என்க. இதுவும் குழிப்பின் இயன்ற எண்சீர் வண்ண விருத்தம்.

ஆடிநடந் தனபரிகள்; அணியானைகள்
அசைந்துநடந் தனதேர்கள் கலகலென்று
பாடிநடந் தன தேர்கள் கலகலென்று
படைதொடங்கித் தேர்ப்படையின் கடைவ
ரைக்கும்
ஓடித்தான் பார்ப்பதென எண்ணினோர்கள்

ஓடுகின்றார் ஓடுகின்றார் காணார் இன்னும்
ஓடிக்கொண் டேஇருக்கின் றார்கள் என்றால்
படைநீளம் நீலமலை வரைக்கும் உண்டாம்.

பரிகள்—குதிரைகள், அணி—வரிசையாகச் செல்கின்ற, கலகல என்று என்பதில் அகரம் தொகுத்தல். இமைய மட்டும் — இங்கிருந்து இமையம் வரைக்கு முள்ள நீளம் (அப்படையின் நீளம்) என்க.

## இயல் 72

படைவரும் அதிர்ச்சியால் நீலமலை அதிர்ந்தது. அம்மலைப் புறத்தில் படை நடுப்பகலில் மன்னன் பாடி வீடிறங்க அண்டையிருந்த தானை அமைச்சர் படைத் தலைவர் முதலியோருடன் இருக்கையில் வீற்றிருந்தான். தேர்க்குதிரைகள் அவிழ்த்து விடப்பட்டன. உயர்ந்த யானைகள் கரும்பு, வாழை விளாபலா ஆகியவற்றை வீழ்த்தி உண்டு உலவின.

போர்மறவர் நீராடி உடைகள் மாற்றித் தெங்கின் இள நீரோடிருக்கும் முதிராத வழுக்கையை உண்டார்கள்.

அரசரும் போர் மறவர் எல்லாருமாகத் திருத்திய வாழைக் குருத்திலைகளை வரிசையாக இட்டுக் கறிகள் நெய் பண்ணியங்கள் சோறிட்டு அருகிற் சுவை நீர் இட்டே உலகினர்அனைவரும் வந்து விட்டார்களோ என்று எண்ணும்படி இரண்டு வரிசை மூவாயிரம் கோல் நீளத்தில் இருந்து உண்டார். விரைவில் எழுந்திருப்பாரெனத் தோன்ற வில்லை. வயிறு என்பது

தனியாக அமைந்திருந்தால் வயிற்றுக்கு வந்ததை எல்லாம் வரவு வைத்துத் தோளில் தூக்கி உயிர் போய்விடுமே என்ற அச்சமில்லாமல் செல்லலாம் என்று சொன்னவனை மற்ளுெருவன் பார்த்து, "அண்ணே துயரம் என்பது ஒன்று இல்லை என்றிருந்தால் நான் உண்ட தொண்ணூறு வடைகளும் ஒன்றுமே பண்ண மாட்டா" என்ருன். ஓர் அயலிலிருந்தவனின் கையைப் பிடித்து எழுந்தான்.

மற்ளுெருவன் அயலானைத் தூக்கி விட்டு விழுந்தான்.

என்பன இவ்வியலிற் காண்க.

கண்டதிரும் நீலமலைப் புறத்தே தானை
கடும்பகலில் பாடிவீ டிறங்க மன்னன்
அண்டையினே ருடன் இருக்கை வீற்றி ருந்தான்
அவிழ்த்துவிடப் பட்டனதேர்ப் பரிகள் எல்லாம்
விண்தொடும்போர் யானைகளும் கரும்பு வாழை
விளாவீழ்த்திப் பலாப்பழத்தோ டுண்டு லாவத்
திண்டிறலோர் நீராடி உடைகள் மாற்றித்
தெங்கிளநீர் முதிராவ ழுக்கை உண்டார்.

கண்டதிரும்—கண்டு அதிரும்; வரும் படையைக் கண்டு அதிர்ச்சி அடைகின்ற, தானை—படை, கடும் பகல் — நடுப் பகல், பாடி வீடு—சென்ற விடத்துத் தங்குமிடம், அண்டையினேருடன் இருக்கை வீற்றிருந்தான் என்க. பரி—குதிரை, விண்தொடும்—உயர்ந்த தோற்றத்தை உடைய என்றபடி, திண்டிறலோர்—திண்திறல் மிக்க வலி பொருந்திய படைவீரர்.

அரசரொடு போர்மறவர் எவரு மாக
அடியரிந்து நரம்பகற்றிக் குருத் திலைகள்
வரிசையினில் இட்டுச்சோ றிட்டு நெய்யா
றதுபாய்ச்சிக் கறிவகைகள் பண்ணி யங்கள்
பரிமாறிச் சுவைநீரும் அருகில் வைக்கப்
பார்அங்கே பாரிலுளோர் இங்கே என்ன
இருவரிசை மூவாயி ரங்கோல் நீளம்
இருந்துண்டார் எழுவர்என எட்ட வில்லை.

எவருமாக இருந்துண்டார் என இயைக்க. நெய்யாறது அது பாய்ச்சி என்றது சோறிட்டதும் அச் சோற்றின் மேல் நெய் விடும் வழக்கத்தை. பண்ணியம் — வடை அப்பம் முதலியவைகள். சுவை நீர்—சர்க்கரைப் பாகு முதலியவைகள், பார் அங்கே பாரிலுள்ளோர் இங்கே என்ன — வெறும் நிலமட்டுமே அங்கே. எல்லாமக்களும் இங்கே வந்துவிட்டார்கள் என்று சொல்லத் தக்க வகையில் அவ்வளவு பெருங்கூட்ட மக்கள் என்றபடி. பார்—உலகம். இரண்டு வரிசையாகவும் மூவாயிரம், கோல் நீளமாகவும் உட்கார்ந்து உண்டார்கள். அவர்கள் விரைவில் உண்டு எழுந்து விடுவார்கள் என்பது (எட்டவில்லை) மனதிற் படவில்லை.

வயிறென்று தனிப்பெட்டி யாய்இ ருந்தால்
வந்தஎலாம் வரவுவைத்துத் தோளில் தூக்கி
உயிரச்சம் இல்லாமல் செல்ல லாமென்
றுரைத்தவனை மற்றொருவன் நோக்கி அண்ணே
துயர்என்ப தொன்றில்லை என்றி ருந்தால்
தொண்ணூறு வடைஒன்றும் பண்ணு என்றான்

*அயல்நின்றான் கைப்பற்றி நின்றான் ஓர்ஆள்*
*அயலானைத் தூக்கிவிட்டு வீழ்ந்தான் ஓர்ஆள்.*

உடலுக்கு வரும் தொல்லை வயிற்றுக்கு வரும் தொல்லை என்பதில்லாமல் வயிறு தனிப் பெட்டியாய் இருந்தால் என்பான் வயிறென்று தனிப் பெட்டியாய் இருந்தால் என்றான். வந்த எலாம்—வந்தவை எல்லாம், வரவு வைத்து—நகைச் சுவை. உயிரச்சம்—உயிரைப் பற்றிய அச்சம். இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை நிலைத் தொடர். அண்ணே துயர் ஒன்று உலகில் இல்லாதொழிந்து விட்டால் இப்போது நான் உண்டிருக்கும். தொண்ணூறு வடைகளும், ஒன்றும் பண்ண மாட்டா என்றான் என்பது.

## இயல் 73

உணவை முடித்து மன்னன் அமைச்சர் முதலியவருடன் அமர்ந்திருக்கும்போது ஒரு வீரன் வந்து வடநாட்டிலிருந்து தங்களைக் காண வந்திருக்கிறார்கள் வரவிடவோ? என்றான். அரசன் உடனே அவர்களை மடக்கிப் போட்டு அவர்கள் இன்னார் என்பதை ஆராய்க என்று கூறினான். அந்தச் சொற்களை அரசன் கூறி முடிக்குமுன் வீரன் அவர்கள் தமிழ் பேசும் துறவிகள் என்றான் நடுக்கத்தோடு. அரசனும் நடுங்கி, துறவிகளை நோக்கி ஓடினான்; வணங்கி நின்றான்.

உலகின் பொருளாசை எல்லாம் துறந்தும் தமிழ் துறவாத துறவோர்களே யானிருக்கும்

இந்தப் பாடிவீட்டின்படி மிதித்த உங்கள் அடி வாழ்க என்று அழைத்துச் சென்று இருக்கை தருதல். முதலிய சீர் செய்து நின்றபடி என்னிடத் தில்நீவிர் காட்டும் திருவருள் என்ன என்று கேட்க,

மன்னர் மன்ன அங்குள்ள தமிழரின் துன் பத்தைக் கேட்டால் ஆர்வருந்தமாட்டார்? அங்கு நீவிர் கல் கொணரச் செல்கின்றீர். அச் செயலை முடிக்க! அங்குள்ள தமிழரின் குறை பாட்டையும் கேட்க,

குலம் ஒன்று. தெய்வம் ஒன்று, என்பதான தமிழர் கொள்கைக்குப் புறம்பாகக் குடி ஏறியவர் கள். இன்று தம் நலத்திற்காகப் பல்லாயிரம் தெய் வங்களைப் பேசுகின்றார்கள். பன்றி ஒரு தெய்வ மாம்; நாயும் அப்படித்தானும். அவைகளின் பச் சையூன் அவைகள் கொடுக்க இவர்கள் உண்ப தால்!

என்றைக்கு இத்தீயொழுக்கம் திருந்தும்? நம் இனத் தமிழர் அங்கே என்றைக்கு மகிழ்ந் திருப்பார்? என்றார்கள்.

குடக்கோமான் உணவருந்தி அமைச்சர் யாரும்
கொண்டாட வீற்றிருக்கும் போதில், ஐயா
வடக்கிருந்து வந்துள்ளார் காண்ப தற்கு
வரவிடவோ? என்றொருவன் வணங்கிக் கேட்க
மடக்கிவைத் தாராய்க என்று மன்னன்
வாயெடுக்கத் "தமிழ் பேசும் துறவோர் என்று
நடுக்குற்றே அவன்சொல்ல வேந்தர் வேந்தும்
நடுக்குற்றான் ஓடினன் வணங்கி நின்றான்

குடக் கோமான்—மேற்கு நாட்டு அரசன்.

செங்குட்டுவன்; குடக்கு—மேற்கு. மேற்கு நாடு என்பது கருவூர், வஞ்சி எனப்படும்.

மடக்கி வைத்து ஆராய்க என்றது அவன் பகைவனின் உளவாளியாக இருக்கலாம். அவன் இன்னன் என்பதை ஆராய்ச்சி செய்வீர்கள் என்றதாம்,

மடக்கி—திரும்பிச் சென்று விடாமல் ஒரு பால் இருத்தி, வாயெடுத்தல் — சொல்லத் தொடங்குதல்; சொல்லமுடியாத நிலே என்ற படி.

வடக்கிருந்து வந்துள்ளார் எனச் சொல்லிய அளவில் வெகுண்ட மன்னன் தமிழ் பேசும் துறவோர் என்றவுடன் நடுங்கினன்.

அவர்களே நோக்கித் தானே ஓடினன். வணங்கினன் என்பது காண்க.

பார் துறந்தும் தமிழ்துறவாத் துறவீர் என்றன்
படிமீதில் அடிவாழ்க என்ற ழைத்துச்
சீர்புரிந்து நின்றபடி என்பால் என்ன
திருவருளோ எனக்கேட்க "மன்னர் மன்ன
ஆர்வருந்தார் அங்கிருக்கும் தமிழர் கொண்ட
அல்லல்சொல் லக்கேட்டால்? கற்கோள் எண்ணத்
தேர்பரிகா லாள்யானே சேரச் சென்று
செயல்முடிப்பீர் தமிழர்களின் குறையும் கேட்பீர்

அடுத்து வரும் செய்யுளின் என்ருர் என்பதில் முடியும். பார் துறந்தும் தமிழ் துறவாத் துறவீர்—உலகின் எப்பொருளிடத்தும் உண்

டாகும் பற்றெல்லாம் துறந்தும் தமிழ்ப்பற்று ஒன்று மட்டும் துறவாத துறவிகளே. பார்—உலகு.

உலகப்பற்றுக்கு ஓர் ஆகு பெயர். என்றன் பாடி என்றது யான் இறங்கிருக்கும் பாடி வீட்டின் தலை வாயில் என்றவாறு.

சீர்புரிதல்—இருக்கை தரல், நலம் கேட்டல் முதலியவை.

என்பால் என்ன திருவருளோ—என்னிடத்தில் கொண்ட திருவருள் என்னவோ; என்ன கருதி வந்தீர்கள் என்றபடி.

ஆர்—யார் என்பதன் மரூஉ

கற்கோள்—கல்கோள், கல் கொள்ளுவது

குறை—குறைபாடு.

ஒன்றன்று பலகுறைகள் உண்டு நீவிர்
உயர் தமிழர் யாவர்க்கும் காட்சி தந்து
நன்றொன்று செய்வீரேல், நன்றாம்'' என்றார்
நகை ஒன்று புரிந்தரசர்க் கரசன் அந்தப்
பன்றியுண்பார் கண்காணத் தமிழர் கட்குப்
பரிவொன்று காட்டுவது கடமை என்றான்
என்றென்றும் வாழியவே வேந்தே என்றே
இரும் என்று சென்றார்கள் துறந்த மேலோர்

ஒன்றல்ல பல குறைபாடுகள் உண்டு என்பார் ஒன்றன்று பல குறைகள் உண்டு என்றார். உயர் தமிழர் யாவரும் உன்னை அங்குக் காண வருவார்கள். நீங்கள் அவர்கட்குக் காட்சி தருவதான நன்மை ஒன்றைச் செய்தல் வேண்டும் என்று கூறினர் என்க.

நகை ஒன்று புரிதல்— ஒரு தன்மையாக நகைத்தல். தமிழர்க்கு நானு காட்சி தரமறுப்ப வன் என்றபடி.

தமிழர்க்குப் பரிவு—தமிழர்க்குப் பரிந்து ஒரு காரியம் செய்யும் தன்மை.

இரும்—இருங்கள்.

## இயல் 74

குட்டுவன் ஒருவிரலை அசைத்தான். அது கண்ட வீரர் சிலர் ஓடிப் பறையறைந்தார். சங் கொலி செய்தனர். அக்கணமே நாற்படையுள் ளோரும் வரிசையாக உண்டு (ஆயிற்று) என்று கூறுவது போலே நின்ருர்கள். மன்னன் தேரில் ஏறி ஏறுக என்று கூறிய அளவில் பழநாள் தொட்டுத் தமிழ் மறவர் பாடுகின்ற படைப்பாட் டுக்குத் தக்கபடி நடை போட்டார் படை வீரர் எவரும்.

தமிழர்க்குப் பகையானேர் வாழ்வதெங்கே? தப்பி வாழ்ந்தாலும் அவர்களின் தலைகள் அறு பட்டுக் குவியாதா? சங்கே ஊது! தமிழராகிய எமை நத்திப் பிழைக்காத நிலைமையில் அவர்கள் துணைக்கு எங்கே போவார்கள்? இடருற்றுக் கெட்டுப் போவார்கள் சங்கே ஊது! நீர்மேற் குமிழ் போலநிலை யற்றுத் திரிவார்க்கு வாழ்வும் ஒன்ருே?

பெரிய வெற்றியுடைய வெண்கொற்றக் குடையுடையாரே சேரர் அல்லவா?

தமிழின் வெற்றித் திருநாள் வாழ்க என்று எட்டுத் திசையும் கேட்கச் சங்கே ஊது.

இவ்வாறு படை சென்றதாகக் கங்கையாற்றைக் கண்டனர். அங்குள்ள நண்பர் ஆன நூற்றுவர் கன்னர் கொண்டு வந்த ஓடத்திலேறி அக்கரையிலுள்ள பகைவர் நாட்டில் புகுந்து நல்ல வகையில் அமைத்த பாசறையில் அமைதியுற்றிருந்தார்கள்.

இவ்வாறு தங்கியதைக் கனகவிசயரும் அவருடன் உள்ள மன்னரும் இங்கு அந்தத் தமிழர்களின் ஆற்றலைக் காண்போம் என்றார்களாம். அது கேட்டுத் தமிழரசும் நன்று என்றனும்.

என்பன இவ்வியலிற் காண்க.

வண்கொங்கர் ஆடல்கண்டும் திறைகள் பெற்றும்
மன்னன்தான் விரல்அசைக்க வீரர் சில்லோர்
கண்டனர்போய்ப் பறையறைந்தார் சங்கெடுத்
தார்
கணம்ஒன்றில் வரிசையுற நாற்படைகள்
உண்டென்றார் போல்நின்றார். மன்னர் மன்னன்
ஒரு தேரில் ஏறினன் ஏறு கென்றான்
பண்டுமுதல் கொண்டு தமிழ் மறவர் பாடும்
படைப்பாட்டில் நடைபோட்டார் வீரர் யாரும்

சங்கெடுத்தார்—சங்கு எடுத்தார்—சங்கை முழங்கினர். உண்டு என்றார் போல் நின்றார்—ஆம் அவ்வாறே ஆயினோம் என்று சொல்லினர் போல வரிசை யுற்று நின்றார்கள்.

ஏறுக என்றான்—ஏறு கென்றான் அகரம் தொகுத்தல்.

ஏறுக—முன்னேறுங்கள்.

படைப் பாட்டில்—படைப்பாட்டிற்குத் தக்க படிஒற்றுத் தவருமல்.

தனதத்தத் தனதாஞ தான தந்தா
தனதத்தத் தனதாஞ தான தந்தா
தமிழர்க்குப் பகையானேர் வாழ்வ தெங்கே?
தலையற்றுக் குவியாதோ ஊது சங்கே
எமை நத்திப் பிழையாதார் போவ தெங்கே.
இடருற்றுக் கெடுவாரே ஊது சங்கே!
குமிழொத்துத் திரிவோரே வாழ்வும் ஒன்ருே?
பெருவெற்றிக் குடையாரே சேரர் அன்ருே ?
தமிழ் வெற்றித் திருநாளே வாழ்க என்றே
திசை எட்டப் படிமீதே ஊது சங்கே

சிந்து குழிப்பினியன்ற எண்சீர் வண்ண விருத்தம்.

எமை நத்திப் பிழையாதார்—பிறரை நத்திப் பிழைப்போம் என்னும் பகைவர். படி—உலகம்.

கங்கையாற் றைக்கடந்தார் நண்பர் ஆன
கன்னயநூற் றுவர்கொணர்ந்தே ஓட மேறி
அங்குள்ள பகைநாட்டிற் புகுந்து நன்றே
அமைத்த ஒரு பாசறையில் இனிதி ருந்தார்
தங்கியது கேட்டார்கள் ஆரி யர்க்குத்
தலைவராம் கனகவிச யர்கள், மன்னர்!
இங்கிந்தத் தமிழர்களின் ஆற்றல் காண்போம்
என்ருராம் தமிழரசும் நன்றென் ருனும்

கடந்தார்—செங்குட்டுவனும் பிறரும், நண்பர் —செங்குட்டுவன் நண்பர் நன்றே அமைத்த பாசறை—தக்கபடி அமைத்த பாசறை, இனி திருந்தார்—மகிழ்ச்சியுடன் இருந்தார்கள்.

இங்கு—நம் நாடாகிய இவ்விடத்தில், என்றூ ராம்—என்றூனும் என்பவை சொல்லக் கேள்விப் பட்டார் என்றபடி மற்றதும் அப்படி.

## இயல் 75

ஆரிய நாட்டரசர் பலரின் படையினரும், கனகவிசயர் படையினரும் ஒன்றாகக் கடல் போல் ஆகி போர்ப்பறையும் சங்கும் முழங்க அந்நிலே கண்ட பல நாட்டினரும் இவ்வுலகத் திற்கு ஆரியர் தலேவராவாரா? தமிழர் தலேவர் ஆவாரா என்று கூறினர்கள். சேரர் படை அவர் படைமேல் புகுதல் கண்டார். சேரர் படை நடுவிலிருந்து ஓர் சிங்கம் புகக் கண்டார் ஆரி யப்படை நடுவில். ஆரியர் எடுத்த வாளும், தமி ழர் எடுத்த வாளும், ஆரியர் வாள் வீச்சும் தமி ழரின் விரைந்த வீச்சும் தவறுதல் ஒன்றும் வீழ்ந்த தலே நூறும் ஆகச் சாய்ந்த குருதியில் மிதப்பதான பிணமலேகள்! எங்கே இவர்கள் கூட் டத்தோடு ஓடுகின்றூர்கள் என்று துரத்தி ஓடு கின்றூர்கள் வில்லேந்திய தமிழர்கள் ஒரு புறம்.

இவ்வாறு அரை நாளில் தமிழ் வெற்றித் திருநாளேக் கண்டார்கள் தமிழர்கள்.

கனக விசயர்கள் பக்கத்தவரான ஐம்பத்தி ரண்டு மன்னர்கள் தம் உருவத்தை மாற்றிக் கொண்டு ஒளிந்தவரும், சடை முடிகள் முகத்தி லும் தலேயிலும் ஒற்றிக் கொண்டவரும், கூரிய

தம் அம்பினல் முகத்தில் கீறிக் கொண்டு அம்மா பிச்சைகொடுங்கள் என்று திரிகின்றவரும் ஆனர். மன்னனின் நேரில் கனக விசயர்கள் 'கட்டி நிறுத்பட்டார். பல பேர் போவீர்கள் என்று துரத்தப் பட்டார்கள்.

என்பன இவ்வியலிற் காண்க.

ஆரியநாட் டரசர்களின் படைவீ ரர்கள்
கனகவிசயர்படையோ டொன்று சேர்ந்து
போரிடுவார் திரைகடலே போன்ருர். சங்கும்
போர்ப்பறையும் முழங்கினர் முழக்கம் கேட்டே
ஆரியரா? தமிழர்களா? வைய கத்தை
ஆளுவோர் யார்என்ருர் பன்னுட் டாரும்!
சேரர்படை புகக்கண்டார் தேரி னின்றே
சிங்கமொன்று புகக்கண்டார் பகைப்ப டைக்குள்

இந்தப் போரில் ஆரியர் வென்ருல் உலகாளுவோர் ஆரியர். தமிழர் வென்ருல் உலகாளுவோர் தமிழர். ஆதலால் வையகத்தை ஆளுவோர் யார் என்று கூறினர்கள் பல நாட்டினரும் என்க. பன்னடு—பலநாடு, சிங்கம்—செங்குட்டுவன்.

அவர்வாளும் தமிழ்மறவர் எடுத்த வாளும்
அவர் வீச்சும் தமிழ் மறவர் விரைந்த வீச்சும்
தவருென்றும் வீழ்ந்ததலை நூறும் ஆகச்
சாய்குருதி மிதப்பனவாம் பிணமலைகள்!
இவர் எங்கே ஓடுகின்ருர் கூட்டத் தோடே
எனதொடர்வார் வில்லேந்து தமிழர் ஓர்பால்
அவன்கனகன் அவன்விசயன் என்பார் ஓர்பால்!
அரைநாளில் தமிழ்வெற்றித் திருநாள் கண்டார்

அவர் வாளும் தமிழர் வாளும், அவரின் வாள் வீச்சும் தமிழரின் வாள் வீச்சும் தவறு ஒன்றைப் பெற்றது. அதனல் அறுந்த தலை நூற்றைப் பெற்றது. இந்நிலை அடையவே அங்குச் சாய்ந்த செந்நீரில், பிண மலைகள் மிதப்பன ஆயின என்பன முதலிரண்டு அடிகளின் கருத்து.

ஒரு பக்கம் இவர்கள் கூட்டத்தோடு எங்கே ஓடுகின்ருர்கள் என்ற குரல் கேட்கப்படுகின்றது. மற்ருெரு பால் அவன் கனகன்; அவன் விசயன் என்ற கூச்சல் கேட்கப் படுகின்றது. இவ்வாருக அரைநாளில் தமிழர் வெற்றித் திருநாள் ஏற்படுத்தினர்கள்.

என்பன பின் இரண்டு அடிகளின் கருத்தாகக் கொள்க.

ஓரைம்பான் இருமன்னர் உருவம்மாற்றி
ஒளிந்தவரும் சடைமுடிகள் ஒற்றி ஞேரும்
கூரம்பால் முகம்கீறி அம்மா பிச்சை
கொடுப்பிரெனத் திரிந்தோரும் ஆனர். மன்னன்
நேரந்தக் கனகவிச யர்கள் கட்டி
நிறுத்தப்பட் டார். பல்லோர் துரத்தப் பட்டார்
ஆரங்கே வில்லவன்கோ தைகற் கொள்க
கங்கைநீ ராட்டுவிழா முடிக்க என்ருன்.

ஓரைம்பான் இருமன்னர்—ஐம்பத்திரண்டு ஆரிய மன்னர், சடை முடிகள் ஒற்றிஞேர்—துறவு கொண்டோர் போல் காட்டிக் கொள்ளச் சடை முடிகளை முகத்தில் ஒட்ட வைத்துக் கொண்டோர்.

ஆரங்கே—வெறுக்கத் தக்கவர்யார் இருக்கின்ருர்கள் என்றபடி.

கற் கொள்ள—இமையமலையில் கல் ஒன்று கொள்ள. கங்கை நீராட்டு விழா முடிக்க—கங்கையில் நீராட்டுவதோர் விழாவை முடித்திடுக. நேரந்த—நேர்அந்த.

## இயல் 76

இமையத்தினின்று எடுக்கப்படும் கல்லைச் சுமப்பதற்குக் கனகனையும் விசயனையும் கையோடு கூட்டிக் கொண்டு தமிழ் வீரர் அனைவரோடு வில்லவன் கோதை இமையமலை யடைந்தான். அங்குச் சென்ற வேலையை முடித்துக் கொண்டு கனகவிசயர் தலையில் அந்தக் கல்லை ஏற்றி மற்றும் அவர்கட்கு உதவியாக சில வீரரையும் உதவினன். கல்லைக் கங்கையில் ஆட்டி வில், கயல், புலி ஆகிய கொடிகளோடு

சங்கு ஒலிக்கப், பறை முழங்க, ஆடல் பாடல் தொடர நால்வகைப் படையும் உடன் வரப் புகழ் மிக்க வில்லவன் கோதையுடன் என் செய்வோம் என்று அழுத படி விசயனும் கனகனும் கல்சுமந்து அங்கங்கு நின்று வருகின்ற ஊர் வலத்தில் எங்குள்ளோரும் ஆரியம் தோற்றது தமிழ் வென்றது என்று கூறினர்கள்.

இவ்வாறு ஊர்வலம் வந்து கொண்டிருக்கையில் பாசறையில் இருந்த செங்குட்டுவன் வடக்கில் வாழ் தமிழ்ப் பெரியோரை வரவேற்றுப் பேசும் போது, தமிழ் நெறியின் உயர்வையும் பிறர் போக்கின் சிறுமையையும் எடுத்துக் காட்டித் தலை வெட்டப்பட்டு வீழும் போதும்

தமிழரின் நாக்கு, வெல்க தமிழ் என்று கூற வேண்டும். என்பதை உணரும்படி செய்து வரும் ஊர் வலத்தை அருகில் ஓடி வரவேற்று வாழ்க என்று கூறினன்.

என்பன இவ்வியலிற் காண்க.

கனகனையும் விசயனையும் கல்சு மக்கக்
கையோடு கூட்டியே தமிழ வீரர்
அனைவரொடும் இமயமலை தனைஅ டைந்தான்
அறிவமைச்சன் வில்லவன்கோ தைதான் அங்கு
வினைமுடித்தே அவர்தலையில் கல்லை ஏற்றி
வீரரையும் உதவி க்குக் கங்கை ஆட்டிப்
புனைவில்லும் பொற்கயலும் புலியும் வானின்
பூண்எ ன்ன நீள்கொடிகள் மின்னைச் செய்ய

சங்கொலிக்கப் பறைமுழங்க ஆடல் பாடல்
கதையுரைக்கப் பரியானை தேர்கா லாட்கள்
பொங்குகடல் நடந்ததெனப் புகல வையப்
புகழ்சுமந்த வில்லவன்கோ தைதன் னேடும்
எங்குள்ளோ ரும்காணக் கற்சு மந்தே
என் செய்வோம் எனக்கனக விசயர் கூற
அங்கங்கு நின்றுவரும் ஊர்வ லத்தில்
ஆரியம் தோற் றதுத மிழே வென்ற தென்பார்

வினை முடித்தல்—உருவமைக்க ஏற்ற கற்காணலும் வெட்டி எடுத்தலும். வீரரையும் உதவுவித்து—இருவர்மட்டும் சுமக்க இயலாதென்று போர் வீரர் சிலரையும் உதவியாக சுமக்கும் படி செய்து, உதவு வித்து—பிறவினை, கங்கை ஆட்டி—கல்லைக் கங்கை நீரில் அமிழ்த்

துக் கழுவி. வானின் பூண்—வானுக்கு அணி, ஆடல் பாடல் கதையுரைத்தல்—ஆடலும் பாடலும் கல் காணும் வெற்றி வரலாற்றை உரைத்தல். புகல—எல்லாரும் சொல்லும் படி என்றார். எங்குள்ளோரும் அங்கிருந்த படியே கூறினர்கள்.

பாசறையில் குட்டுவன் தான் வடக்கில் வாழும்
பைந்தமிழப் பெரியோரை வரவேற் றுப்பின்
பேசுகையில் தமிழ்நெறியின் பெற்றி கூறிப்
பிறர்போக்கின் சிறுமையினை எடுத்துக் காட்டி
வீசுதலை விழும்போதும் தமிழர் நாக்கு
வெல்கதமிழ் எனவேண்டும் எனவு ணர்த்தி
ஆசையுடன் வருகின்ற ஊர்வ லத்தை
அருகோடி வரவேற்று வாழ்க என்றான்.

பெற்றி — உயர்வு, பிறர் போக்கு — பிற இனத்தவரின் வாழ்க்கை முறை, சிறுமை—தாழ்வு, அரு கோடி — அருகு ஓடி. ஆசையுடன் என்பதை அருகோடி என்பதோடு இணைக்க.

## இயல் 77

வஞ்சியில் மகளிர் இல்லத்தில், இளங்கோவேண்மாள் வஞ்சி நாட்டுக்கு வரவில்லை என்மணாளன். மங்கை எனக்கும் அவன் முகம் காட்டினானில்லை. கஞ்சிக்கு வழியின்றித் தேள் ஒன்றும் கொட்டப்பெற்றுக் கலங்குகையில் கடன்காரன் வந்தாற் போல என் நெஞ்சுக்கு நான் தப்புவது எளிதா. தோழியே என் உடம்பு பற்றி எரிகின்றதே என்று துடித்தாள்.

இந்த மாலைப் போது எதற்காகத் தென்றலை அனுப்பிற்று. மல்லிகைப் பூ எதற்காக நறுமணத்தை என்னுடன் அனுப்பிற்று. கடலேன் முழக்கத்தை அனுப்பிற்று:

நான் வருகிறேன் என்று ஓர் ஓலைதான் என் அன்பனிடமிருந்து வரவிட்டால் இவைகள் நடத்தும் இந்த வேலைகள் தான் செய்யுமா? தோழி சொல் என்று அழுதாள்.

மண்ணுக்கு மாணிக்கம் தேவை, மாதர் மனத்திற்குக் கற்பொழுக்கம் தேவை, காணப்படுகின்ற வானத்திற்கு வெண்ணிலவு தேவை. வீட்டிற்கு மணி விளக்குத் தேவை. அதுபோல் என் கண்ணுக்குக் கண்ணாளன் அவன் தேவை. காதற் கனலுக்கும் புனல் அவன் என்று வருந்தினாள்.

என்பன இவ்வியலிற் காண்க.

வஞ்சிக்கு வரவில்லை என்மணாளன்!
மங்கைக்கு முகம்காட்ட எண்ணவில்லை!
கஞ்சிக்கு வழியில்லான் தேளுங் கொட்டக்
கலங்குகையில் கடன்காரன் வந்தாற் போல்என்
நெஞ்சுக்கு நெருப்பாக வந்த வட்ட
நிலவுக்குத் தப்புவதும் எளிதோ தோழி?
பஞ்சுக்கு நிகரான என்உடம்பு
பற்றிற்றே எனத்துடித்தாள் இளங்கோ வேண்
மாள்

வஞ்சிக்கு —வஞ்சி நாட்டிற்கு, மங்கை என்றது தன்னை. நெஞ்சுக்கு நெருப்பாக — என் நெஞ்சத்தையே சுடத் தக்க நெருப்பாக

நிகரான—ஒப்பான, பற்றிற்றே—பற்றி எரிகின்றதே, இளங்கோ வேண்மாள்—செங்குட்டுவன் மனைவி· மணவாளன் என்பதன் மரூஉ மணாளன்.

மாலேதான் ஏன்அனுப்பும் தென்றற் காற்றை?
மல்லிகைதான் ஏன்அனுப்பும் நறும ணத்தைச்?
சோலேதான் ஏன்அனுப்பும் குயிலின் பண்ணைத்?
தொல்கடல்தான் ஏன்அனுப்பும் பெருமு ழக்கை?
ஓலேதான் வருகின்றேன் எனஎன் அன்பன்
ஒன்றுதான் வரவிட்டால் அவை நடத்தும்
வேலேதான் செல்லுவதும் உண்டோ தோழி
விளம்பாயோ எனஅழுதாள் இளங்கோ வேண்
மாள்

மாலே—மாலேப் போது. காதலனைப் பிரிந்த காதலிக்குத் தென்றலும் நறு மணமும் குயிலின் பண்ணும் கடல் முழக்கும் துன்பம் செய்வன. அவ்வாறு துன்பத்தை எனக்குச் செய்யட்டும் என்று தானே மாலேப் போதும் மல்லிகையும் சோலேயும் கடலும் அவற்றை என்னிடம் அனுப்பின என்பாள் இவ்வாறு கூறினள். நறுமணம்—இனிய மணம். தொல் கடல்—பழமையான கடல், விளம்பாயோ—சொல்ல மாட்டாயா?

மண்ணுக்கு நன்மணிகள் வேண்டும் வைய
மகளிர்கக்குக் கற்பொழுக்கம் வேண்டும் காணும்
விண்ணுக்கு வெண்ணிலவு வேண்டும் வாழும்
வீட்டிற்குச் சுடர்விளக்கு வேண்டும் நல்ல

பண்ணுக்கு மூன்றுதமிழ் வேண்டும் நீர்சூழ்
பாருக்கு நல்லோர்கள் வேண்டும் என்றன்
கண்ணுக்குக் கண்ணுளன் சேரர் தோன்றல்
கட்டாயம் வேண்டுமென்ருள் இளங்கோ வேண்
மாள்

நண் மணிகள் — வையிரம் முதலியவை. பண்—பாட்டு, பார்—உலகு. வைய மகளிர்—உலகிலுள்ள பெண்கள். மூன்று தமிழ் — மூன்ருக அமைந்த தமிழ். அவை இயற்றமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ்.

## இயல் 78

மேலும் இளங்கோ வேண்மாள் தன் தோழியை நோக்கி யார் வந்து என்ன கேட்டாலும் இல்லை என்னுத குடியிற் பிறந்தவள் நீ. ஊரில் வந்தும் தெரு வெல்லாம் திரும்பி வந்தும் ஊர்வலத்தை முடித்து வருகின்ற என் கண்ணுளரின் தேர் வந்ததா ? சென்று பார்த்து வந்து சொல்லேடி என்று நான் கூறினல் அதன்படி செய்யாமல் என் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நிற்கின்ருய். இப்படிச்செய்ய உனக்கு மனம் வந்ததா ?

என்று கேட்டாள்.

மேலும், அவர் வராத நேரம் அனைத்தும் எனக்குத் துன்ப நேரம். அவர் என் தோளைச் சேராத நேரம் என் உயிரினுள் தீராத நோய் இருந்து திருகும் நேரம். அவர் வரும் வழி மேற் சென்று பார்த்துவர மாட்டாயா ? அவரைக்

கையோடு பிடித்துவர மாட்டாயா என் நிலை?
அழிவு நிலை என்று கூறினள்.

அதே நேரம் பூவை (நாகண வாய்ப்புள்) மிகுதியாகப் பேசியதால் அது இருக்கும் கூட்டில் ஓடிப்புகும்படி பூப்போன்ற கையை நீட்டும் வேளையில் பூவை மறைத்தது போல பின்னிருந்து அவளின் முகப் பூவை இரு கைகளாகிய பூவால் மறைத்தபடி குட்டுவனும், "நான் யார்?" என்றான்". "அவள் அகமாகிய பூவில் வீற்றிருப்பவர்தாம்" என்றாள். தாமரை இதழ் போன்ற அவள் உதட்டில் ஐந்து முத்தங்கள் வைத்தான்.

என்பன இவ்வியலிற் காண்க.

யார்வந்து கேட்டாலும் இல்லை என்ற
இசைவந்த குடிவந்த பெண்ணே இந்த
ஊர்வந்தும் தெருவெல்லாம் திரும்பி வந்தும்
ஊர்வலத்தை முடித்துவரும் கண்ணைப் பாரின்
தேர்வந்த தாஎன்று பார்போய்; வந்தால்
திரும்பிவந்து சொல்லேடி என்றால், என்றன்
நீர்வந்த கண்துடைத்து நிற்கின் றாயே
நெஞ்சு வந்த தாஎன்றாள் இளங்கோ வேண்மாள்

இசை வந்த—புகழ் அமைந்த, நெஞ்சு வந்ததா—மனம் வந்ததா? நெஞ்சுஉவந்ததா எனப் பிரித்து இப்போதுதான் உனக்கு மனம் மிக மகிழ்ந்தது போலும் என உரைப்பினும் ஆம்.

வாராத நேரமெலாம் துன்ப நேரம்
வாராயே கண்ணாட்டி என்றன் தோளைச்
சேராத நேரமெல்லாம் உயிரி னுள்ளே
தீராத நோயொன்று திருகும் நேரம்

பாராயோ அன்னவரை வழிமேற் சென்று?
பற்றித்தான் வாராயோ பற்றி லாரை?
ஆராயா திருந்தாயே என்நி லேதான்
அழிவுநிலை என்றுரைத்தாள் இளங்கோ வேண்
மாள்

திருகும் நேரம் — துன்புறுத்தும் நேரம். காலம் தாழ்த்து வருவது கருதி பற்றில்லார் என்றான்.

மிகப்பூவை பாடியதால் கூட்டில் ஓடி
மெல்லிளனைக் கொல்வதுமுன் கருத்தா என்றே
புகப்பூவை நிகர்கைகள் நீட்டும் போதில்
புதுநிலவை முகின்மறைத்த தெனப்பின் நின்று
முகப்பூவை இருகைப்பூ வால்ம றைத்தே
முந்துபுகழ் குட்டுவன்தான் "நான்யார்" என்றான்
அகப்பூவில் வீற்றிருப்பார் என்றாள் வேண்மாள்
அல்லிப்பூ இதழ்முத்தம் ஐந்து வைத்தான்

மிகப்பூவை பாடியதால்—பூவை மிகப்பாடியதால் எனமாற்றுக. பூவை நாகண வாய்ப்புள்; இந்நாள் இதனை மைனா என்று கூறுவர். புகப்பூவை நிகர் கைகள்—கூட்டில் புகும்படி பூவைப் போன்ற கைகள், முகப்பூ — மன்னியின் பூப் போன்ற முகம், இரு கைப்பூ — மன்னனின் இரண்டு கையாகிய பூ. நான் யார்—இவ்வாறு உன் முகத்தை மறைத்தவனாகிய நான்யார், அகப்பூ—நெஞ்சமாகிய மலர், அல்லிப்பூ — அக இதழ் சிறந்ததாமரை, அல்லி — அகவிதழ். புல்லி — புறவிதழ். இதழ் முத்தம் — இதழில் முத்தம்.

## இயல் 79

அதன்பின் கண்ணகிக்குப் புகழ்க்கல் எடுத்துப் போனீர்கள். பின்பு அங்கே நடந்ததென்ன என்று இளங்கோ வேண்மாள் கேட்கத் தன் படையின் திறத்தையும் நடந்தவற்றையும் விரிவாகக் கூறிக் கனக விசயனின் தலைமேல் கல்லேற்றி வந்த செய்தியைப் பாண்டியற்கும் சோழற்கும் சொல்லியனுப்பினேன் என்று செங்குட்டுவன் சொன்னான்.

அது கேட்ட மன்னி மதுரை, புரட்சிக்கு உட்பட்டதே. பிறகு அது பொலிவு பெற்றதுண்டோ? பாண்டிய மரபில் வந்தோன் இருக்கின்றானோ எனக் கேட்க.

கொற்கையில் வாழ்ந்திருந்த பாண்டியன் வெற்றி வேற் செழியன் எரியுண்ட மதுரையைப் புதுக்கி மக்கள் இடையூறின்றி வாழும்படி செய்து வருகின்றான். இதை மாடலன் என்னிடம் கூறினான். தமிழின் வேர் இருக்கிறது. உலகும் இருக்கிறது. ஆதலால் தமிழ் இருக்கின்றது எனக் கூறினான்.

பெருமை மிக்க கண்ணகி கோவலன் ஆகியோரின் தந்தைமார் துறவு பூண்டனராம். தாய்மார் இறந்து போனார்களாம். இவ்வாறு மாடலனே கூறினான். என்று செங்குட்டுவன் செப்ப

நும் சீர் வாழ்க! வருக நீராடுவீர்! அமுதுண்பீர்! என்று மன்னியழைக்க, நன்றென்று மன்னன் சென்றான்.

என்பன இவ்வியலிற் காண்க.

பூம்புகார் பூவைக்குப் புகழெ டுக்கப்
போனீரே பின்னடந்த தென்ன என்று
பாம்புகார் சடைக்குழலி கேட்டாள். ஆங்கே
படைச்செயலும் நடப்பெவையும் விரித்து ரைத்து
வேம்புகா ராத்திபுனை தமிழ் வேந்தர்க்கும்
விற்சுமந்த பகைவர்தாம் கற்சு மந்து
தாம்புகார் எனினும் அவர் புகுந்த செய்தி
சாற்றுகென ஆள்விட்டேன் என்றான் மன்னன்

பூம்புகார்—அழகிய காவிரிப்பூம்பட்டினம், பூவைக்கு—கண்ணகிக்கு, புகழெடுக்க—புகழை விளக்குகின்ற கல்லெடுக்க.

பாம்புகார்ச் சடைக் குழலி—பாம்புபோல் நீண்டதும் கார்போல் கரு நிறமுடையதுமாகிய சடை பின்னப்பட்ட கூந்தல் உடைய இளங்கோ வேண்மாள். பாம்பு—சடைக்கும் கார் குழலுக்கும் உவமை. கார்—மேகம், வேம்புகார் ஆத்தி புனை தமிழ்வேந்தர்—வேப்பமாலையையும் ஆத்தி மாலையையும் புனைந்த தமிழ் வேந்தராகிய பாண்டியன் சோழன், வேப்பமாலை பாண்டியனுக்குரியது. ஆத்திமாலை சோழனுக்குரியது, கார் ஆத்தி—தேன் மழை பொருந்திய ஆத்தி, கார்—மழை, ஆத்தி மலரின் தேன் மழை என்க. தாம்புகார் — தாம்புகமாட்டார்கள். எனினும் புகுந்த சேதி—என்றாலும் எனக்கு அஞ்சிப் புகுந்த அரிய செய்தியை

பீடுறுகண் ணகி கோவலன் தந்தைமார்
பெருஞ்சிறப்புத் துறவடைந்தார்! இருவர் தாய்மார்
நீடுமகிழ் சிறப்புலகைச் சேர்ந்திட்டாராம்
நெடியமுடிச் சோழனவன் ஆட்சி நன்றாம்

மாடலனே இவ்வாறு சொன்ஞன் என்ருன்
வாழியவே நம்சீர்த்தி வருகவேநீர்
ஆடிடுவீர் அமுதுண்பீர் என்று மன்னி
அழைத்திட்டாள் மன்னவனும் நன்றே என்ருன்

பீடுஉறு—பெருமை மிகுந்த, நீடுமகிழ்—நீண்ட மகிழ்ச்சியுடைய, சீர்த்தி—புகழ், நீர் ஆடிடுவீர்—நீராடுக. அமுது—இனிதாகிய உணவு, அமுது—அமிழ்து; இனிமைக்கு ஆயிற்று. நன்றே என்ருன்—நல்லது என்று அவளுடன் சென்ருன்.

## இயல் 80

அரசியல் பெருமன்றத்தில் வந்தமர்ந்த குட்டுவனிடம் மெய்காப்பாளர் நீலன் முதலியவர்கள் வந்து நாங்கள் சென்று பாண்டியனுரிடத்தும் சோழனுரிடத்தும் வடநாட்டிற் சென்று செய்தவற்றையும் கனகவிசயர் முடியிற்கற் கொணர்ந்ததையும் கூறினேம். அதற்கவர்கள்,

எம்மிடத்தில் தோற்றவர்தாம் கனகவிசயர்கள். அவர்களைக் குட்டுவனுர் போருக்கிழுத்ததுவே சிறுமையாகும். அவர்கள் சேரர் தம்மிடம் தோற்றதில் வியப்பென்ன இருக்கமுடியும். தோற்ற அவர்கள் மறைந்து ஓடினுர்கள். அந்த நிலையில் அவர்களைப் பிடித்து அவர் தலைமேல் சும்மாடு கோலி வைத்துக் கல்லை ஏற்றி இங்குக் கொணர்ந்ததில் பெருமையில்லை. எம்மிடம் கனகவிசயர் என்ற நாய்க்குட்டி கதையைச் சொல்ல வேண்டியதில்லை.

என்று மெய் காப்பாளர் சொல்ல, அது கேட்ட குட்டுவன்

மீனக் கொடியாராகிய பாண்டியனும் புலிக் கொடியாராகிய சோழனும் நம்மீது பொருமை கொள்கின்ருர்கள். கண்ணகிக்கும், கோவலனுக்கும் வறுமை உண்டாக்கவும்,மற்றும் கோவலனுக்குச் சாக்காட்டை உண்டாக்கவும் செய்த ஆட்சியாளர்கள், அவ்விருவருக்கும் செய்யத் தக்கன செய்த என்னை இகழ்ந்தார் என்ருல் கொடியவர்க்குப் புகழ்பாடக் கொடியவரே வேண்டும் போலும் என்று கூறினன் சேரன் செங்குட்டுவன்.

என்பன இவ்வியலிற் காண்க.

அரசியல்மா மன்றத்தில் குட்டு வன்தான்
அமர்ந்திருக்க நீலன்முதல் மெய்காப் பாளர்
வரலுற்ருர்; வாழ்த்துரைத்துச் சொல் லுற்ருர் ;
மன்னவரே பாண்டியர்பால் சோழனர்பால்
வரிசையுற வடநாட்டுச் செலவும், கல்லே
மன்னராம் கனகவிசயர்சு மந்து
வருமாறு புரிந்ததுவும் சொன்னேம் கேட்ட
மன்னர் அவர் சொன்னவுரை நன்றன் றென்ருர்

மாமன்றம் — பெரியமன்றம், வடநாட்டுச் செலவு—வடநாடு சென்றமை. நன்று அன்று என்ருர்—நன்றன் றென்ருர் எனப்புணர்ந்தன.

எம்மிடத்தில் தோற்றவரை மீண்டும் போருக்கு
இழுத்ததுவே சிறுமையாம் சேர வேந்தர்
தம்மிடத்தும் அவர் தோற்ருர் எனில் வியப்போ!
தலைமறையப் புறங்காட்டி ஓடி னேரைச்

சும்மாடு தலைவைத்துக் கல்லை ஏற்றிச்
சுமந்துவரச் செய்ததுவும் பெருமை தானே?
நம்மிடத்தில் கனகவிசயர்கள் என்ற
நாய்க்குட்டிக் கதையுரைக்க வேண்டாம் என்றார்

என்றார்—என்று பாண்டியன் சோழனாரா கிய இருவரும் சொன்னார்கள்.

மெய்காப்பார் இது சொல்லக் கேட்ட வேந்தன்
"மீன்கொடியார் புலிக்கொடியார் பொறுமை கொண்டார்
துய்யவரே வறுமைபெறச் செய்த ஆட்சி
துடுக்காகக் கோவலனைக் கொன்ற ஆட்சி
செய்தவர்கள், கண்ணகிக்கும் கோவலற்கும்
செயத்தக்க செய்தஎனை இகழ்ந்தா ரென்றால்
வெய்யவர்க்கு வெய்யவரே புகழ்ச்சி பாட
வேண்டும் போலும் காணீர்" என்று சொன்னான்

மெய்காப்பார்—குட்டுவனின் மெய்காப்பாளர். நீலன் முதலியவர்கள். மீன்கொடியார்—பாண்டிய மன்னர். புலிக் கொடியார்—சோழ மன்னர். பன்மையாற் சொன்னது இகழ்ச்சிக் குறிப்பு. துய்யவர்—கண்ணகியும் கோவலனும் வறுமை பெறச் செய்த ஆட்சியையும், கொன்ற ஆட்சியையும் செய்த வர்களாகிய சோழனும் பாண்டியனும். அவர்கட்குச் செய்யத்தக்கதைச் செய்த என்னைச் இகழ்ந்தார்கள். என்று சேரன் சொன்னது காண்க. வெய்யவர்—கொடியவர், காணீர்—அவையினரே அறிந்து கொள்ளுங்கள்,

## இயல் 81

மேலும் செங்குட்டுவன் வில்லவன் கோதை என்னும் தன் அமைச்சனிடம் கூறுவான்.

கல்லில் உருக்காட்டும் அக்கண்ணகியைக் காணவேண்டும்; விரைவில் பணி முடிக்கும்படிகல் தச்சரிடம் சொல்லி வைக்க; கல் நாட்டு விழா நாள் இன்னதென்று குறித்து எல்லா நாட்டு மன்னர்க்கும் எவர்க்கும் தெரிவிக்க; கனக விசயரை என்னெதிரில் வரவழைக்க என்று கூறினான். அவ்வாறு வந்து நின்ற இருவரையும் நோக்கி மலை கடலாகலாம் பொங்கு குன்றாகலாம் பொழில் பாலையாகலாம் வெந்த இடம் நகரும் ஆகலாம். ஆனால், செந்தமிழின் உண்மை நிலை எந்த நாளும் சிறிதும் மாறாது இதை நீவீர் நினைவில் வைக்க.

தேவர்க்கு உவப்பாகும் என்று கூறி ஆடு வெட்டும் சிறு செயலைத் தமிழரெல்லாம் வெறுக்கின்றார்கள். ஒருத்தி பல ஆடவரை மணப்பதைத் தமிழர்கள் கான்றுமிழ்கின்றார்கள். பிறப்பினால் அனைவரும் நிகர் என்பாரை எதிர்க்கும் ஆரியரைத் தமிழர்கள் எதிர்க்கின்றார்கள். கொலைஞனுக்கும் கழுவாய் உண்டு என்று பேசும் கயவர்களைக் கழுவேற்றச் சொல்வார்கள் என்றான்.

என்பன இவ்வியலிற் காண்க.

கல்லினில்அக் கண்ணகியைக் கற்பின் தாயைக்
கண்ணுறுதல் வேண்டுநாம்! கற்றச் சர்பால்
சொல்லிடுக விரைந்துபணி முடிக்கச் செய்க
துய்தான கல்நாட்டு விழாநாள் தன்னை

எல்லார்க்கும் தெரிவிக்க வருவார்க் கெல்லாம்
எல்லாமும் முன்னேற்பா டாக்கி வைக்க
வில்லவனே கனகவிச யர்கள் தம்மை
விரைவினிலே வரவழைக்க என்றான் மன்னன்

கற்றச்சர்—கல் தச்சர், எல்லார்க்கும்—அயல் நாட்டு மன்னர்கள் உள் நாட்டு மக்கள் முதலிய அனைவர்க்கும், எல்லாம்—இருக்க நலங் காண ஆகிய எல்லா வசதியும், வில்லவனே—வில்லவன் கோதையே, கண்ணுறுதல் வேண்டும்—பார்க்க வேண்டும்.

வந்துநின்ற இருவரையும் வேந்தன் நோக்கி
மலைஇருந்த இடமெல்லாம் கடலும் ஆகும்;
பொங்குநின்ற இடமெல்லாம் மலையும் ஆகும்;
பொழில்நின்ற இடமெல்லாம் பாலை யாகும்;
வெந்துநின்ற இடமெல்லாம் நகரும் ஆகும்;
விரிந்துநின்ற இடஞ்சுருங்கல் ஆகும்; ஆனால்
செந்தமிழின் உண்மைநிலை எந்த நாளும்
சிறிதேனும் மாறாது நினைவில் வைக்க.

பொங்கு—நிலக்குழி, பொழில்—சோலை, பாலை—நீரும் நிழலுமற்ற பெரும் பரப்பு நிலம். வெந்து நின்ற இடம்—வெந்த நகரம், நகரம் ஆகும்—புது நகரம் ஆகும்.

தேவரென்றும் உவப்பென்றும் ஆடு வெட்டும்
சிறுசெயலைத் தமிழரெல்லாம் வெறுக்கின் றார்கள்
ஆவலுற்றே ஒருமகளைப் பலர்ம ணத்தல்
அறம்என்னும் தீயாரை உமிழ்கின் றார்கள்

யாவருமே பிறப்பினிலே நிகர்என் பாரை
எதிர்ப்பாரைத் தமிழரெலாம் எதிர்க்கின்ருர்கள்.
காவாத கொலேஞனுக்கும் கழுவாய் பேசும்
கயவர்களேக் கழுவேற்றச் சொல்வார் என்ருன்.

தேவர் என்றும்—தேவர் என ஒரு வகையானவர் இருக்கின்ருர் என்றும் உவப்பென்றும்—அவர்கட்கு உவப்பாகுமென் றும், காவாத கொலேஞன்—வாய்ப்பு நேர்ந்த இடத்துக் காக்க வேண்டியதிருக்க அதை விட்டுக் காப்பாற்ருத கொலேயாளி, கழுவாய்—இதை ஆரியர் பிராய சித்தம் என்பர்.

கொலேக்குற்றம் மட்டும் செய்தவனே இங்குக் குறிப்பிட்டிருந்தாலும் திருட்டு முதலிய பிற குற்றங்களேயும் கொள்க.

## இயல் 82

திருடித்தான் உயிர் வாழ வேண்டிய நிலே ஏற்பட்டுள்ளது என்று ஒருவன் சொன்னல் அதை விட நான் செத்துத்தான் என் புகழைக் கொள்வேன் என்பவன் தமிழன்.

ஓர் இடர் ஏற்பட்டிருக்கிறது என்ருல் அதனின்று நீங்கும் பொருட்டுத் திருடுவதும் நல்லதே என்பவன் ஆரியன்.

கண்ணில் ஏற்பட்டுள்ள குருடு என்னும் நோய்க்கு மருந்து தேடிக் கொண்டிருக்க நாய்கள் போலத் தமிழர்களே நோக்கிக் குரைப்பது நல்லதா?

இன ..சை நீக்கி வாழுங்கள் என்று நான் பணித்ததாக உம் இனத்தார்க்குக் கூறுங்கள்.

அழகிய எம் தமிழ் நான்மறைகளைப் பார்த்து நீங்களும் மறை வரைந்தீர்கள். ஆயினும் அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றின் உண்மை காணவில்லை. அதனால் தமிழர் துணை மறைகள் செய்து தந்தனர். ஆயினும் சிறிதேனும் ஒழுக்க நெறி காணுகிலீர். எம்தமிழை எம்தமிழ் இலக்கியத்தை ஈடழித்து எம்தாய் நாட்டைப் பற்றிக் குந்தியுண்ணத் திட்டமிட்டீர். அதற்கு முன்னே உங்கள் குதிகாலைக் காத்துக் கொள்வீர் என்றான்.

தமிழரசர்களாகிய நாங்கள் பல நாட்டின்கண் உள்ள புலிகளையும் எலிகளாக்கி அவர்களைப் புறங்காட்டி ஓடும்படி எங்கள் திறங்காட்டி அங்கு மக்களை ஆளுவோர்க்கு ஆளும் அறங்காட்டித் திரும்பினோம்: அதுவன்றி அங்கே எங்கள் கொடிகளில் அழகு காணப்பட வேண்டும் என்று எண்ணியதுண்டா? அங்குள்ள மக்களின் செல்வ நிழலில் ஒதுங்கியதுண்டா?

குறுங்காட்டு நரிகளே போவீர்கள் உங்கள் நாட்டிற்கு என்றான்.

கனக விசயர்களாகிய அவ்வாரியரும் மன்னனைக் கும்பிட்டுச் சென்றார்கள்-

என்பன இவ்வியலிற் காண்க.

திருடித்தான் வாழ்ந்திடுதல் வேண்டும் என்றால்
செத்துத்தான் புகழ்காப்பேன் என்று சொல்வோன்
இருள்தீர்ந்த பழந்தமிழன்! ஆரியன் தான்
இடரென்றால் திருடுவதும் நன்றே என்போன்

குருடகல வடக்கரெலாம் மருந்துண் ணுமல்
குக்கலெனத் தமிழர்களைக் குரைத்தல் நன்றோ!
துகள்தீர்க என்றுநான் பணித்த தாகச்
சொல்லுகபோய் திருந்தாஉம் இனத்த வர்க்கே

குக்கல்—நாய், உம் இனத்தார்—உம் இனத்தவராகிய ஆரியர்க்கு, பழந்தமிழன்—உலகந் தோன்றிய நாள் தொட்டு மேம்பட்டு வரும் தமிழன்.

அந்தமிழ்நான் மறைகண்டு மறைகண் டீர்கள்
அறம்பொருளின் பம்வீடு காணு கில்லீர்
செந்தமிழர் துணைமறைகள் செய்தும் தந்தார்
சிறிதேனும் ஒழுக்கநெறி கண்டீர் இல்லீர்
எந்தமிழை எம்மருமை இலக்கி யத்தை
ஈடழித்தே எம்மன்னை நாட்டைப் பற்றிக்
குந்தியுண்ணத் திட்டமிட்டீர் அதன்முன் உங்கள்
குதிகாலைக் காத்துக்கொள் வீர்கள் என்றான்.

அந்தமிழ்—அம் தமிழ், அழகிய தமிழ்.

முதலில் தோன்றிய எங்கள் தமிழ் நான் மறையைப் பார்த்து உங்கட்கு என ஒரு மறையை உண்டாக்கிக் கொண்டீர்.

என்பான் இவ்வாறு நான் மறை...கண்டீர்கள் என்றான், துணை மறைகளை—ஆரியர் உப நிடதங்கள்என்பர்.

புறங்காட்டி ஓடிடவே பலநாட் டின்கண்
புலிகளையும் எலிகளே ஆக்கி எங்கள்
திறங்காட்டி ஆளுவதோர் அறமும் காட்டித்
திரும்பினோம் அல்லால்எம் கொடியை அங்கே

நிறங்காட்டச் செய்தோமா மக்கள் செல்வ
நிழல்காட்ட ஒதுங்கியதும் உண்டா? தீய
குறுங்காட்டு நரிகளே செல்க என்ருன்
கும்பிட்டுப் போனுர்கள் ஆரி யர்கள்.

பல நாட்டின் கண் புறங்காட்டி ஓடிடவே புலிகளையும் எலிகளே ஆக்கி எங்கள் திறங் காட்டி என மொழி மாற்றியமைத்துப் பொருள் காண்க.

பகையரசர் நாடுகள் பலவற்றை நாங்கள் வென்றதுண்டு. அங்கு எங்கள் கொடியைப் பறக்கச் செய்து அங்குள்ள செல்வத்தைப் பயன் படுத்திக் கொண்டு குந்தியுண்டு நாங்கள் நாள் கழிக்க நினைத்ததே இல்லை என்பான் இவ்வாறு கூறினன். குறுங்காட்டு நரிகளே என்றது கனக விசயர்களை. ஆரியர்கள்—கனக விசயர்கள்.

## இயல் 83

ஊரில் உலவியும், உறவினரைக் கண்டு உவந் தும் கண்ணகிக்கு இயற்றுகின்ற உருவக்கல், கோயில் பற்றிய பணிகள் விரைவில் முடிய முடிப் பார்க்கு ஊக்கமூட்டியும் தன் அரண்மனைக்கு வந்து இன்னடிசில் உண்டு முக்கனியின் சுவை யினும் மேம்பட்ட பேரின்பத்தை அளிக்கின்ற வேண்மாளை அணைத்தபடி சென்று நிலாமுற்றத் தில் விட்டுக் காதல் விழாப் பற்றிய உன் சொற் பொழிவை நடத்துவாய் என்று கூறினன் குட்டுவ மன்னன்.

பேச்சைத் தொடங்கு என்று மன்னன் சொன்னது கேட்ட இளங்கோ வேண்மாள்,

வெண்ணிலவு பேசிக்கொண்டே இருக்கும் வெண்ணிலவிற்கு இடந்தந்துள்ள விண்ணோ பேச் சொன்றுமில்லாமல் இருக்கும். இவற்றில் வெண் ணிலவு ஆவல் நிறைவு பெற்றதல்ல, விண்ணோ எல்லாம் நிறைய உடையது என்று கூறினாள். அதுகேட்ட மன்னன் உள்ளத்திலுள்ள காதலின் அளவில் ஆணும் பெண்ணும் ஒன்றுதான் என்று கூறினான்.

இல்லை பெண்ணுள்ளம் பெரியதொரு காதற் பேழை என்று சிரித்துச் சொன்னாள் வேண் மாள்.

மன்னன், பேரின்பத்தை நுகரும் காதல் துறையிலே காதலிக்குப் பேச்சு இல்லை என்று தான் பெரியோர் சொல்வார். ஆயினும் இன் பம் என்பது ஓர் ஆடவன் பெண்ணிடத்தும், ஒரு பெண் ஆடவனிடத்தும் கிடைப்பது தவிர வேறோர் இடத்தும் கிடைப்பதில்லையா என்று கேட்டான்.

அதற்கு வேண்மாள் தானிருக்கும் மேல்மாடி யினின்று கீழ் நோக்கிப் பார்த்தவளாய் அங்குத் தெருவில் போய்க் கொண்டிருந்த ஒரு பெண் ணைக் குறித்து இவள் யார் யார் என்று வியப் போடு கேட்டாள்.

என்பன இவ்வியலிற் காண்க.

உலாவந்தும் உற்றூரைக் கண்டு வந்தும்
கண்ணகிக்கே இயற்றுகின்ற உருவம், கோயில்
எலாமுடியப் பணிமுடியும் ஊக்கம் தந்தும்
இல்வந்தே இன்னடிசில் முடித்தும் நல்ல

பலாவாழை மாஆன முக்க னிக்குட்
படாததாம் பெரியசுவை வேண்மாள் தன்னை
விலாஅணைய அணைத்தபடி நிலாமுற் றத்தில்
விடாக்காதற் சொற்பொழிவை நடாத்தென்
றான்மன்.

உலாவருதல்—ஊரைச் சுற்றி வருதல், கண்டு வந்தும்—கண்டு உவந்தும்; உவந்தும்—மகிழ்ந்தும், பணி—வேலை, முக்கனிக்கு உட்படாதது ஆம் பெரிய சுவை வேண்மாள்—முக்கனிச் சுவை யினளவுக்குட் படாததாகிய பெரிய சுவை தருவாளாகிய வேண்மாள்.

விலா—விலாப்புறம், விடா—விட்டு; அவளை அமர்த்தி, மன்—மன்னன். காதல் கட்டத்தில் நீ முதலில் பேசு என்று மன்னன் சொன்னான் என்றவாறு.

வெண்ணிலவு பேசிக்கொண் டேஇ ருக்கும்
விரிவானம் பேசாமல் இருக்கும் மேலும்
வெண்ணிலவு உள்ளன்பு நிறைந்த தன்று
விரிவானே அன்புடைய தாகும் என்றாள்
"உண்ணிறைந்த காதலிலே ஆணும் பெண்ணும்
ஒன்றேயாம் எனவேந்தன் உரைத்தான்" இல்லை
பெண்ணுள்ளம் நிறைகாதற் பேழை என்று
பிளந்தபா லைச்சிரிப்புக் காரி சொன்னாள்.

வெண்ணிலவு பேசிக்கொண்டே இருக்கும் என்றது. தன் தோற்றத்தை அது விளம்பரப் படுத்திக் கொண்டே இருப்பதை,

விரிந்த வானமோ தன்னை விளம்பரப் படுத்திக் கொள்வதில்லை விரிவானம் பேசாமல் இருக்கும் என்றாள்.

அவ்வாறு தன்னை விளம்பரப்படுத்தும் நிலவோ உள்ளே நிறைய அன்பை வைத்திருப்ப தில்லை என்பாள். வெண்.........அன்று என்ருள். விரிவானே பேசாதிருந்தாலும் உள்ளத் திலும் நிறைந்த அன்புடையது என்பாள். விரிவானே.........ஆகும் என்ருள்.

முற்பாட்டில் நீ பேசு என்று மன்னன் சொன்னுன். அதற்கு இப்பாட்டில், உள்ளத்தில் எனக்கு நிரம்ப ஆசை உண்டு. ஆயினும் நான் பேசப்போவதில்லை என்று சொன்னுள் என்ற படி.

அதன் மேல் அவன், இன்பம் என்பது ஆணுக்குப் பெண்ணிடத்திலும் பெண்ணுக்கு ஆணிடத்திலும் தாஞ உண்டு என்று கேட்டான் என்பது பின் வரிகளின் கருத்து.

பேரின்பத் துறையினிலே காத லிக்குப்
பேச்சில்லை என்றுரைப்பார் நன்று! பெண்ணே,
பாரினிலே இன்பமெனல் ஆட வர்பால்
பாவையரும் பாவையர்ஆ டவர்தம் பாலும்
ஆருவதொன் றேதாஞ? என்று கேட்டான்
ஐந்தடுக்கு மாளிகையி னின்று கீழே
பார்வையினைப் போகவிட்ட இளங்கோ வேண்மாள்
பச்சைமயில் இவளொருத்தி யார்யார் என்ருள்

காதற் கட்டத்தில் காதலிக்குப் பேச்சில்லை என்று கூறிய வேண்மாளின் சொல்லை மன்னன் ஒப்புக் கொண்டான். "பேரின்.........நன்று" என்ருன். அவ்வாறு ஒப்புக் கொண்ட மன்னன் அவளை நோக்கி உலகில் இன்பமென்பது இது ஒன்றுதாஞ வேறும் உண்டோ என்று கேட்டான்.

அதற்கு விடை சொல்லாமல் அவள் யார் யார் என்று கேட்டாள், என்பது பெண்...யார் யார் என்பவற்ருல் அறியப்படும்,

பேரின்பம்—பெரிய இன்பம். பெண் ஆண் கலப்பிளுல் ஏற்படும் இன்பம், ஆடவர்தம்பால்—ஆடவரிடம், பச்சை மயில் இவள் ஒருத்தி—பச்சை மயில் போன்ற சாயலுடைய இவள்.

## இயல் 84

தெருவில் சென்று கொண்டிருந்த அவ்வொருத்தியை வேண்மாளும் மன்னனும் தம் உருவை மறைத்த படி பின் தொடர்கின்ருர்கள்.

அங்கேதான் வேலை முடிந்து கொண்டிருந்தது. ஓவியம் போன்ற சுவர் வேலை ஒரு பக்கம் முடிந்து கொண்டிருந்தது. கோயிலின் மேற் கட்டும் முடிந்து கொண்டிருந்தது.

அரசியும் அரசனும் அவ்விடத்தைத் தாண்டி அங்கொரு பெரு விடுதியினுள் நுழைகின்ருர்கள்.

அங்குக் கண்ணகியுடன் உருக்கல் அமைத்துக் கொண்டிருக்கும் ஒரு கல் தச்சன் காலைப் போதையும் நடுப்பகலையும் மாலைப் போதையும் அனுப்பி இன்னும் தன் எண்ணத்தைப் பணியினின்று மீட்காமலும் தன் விழியையும் கையையும் வேறெதிலும் செலுத்தாமலும் இருந்தான். அவன் மனைவி—தெருவிற் கண்ட மயில் என்பாள் அவன் எதிர்வந்து நிற்பதையும் அவன் பார்க்கவில்லை. அவள் பாடினுள் கேட்கவில்லை. ஆடினுள். "உயிர் இருக்கையிலும் உணர்வு

அற்றுப் போனதோ என்று கூறி அவள் மீண்டும் ஆடிக்கொண்டிருக்கின்றாள்.

பண்ணுக்கும் முழவிற்கும் ஏற்ற வகையில் பச்சைமயில் ஆடிக்கொண்டே இருக்கையில் மழைக்கும் அசையாத குன்றம் போலத் தன் விழியைத் திருப்பாமல் கற்றச்சன் பணியே தானாகி இருந்தான்.

அவள் தன் கண்ணால் அவன் கண்ணில் அடித்தாள். கண்ணகி உருவக்கல்லுக்கு முகத்தை அடித்துவிட்டுப் பின் கண்ணை அடித்துக் கொண்டிருந்தான். அப்போது மயில், மண்மேடு ஆய்விட்டதோ உன்காதல் என்று கூறினாள். அதற்கு அவன் என் மனதைக் கலை தான் அடித்துக் கொண்டு போய்விட்டது என்று கூறினான்.

என்பன இவ்வியலிற் காண்க.

வேண்மாளும் குட்டுவனும் உருமறைத்தே
விரைந்துசெலும் அவ்வொருத்தி யைத்தொ
டர்ந்தார்
தூண்மாளும் வேலைஒரு புறத்தே! ஓவச்
சுவர்எழும்பும் மற்றொருபால்! கோயில் தன்னைக்
காண்பாரின் உளம்பறிப்ப தாம்மேற் கட்டுக்
கற்றச்சர் இன்கனவை உண்மை ஆக்கும்?
வேண்மாளும் குட்டுவனும் அவற்றைத் தாண்டி
விள்ளரிதாம் ஒருவிடுதி உள்ளே சென்றார்.

தூண்மாளும் வேலை ஒருபுறத்தே—ஒரு புறத்தில் தூண்வேலைமாளும். கோயில் தூண் வேலை முடிந்து கொண்டிருந்தது ஒரு புறம் என்றபடி.

ஓவச் சுவர்—வேலைப்பாடமைந்த சுவர்; மேற்கட்டு—மேற்கட்டுக் கோப்பு. இரவு நேரம் ஆதலின் இங்கு வேலை செய்வோர் எவருமில்லை; என்றறிக, விள் அரிதுஆம் ஒருவிடுதி—சொல் லரிதாகிய மிகப் பெரிய ஒப்பற்ற விடுதி.

கண்ணகிக்குக் கல்லுருவம் அமைப்பான் அங்கே
காலைபோம் நடுப்பகல்போம் மாலை யும்போம்
எண்ணத்தை மீட்கவில்லை; கண்ணும் கையும்
எடுத்ததில்லை வேறுபுறம்! மனைவி யான
வண்ணமயில் எதிர்வந்தாள் பார்க்க வில்லை!
வாய்ப்பாட்டும் கேட்கவில்லை ஆட லானாள்
உண்ணின்ற உயிரிருந்தும் உணர்வில் லாமல்
ஒழிந்ததுண்டோ எனமீண்டும் ஆடு கின்றாள்.

அமைப்பான்—கல்தச்சன்; ஆடுகின்றாள்—ஆடிக்கொண்டிருக்கையில்.

பண்ணடிக்கும் முழவடிக்கும் தக்க தாகப்
பச்சைமயில் ஆடிக்கொண் டேஇ ருக்க
விண்ணடிக்கும் மழைக்கசையாக் குன்றம் போல
விழிதிருப்பாக் கற்றச்சன் பணியே ஆனான்
கண்ணடித்தாள் பச்சைமயில் முகம்அ டித்துக்
கண்ணடித்துக் கொண்டிருந்தான் கற்றச் சன்தான்
மண்ணடித்துப் போயிற்றோ காதல் என்றாள்;
மனமடித்துப் போயிற்றுக் கலைதான் என்றான்.

பண்ணடி—பாட்டின் அடிப்படை, முழவடி—முழவின் (மத்தளம்) கொட்டு, விண்ணடிக்கும் மழைக்கு—வான்விரைந்து பொழிவதான மழைக்கு, பணியே ஆனான்—பணிவேறு அவன்

வேறுஎன்ற நிலைபோக இரண்டும் ஒன்றெனவே யானான்.

கண்ணடித்தாள்—தன் கண்ணால் அவன்கண்ணில் அடித்தாள் என்றபடி; இதனால் அவன் சிறிது திரும்பிப் பார்த்தான் அவளை என்பது குறிப்பு.

கண்ணடித்துக் கொண்டிருந்தான்—அப்போது மீண்டும் வேலையில் குனிந்து கண்ணகி உருவத்திற்குக் கண் அமைத்துக் கொண்டிருந்தான்.

மண்ணடித்துப் போயிற்ரு—மண்மேடாய் விட்டதா? மனம்—என் மனத்தை; அடித்துப் போயிற்றுக் கலை—கலையானது அடித்துக் கொண்டு போய்விட்டது.

## இயல் 85

பொருள்களை நோக்கி அலைகின்ற மனமானது காதலின்பத்தைத் தள்ளிவிடுமா? அந்த இன்பத்தை மறந்து விடுவதென்பது உண்டா? என்று மயில் தன் கணவனாகிய கற்றச்சனை நோக்கிச் சொன்னாள். அதற்குக் கற்றச்சன் கலை இன்பம் ஒன்றுதான் கலைஞனின் இன்பம்; கவிபுனைதல் ஒன்றுதான் கவிஞனுக்கு இன்பம் ஆனது போல. தலைவன் தலைவி பிரியும்போது காதலின்பத்தை அவர்கள் இழந்து வாழ்கின்றார்கள். ஆனால் கலைஞனும் கலையும் பிரிவதே இல்லை. கலைஞனின் வாழ்நாள் எல்லாம் அவனுக்குஇன்ப நாளே.

கலைஞனுக்குத் தன் மனைவியின் தோள் ஒய்வு மெத்தை. ஆதலால் எனக்குக் கைக்காத இன்பம் இதோ இந்தக் கருங்கல்.

என்று கூறிவிட்டுத் தன் பணிக்குத் தலை குனிந்தான், சிற்றுளியை எடுத்தான். கல்லில் உருக்காட்டும் கண்ணகியும் கண்ணுமாய்ப் பணி தொடர்ந்தான்.

இதை எல்லாம் அறிந்த மன்னன் தன் மன்னியை நோக்கி "வலை வீசும் விழியாளே என் கேள்விக்கு (ஆண் பெண் காதலில் மட்டும் தானு இன்பம் கிடைக்கும் என்ற கேள்வி)

இதுதான் மறுமொழியோ என்ருன். அது மட்டும் அல்ல மலைக்கல்லைப் பேசவைக்கும் கல் தச்சு வேலை எவ்வளவு முடிந்தது என்று நேரில் சென்று அறிந்து கொள்வது எனக்கின்பம் என்று மன்னி கூறினுள்.

கலைஞனே உன்வேலை விரைவில் முடிய வேண்டும். கோயில் வேலையும் விரைவில் முடிய வேண்டும். மன்னி வேலை நடப்பதைப் பார்க்க மிகவும் ஆசைப்பட்டாள். அவள் உயிர் வாழ்வது கூட கண்ணகி கல்நாட்டு விழாவின் முடிவு காண் பதற்கே என்று மன்னன் கூறினுன். மன்ன னும் மன்னியும் அரண்மனை சென்ருர்கள்.

அலைமன்து காதலின்பம் தனைத்தள் ளாதே!
அவ்வின்பம் மறப்பதுண்டோ என்ருள் மஞ்ஞை
கலை இன்பம் ஒன்றுதான் கலைஞற் கின்பம்
கவி இன்பம் கவிஞனுக்கே ஆனுற் போலே!

தலைவனுமே தலைவியுமே பிரியும் போது
காதலின்பம் அவர்தவிர்ந்தும் வாழ்தல் கூடும்
கலையுமொரு கலைஞனுமோ பிரிதல் இல்லை.
கலைஞன்வாழ் நாளெல்லாம் இன்ப நாளே !

கலை—ஒட்பம்; விரும்பப் படுவதோர் திறம். தொழிலுக்கும் பொருளுக்கும் ஆகும் போது அது ஆகுபெயர். உலகம் தழீஇயது ஒட்பம் என்ற குறளடியும் இங்கு நோக்கத்தக்கது.

மஞ்ஞை—மயில், கலைஞனுக்கு அவன் தொழிலே இன்பம் தருவது என்பது இப் பாட்டின் கருத்து என்க.

கலைஞனுக்கு மனைவிதோள் ஓய்வு மெத்தை !
கைக்காத இன்பமிந்தக் கருங்கல் என்று
தலைகுனிந்தான் சிற்றுளியை எடுத்தான் கல்லின்
தையலும்தன் கண்ணுமாய்ப் பணி தொடர்ந்தான்
வலைவீசும் விழியாளே என்கேள் விக்கு
மறு மொழியும் இதுதானா என்றான். மன்னி
மலைபேச வைக்கின்றான் கற்றச் சன்தான்
வந்துநிலை யறிந்ததெனக் கின்பம் என்றாள்.

பணி தொடர்ந்தான்—முன் செய்த வேலையைத் தொடர்ந்து செய்யலானான், தலைகுனிதல்—பணிமேற் செல்லல்,

கல்லின் தையல்—கல்லில் உருக்காட்டி வரும் கண்ணகி, என் கேள்விக்கு—அரண்மனை நிலா முற்றத்தில் நான் உன்னைக் கேட்ட கேள்விக்கு.

மறுமொழியும் இதுதானோ—கல் தச்சன் தன் மனைவிக்குச் சொன்னதான இந்த மறு மொழி தானோ?

மலை பேச வைக்கின்றான் என்றது; மலைக் கல்லில் உருக்காட்டும் திறத்தை.

காதலியிடம் காதலனுக்கு இன்பம் கிடைப்பது தவிர வேறு எங்கும் கிடைக்காதா என்று அரண்மனை நிலா முற்றத்தில் மன்னன் கேட்டான். அதற்குக் கலைஞனுக்குக் கலைத் தொழிலிலிருந்து இன்பம் கிடைக்கும் என்ற விடையைக் கற்றச்சனிடமிருந்து பெற வைத்தாள் மன்னி.

மேலும் அவள் அது மட்டுமல்ல வேறு இடத்திலிருந்தும் இன்பம் பெறமுடியும் என்று கூறுவாளாய்,

நடைபெறும் இந்த வேலையை வந்து பார்த்ததே எனக்கு இன்பம் என்று முடித்தாள். இதனால், நிலாமுற்றத்தில்—காதல் கட்டத்தில் மன்னி "எனக்கு இப்போது காதலின்பம் இன்பம்" என்று தோன்றவில்லை. வேலை நிலையைப் பார்த்து வருவதில்தான் எனக்கு இன்பம் கிடைக்கும் என்று கூறினாள் என்பதுவும் பெறப் பட்டது.

கற்றச்சுக் கலைஞனே வாழ்க உன்றன்
கைத்திறத்தை விரைவினிலே முடித்து வைக்க
மற்றந்தப் பெருங்கோயில் பணியும் தீர்க்க
மன்னி இவள் முடிந்துவரும் கலைகா ணற்கே
உற்றதோர் ஆசையினை என்ன சொல்வேன்
உயிர்வாழ்ந்தாள் எனில் இந்தக் கண்ணா கிக்குக்
கற்காணும் விழாமுடிக்க வாழ்ந்தாள் என்று
காவலன்சொன் னன்அரசி யோடு சென்றான்.

அரசியோடு சென்றான். சொன்னான் அரசியோடு சென்றான் என்பதில், சொன்னான் என்பது முற்றெச்சம் சொல்லி என்று பொருள் படுவதால்.

## இயல் 86

அரசியல் செயற்றுறை மேலவர் செங்குட்டுவனிடம் கண்ணகி கல்நாட்டு விழாவை முன்னிட்டுச் செய்துள்ளவைகளைச் சொன்னார்கள்,

மகளிர் கற்பின் எடுத்துக் காட்டு இவ்விழா என்று உள் நாட்டிற்கு முரசறைந்தார்கள். உலகுக்கெல்லாம் ஓலை செல்லவிட்டார்கள். அவ்வோலை கண்டவர்களும் அவர்களால் சொல்லக் கேட்டவர்களும் நம் வஞ்சி நாட்டை நோக்கிக் கிளம்பிவிட்டார்கள். உள்நாட்டாரும் ஆயத்தப்படுகின்றார்கள். வீட்டுக்கு வீடு இந்த மகிழ்ச்சிப் பேச்சாகவே இருக்கின்றது. விளையாட்டுக் குழந்தைகள் பாடும் பாட்டு அனைத்தும் கண்ணகி பாட்டே.

அயல்நாட்டு மன்னர்கட்கும் மற்றவர்கட்கும் வந்தால் தங்குவது முதலியவற்றிற்கு எல்லாம் முன்னேற்பாடாகி உள்ளன.

விழா நாளன்று வயலெல்லாம் புத்துருக்கு நெய்யே நிறையும்; வரப்பெல்லாம் அந்நெய் வெள்ளத்தை மறிக்கும் செங்கதிர்கூட அது செல்லும் வழியை விட்டு ஒதுங்கிச் செல்ல வேண்டும். இல்லாவிட்டால் சோற்றுமலை இடிக்கும்:

இந்நாட்டில் இருப்பதான பெரிய குளத்து நீர் இறைக்கப்படும். அங்குத் தயிர் தேக்

கப்படும். மாடுகள் தரும் பாலை எல்லாம் தேக்கி வைக்கக் கடலையே இடங்கேட்க எண்ணி இருக்கிறார்கள் என்று சொன்னவர்கள், இன்னும் சொல்லலானார்கள்.

என்பன இவ்வியலிற் காண்க.

நாட்டுக்கு முரசறைந்தார் உலகுக் கெல்லாம்
நல்லோலை செல்லவிட்டார் மகளிர் கற்பின்
காட்டுக்குக் கண்ணகியின் கல்நாட் டென்றார்
கண்டவரும் கேட்டவரும் நமது வஞ்சி
நாட்டுக்கு வர இன்றே கிளம்பி னார்-உள்
நாட்டாரும் ஆயத்தம் ஆகின் றார்கள்
வீட்டுக்கு வீடிந்த மகிழ்ச்சிப் பேச்சாம்
விளையாட்டுப் பாட்டும்கண் ணகியின் பாட்டே.

காட்டுக்கு—எடுத்துக் காட்டுக்கு, ஆயத்தம் —முன்னேற்பாடு, விளையாட்டு—விளையாடும் குழந்தைகளின் என்று பொருள் கொள்க.

அயல்நாட்டு மன்னவரும் பிறரும் வந்தால்
அமைவதற்கும் ஆடுதற்கும் பாடு தற்கும்
துயில்வதற்கும் குளிப்பதற்கும் வெயில்ப டாமல்
சுற்றுதற்கும் மற்றெதற்கும் தகுதி யான
இயலமைந்த கருவிகளும் பொருளும் செய்தார்
இல்லை எனச் சொல்லாமல் எல்லாம் வைத்தார்
வயலெல்லாம் விழா நாளில் புத்து ருக்கே
வரப்பெல்லாம் புத்துருக்கின் மிடாவி ளிம்பே

வெயில் படாமல் சுற்றுதற்குச் செய்துள்ளது நிழல் தரும் சாலை பந்தல், கருவிகள்— அமர்வதற்கு நாற்காலி பாடுதற்கு யாழ் முதலிய

பொருள், ஆடுதற்கான அரங்கு குளிப்பதற்குப் புதிதாகத் தோண்டப்படும்மடு முதலியன. புத்துருக்கு—புதிதாக வெண்ணெய் உருக்கிய நெய். மிடா—பெருஞ்சட்டி.

செங்கதிரும் வேறுவழி செல்ல வேண்டும்
செல்லாக்கால் சோற்றுமலை இடிக்கும். மற்றும்
இங்குள்ள பெருங்குளத்து நீர்இறைத்தே
எம்மருங்கும் கரையெடுத்துத் தயிரைத் தேக்கித்
தங்கமலை மாடெல்லாம் தரும்பால் தேக்கத்
தடங்கடலை இடங்கேட்க வேண்டு மன்றோ
செங்குட்டு வன்பாலிவ் வாறு சொன்னார்
செயல் துறையின் மேலோர்கள் ,இன்னும்
சொல்வார்.

செல்லாக்கால்—செல்லாவிட்டால், மருங்கு—பக்கம்; தங்கமலை மாடு—தங்கமலை போன்ற மாடு, உவமைத் தொகை, மலை என்றதால் மாட்டின் உயர்தோற்றம் பெறப்பட்டது. தங்கம் என்றதால் உடற்றூய்மையாலாகிய ஒளி பெறப் பட்டது.

## இயல் 87

மேலும் காய்கறிகள் ஏலக்காய் முதலிய நறுமணப் பொருள்கள், கரும்பின் கட்டி வெண்ணெய், நல்லெண்ணெய், தேங்காய், பருப்பு வகை, மாவு, முட்டை, அரிசி, உளுத்தம் பயறு, மற்றவைகள் ஆகிய எல்லாப் பொருள்களையும் மிகுதியாகத் தூய்மை செய்தும் காயவைத்தும் உயர்ந்த பாக்கியமாக்கி வைத்தார்கள்.

மேலும் பல வகையிலும் உதவி செய்யும் ஆட்கள் ஒருத்தருக் கொருத்தர் விழுக்கா டாக ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கின்றூர்கள் என்று மன்னனிடம் கூறினுர்கள்.

என்பன இவ்வியலிற் காண்க

காய்கறிகள் தோட்டங்கள் நூறு போதும்
கமழ்ஏலம் முதலியன ஐந்து வீடு
வாய்படுமுன் குடல் இனிக்கும் கரும்பின் கட்டி
வண்டிஐ யாயிரமே முன்ஏற் பாடு.
வேய்பிளந்த பெருமத்து விளைத்த வெண்ணெய்
வெற்பளவு! நல்லெண்ணெய்க் குடம்இலக்கம்!
நோய்தீர்ந்த இளந்தேங்காய் உரிப்பார் ஓர்பால்
நூறுவண்டி காத்திருக்கும் மட்டை ஏற்ற

கமழ்—மணக்கின்ற, கரும்பின் கட்டி—சக்கரை, கற்கண்டு, வெற்பளவு—மலையளவு, மட்டை ஏற்ற—மட்டையை ஏற்றிக் கொண்டு போய்க் கொட்ட. இவ்வாறு சேர்த்திருக்கிறூர்கள் என முடிக்க.

பருப்பெல்லாம் இருப்பாக்கி மாஇடித்துப்
பையாக்கி நெல்லெல்லாம் அரிசி ஆக்கி,
விருப்பாக்க விருந்தினரைக் கடுகும் ஈர்த்து
வீணுக்கி டாதுவெயிற் காய்ச்சலாக்கி
நெருப்பாக்கி டாதுளுந்தம் பயற்றை எல்லாம்
நெடியாக்கும் பொன்வருவல் ஆக்கித், தாளிப்
புரித்தான எல்லாமும் தூய்மை யாக்கி
உயர்ந்தபாக் கியமாக்கி வைத்தார் என்றூர்.

பையாக்கி — முட்டை யாக்கி, ஈர்த்து— ஈரமாகி; நெருப்பாக்கிடாமல்—கருகச் செய்து விடாமல், நெடியாக்கும் பொன் வருவல்—உளுத் தம் பயறு மணம் கொடுக்கும் பதத்தில் வருப்பது, தாளிப்புரித்தான-தாளிப்பு உரித்தான, தாளிப் புக்கு உரித்தான, பாக்கியம்—அரும் பொருள்; நெய்தல் நிலத்தூரான பாக்கத்தில் இறக்குமதி யாவனவும்,விளேவு ஆவனவும் ஆகிய பொருளேக் குறித்துப் பின் அரும் பொருள்களேக் குறிப்பதா யிற்று. பாக்கம் ஆகுபெயராய்ப் பாக்கத்துப் பொருளுக்காயிற்று. பாக்கம்—பாக்கியம் என மருவிற்று. ஓவம்—ஓவியம் என மருவியது போல.

குளிப்பார்க்கு நறும்பொடிகள், தூங்கு தற்கும்
குடிப்பார்க்குச் சுவைநீரே நீட்டு தற்கும்
விளிப்பார்க்கே இதோ வந்தேன் என்ப தற்கும்
வெந்நீரே கேட்பார்க்குத் தருவ தற்கும்
வெளுத்தாடை தரக்கேட்டால் வெளுப்பதற்கும்
வியர்வென்ருல் அயராமல் விசிறு தற்கும்
ஒளிப்பின்றி ஒருவருக்கோர் ஆள்வி மூக்காடு
ஒப்பந்தம் செய்யப்பட் டுள்ளார் என்ருர்.

நறும் பொடிகள்—உடம்பில் தேய்த்துக் குளிப் பதற்கான பச்சிலே, கிச்சிலிக் கிழங்கு, வெட்டி வேர் முதலிய சேர்த்து இடித்த பொடிகள். விளிப்பார்க்கு—கூப்பிடுகின்றவர்கட்கு, வெளுத் தாடை—வெளுத்து ஆடை, வியர் வென்ருல்— வியர்வு என்ருல், புழுக்கத்தால் வியர்வை உண் டாகிறது என்று கூறினுல்.

## இயல் 88

மேற்றிசை நோக்கி அமைந்த கீழ்த்திசையான ஒரு கோயிலின் வெளிப்புறக் கதவு திறந்தது. பரிதி தோற்றம் அளித்தது. மக்கள் அனைவர்க்கும் இமைக் கதவு திறந்தது. கண்கள் தோன்றின. சோர்வு என்ற கதவு திறந்தது உணர்வு தோன்றிற்று.

வானளவு உயர்ந்த கண்ணகிக்கெனக் கட்டி முடித்த பெரிய கோயிலின் மணிக்கதவு திறந்தது. கற்புத் தோற்றமளித்தது.

திறல் வேந்தனான செங்குட்டுவன் அவ்வாறு கண்ணகி கோயிலைத் திறந்து வைத்துக் கேளீர் கேளீர் பிறர் நெஞ்சுபுகாதவள், புகார் பெற்ற செல்வம். பிழை ஒன்றும் அறியானைத் தன் வாழ்விற்கே உறவான கோவலனைப் பழி சுமத்திக் கொன்றவனான பாண்டியனை நாட்டோடு ஒப்பற்ற புரட்சித் தீயில் இட்டுத் தன் ஊன் உடம்பை நீக்கிக் கற்பினால் புகழ் உடம்பு பெற்றாள்,

அவள் இவளே

உலகீரே காண்மின் என்று கூறினாள். அங்குக் கூடியிருந்த நாட்டு மக்களும் உலக மக்களும்

வாழியேவே கண்ணகியின் புகழ் என்று வாழ்த்தினார்கள்.

அகமுடையாள் பேர்காத்தல் அறம் என்று வாழுநெறி காட்டினாள். இக் கற்பின் அன்னை வாழ்க. என்று வாழ்த்தி நின்றாள் வேண்மாள். வாழியவே தமிழ்! என்றார்கள்

மகிழ்ந்தவராகி. மலர் மாரி பெய்தார்கள், இசை மாரி பெய்தார்கள்.

என்பன இவ்வியலிற் காண்க.

மேல்நோக்கும் கீழ்த்திசையாம் கோவில் ஒன்றின்
வெளிக்கதவு திறந்திடவும் பரிதி தோன்றும்!
ஆன இமைக் கதவுதிறந் திடவும் கண்கள்
அனேவோர்க்கும் வெளித்தோன்றும்! சோர்வே
என்ற
ஊனநெடுங் கதவுதிறந் திடவும் யார்க்கும்
உணர்வு தோன்றும்! தோன்ற உலகோர் வாழ்த்த
வானுயர்ந்த கண்ணகியின் பெரிய கோயில்
மணிக்கதவு திறந்திடவும் கற்புத் தோன்றும்

கீழ்த்திசை அதாவது கிழக்குத் திசையானது மேற்குத் திசை பார்த்து அமைந்திருக்கும் ஒரு கோயில் என்று கூறப்பட்டது. அக் கோயிலின் வெளியாகிய கதவு திறக்கப்பட்டவுடன் பரிதி (பகலவன்) தோன்றிற்று.

சோர்வு—உணர்வின்மை,தோன்ற—இவ்வாறெல்லாம் தோன்றவே, இது காரணப் பொருட்டு இறந்த காலத் தெரிநிலை வினையெச்சம். சோர்வேயான ஊன நெடுங் கதவு—சோர்வு என்பதான ஊனமுள்ள நீண்ட கதவு, ஊனம்—கேடு, மணிக் கதவு—அழகிய கதவு; மணி கட்டிய கதவுமாம்.

திறல்வேந்தன் குட்டுவன்அப் பெரிய கோயில்
திருக்கதவு திறக்கவைத்துக் கேளீர் கேளீர்
பிறர் நெஞ்சு புகாள்; புகார் பெற்ற செல்வம்
பிழை ஒன்றும் அறியாளைத் தன்வாழ் வுக்கே

உறவானைப் பழிகூறிக்கொன் றேன்நாட் டோடு
ஒருபுரட்சித் தீயிலிட்டாள்; ஊன்உ டம்பை
அறநீக்கிக் கற்பினுற் புகழ டைந்தாள்
அவள் இவளே உலகீரே காண்மின் என்ருன்.

திறல்—வலிமை. திருக்கதவு—பெருமைமிக்க கதவு, பிறர் நெஞ்சு புகா—பிற ஆடவரின் உள் ளத்திற் கொள்ளும்படி தன்னைக் காட்டிக் கொள் ளாதவள்; எதிர் மறை வினையாலணையும் பெயர், புகார்—காவிரிப்பூம் பட்டினம்; சோழநாடு. உறவான்—சொந்தக்காரன்

பழி கூறிக் கொன்றேன்—பாண்டியன். இந் நாளில் இதைத் திறப்பு விழாச் சொற்பொழிவு என்பார்கள்,

வாழியவே கண்ணகியின் சீர்த்தி என்று
வாழ்த்தினர் நாட்டாரும் வந்தோர் யாரும்
ஆழிசூழ் உலகத்து மகளிர்க் கெல்லாம்
அகமுடையான் பேர்காத்தல் அறமாம் என்னும்
வாழுநெறி காட்டினுள் கற்பின் அன்னை,
வாழியவே எனவாழ்த்தி நின்ருள் வேண்மாள்
வாழியவே தமிழ் என்ருர்! மகிழ்ந்தா ராகி
மலர் மாரி இசைமாரி பெய்தி ருந்தார்

சீர்த்தி—புகழ். மலர் மாரி—மலர்மழை, இசைமாரி—இசையாகிய மழை; பெய்திருந்தார் —பெய்து கொண்டே இருந்தார்கள். தமிழிலக் கியங்கள் தந்தவைகளே கற்பு முதலிய பண்பாடு. ஆதலால் தமிழ் வாழ்கென்ருர்.

## இயல் 89

அதே நேரத்தில் மாதரியும் ஐயையும் தேவந்தியும் மற்றவரும் கண்ணகியைத் தேடித் தேடி இச் செய்தியை அறிந்தவர் சொல்லக் கேட்டு வந்தோம். மன்னரே மன்னியாரே என்ன துன்பமுற்றோம்! இனியும் அத்துன்பத்தைப் பொறுக்க மாட்டோம் என்று சொல்லிவிட்டு ஓடி எதிர் நின்ற கண்ணகியின் அடியில் வீழ்ந்து நீ தீதுற்றாய் என்று எங்கு அலைந்தோம் அன்னையே திருவுற்றாய் புகழான உருவுற்றாய் என்று கண்ணகியின் முகம் பார்த்து ஏங்கி ஏங்கி அழுதார்கள்.

அதுகண்ட எழில் மன்னன் அவரால் எல்லா வரலாற்றையும் கேட்டுக் கோவலனின் கூத்தியாகிய மாதவி நிலை என்ன என்றான்.

அதற்கு அவர்கள் கோவலனுக்கன்றி வேறெவர்க்கும் முந்தானை விரித்தறியாத மாதவிக்கு ஒரு பாக்கியமாய் இருந்த கோவலன் மகள் மணிமேகலையும் நெஞ்சம் துறவொன்றே எனக் கொண்டு, அத் துறவில் தன் அழகைப் பெய்தாள் என்று சொன்னார்கள். அது கேட்ட குட்டுவனும் வியப்படைந்து, எதிர் நின்ற திருக் கோலமாயிருந்த கண்ணகியை நோக்கினான்.

அதே நேரத்தில்

இலங்கை மன்னனாகிய கயவாகுவும் ஆரிய வேந்தரும் குடகக் கொங்கரும், மாளவ வேந்தரும் கண்ணகியை வணங்கி

வஞ்சியர்க்கு (வஞ்சி நாட்டில் உள்ளவர் கட்கு) வாழ்வளிக்க வந்த அன்னாய் இனிதாக

எம் நகர்க்கும் எழுந்தருள்க, என்று சொல்லி அந்தக் கண்ணகி திரு முகத்தில் விழி செலுத்தி நின்றார்கள்,

என்பன இவ்வியலிற் காண்க.

மாதரியும் ஐயையும்தே வந்தி தானும்
மற்றவரும் கண்ணகியைத் தேடித் தேடி
ஈதறிவோம் என்றவரின் வாய்ச்சொல் கேட்டே
இங்கு வந்தோம் மன்னவரே மன்னி யாரே
ஏதுற்றோம் யாம் பொறோம் என்றே ஓடி
எதிர்நின்ற கண்ணகியின் அடியில் வீழ்ந்து
தீதுற்றாய் என்றலைந்தோம் எனினும் அன்னாய்
திருவுற்றாய் புகழான உருவும் உற்றாய்

என்றழுதார் திருமுகம்பார்த் தேங்கி ஏங்கி!
எழில் மன்னன் அன்னவர்பால் பலவும் கேட்டே
நன்றான கோவலனின் கூத்தி யான
நங்கைநிலை ஏதென்றான், அவர்கள் "வேந்தே
முன்தானை கோவலற்கு விரித்த தன்றி
முகமொன்றும் அறியாத மாத விக்கே
ஒன்றான மகள்மணிமே கலையும் நெஞ்சம்
ஒன்றுனாள் துறவில்தன் இளமை பெய்தாள்

ஈதறிவோம் என்றவர்—கண்ணகி வஞ்சி புகுந்து இறந்ததான இச் செய்தியை யாம் அறிவோம் என்று சொன்னவர்கள், ஏதுற்றோம்—என்ன துன்பம் அடைந்தோம்? யாம் பொறோம்—இனிமேலும் நாங்கள் அத்துன்பத் தைப் பொறுக்க மாட்டோம், திருவுற்றாய்—மேன்மையுற்றாய், புகழான உரு—உருவக்கல்

நாட்டப் பெற்ருய், முன்தாஷீ — முந்தாணி முந்தாஷீ, ஒருவனுக்கு விரித்ததன்றி—மாதவி கோவலன் ஒருவனுக்கே மஷீவியாய் இருந்தா ளேயல்லாமல், ஒன்ருன மகள்—இஷீயற்ற தன் மையுள்ள மகள். நெஞ்சம் ஒன்ருனுள்—மனம் துறவு கொள்கை ஒன்றே ஆயினுள். பெய்தாள் —இழந்தாள், நீர் வார்த்துத் தன்ஷீ அளித் தாள் என்ற குறிப்பு.

எனக்கேட்ட மன்னவனும் வியப்புற் ருஞய்
எதிரிலுறு கண்ணகியை நோக்கி நின்ருன்.
புஷீதாரன் இலங்கைக்கோன் கயவா கென்பான்
பூண்முடிஆ ரியவேந்தர் குடகக் கொங்கர்
மனமுயர்மா ஷீவேந்தன் வணங்கி வாழ்த்தி
வஞ்சியர்க்கு வாழ்வளிக்க வந்த அன்ஞய்
இனிதாக எம்நகர்க்கும் எழுந்த ருள்க
எனச்சொல்லித் திருமுகத்தில் விழிவைத் தார்கள்.

புஷீதாரன்—புஷீந்த மாஷீயுடையவஞன, பூண்முடி—பூண்டிருந்த முடியுடைய, மனம் உயர் —உயர்ந்த மன நிஷீயுடைய, எம் நகர்க்கும்— எம்முடைய நகர்கட்குத் தனித் தனியாக, நகர்— நகர்கள்.

## இயல் 90

கண்ணகியின் நின்ற திருக் கோலத்தை அவ்விழாவிற்கு வந்திருந்தோரில் பல்லோரும் பார்த்தபடியே இருந்தார்கள். அவ்வாறு பார்த் தவர்களின் நெஞ்சம் தான் விரும்பியதைக் கண்ணகி யிடமிருந்து பெற்றுக் கொண்டபின்

மீளும். கண்ணகி அன்பர்கட்கு உதவி செய்ய மறுத்தாள் என்பதே இல்லை.

இன்று ஒன்றை அவளுக்கு நாம் அளித்தால் நாளைக்கு ஒன்றை அவள் நமக்களிப்பாள் என்ற மடமை எண்ணம் அங்கு எவர்க்கும் உண்டாகவே இல்லை. குன்று தரும் அருவிபோல் அழகு வெள்ளம் கொழிக்கின்றன அவள் உறுப்புக்கள் யாவும் ஆங்கே.

அவள் இதழ்கள் இரண்டும் பேசிக் கொண்டே இருப்பன போலத்தோன்றும். கண்கள் அருளைச் சுரந்து கொண்டேயிருக்கும். நெற்றி ஒளியை வீசிக் கொண்டே இருக்கும். நகைப்பு மகிழ்ச்சியை விளைத்துக் கொண்டே இருக்கும்.

புருவமானது செயலில் முற் செல்லக் கூசிக் கொண்டே இருக்கும். மகளிர்க்கு வீரத்தை விளைத்துக் கொண்டே இருக்கும். அவளின் முழுமைத் தோற்றம், தமிழரை இகழ்ந்து கொண்டிருக்கும். ஆரியர்க்கெல்லாம் தமிழறத்தை இயம்புவதாகும்.

அமைச்சனை வில்லவன் கோதையிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு வேண்மாளோடு என் கோயிலிருந்தபடி மக்கள் தொண்டு செய்திருப்பாய் என்று அன்னை எனக்குச் சொன்னாள் என்று கூறி மன்னன் மன்னியுடன் கண்ணகி பெருங் கோயில் புகுந்தான். ஐயை முதலானோர் தாம் ஊருக்குச் செல்லுமுன் அரசனைக் கண்டு எங்கட்கு கண்ணகி அகத்துணையாயிருப்பதாக அருளினாள் என்று கூறித் தம்மூர் நோக்கி நடந்தார்கள்.

என்பன இவ்வியலிற் காண்க.

நின்றிருந்த கோலத்தைப் பல்லோர் தாமும்
நெடுநேரம் பார்த்தபடி இருந்தார்; நெஞ்சம்
ஒன்றொன்றும் கேட்டதனைப் பெற்று மீளும்.
உதவமறுத் தாள்என்ப தொன்று மில்லை.
இன்றொன்றை நாமளித்தால் நாளைக் கொன்றை
எமக்களிப்பாள் எனும்மடமை எழவே இல்லை.
குன்று தரும் அருவிபோல் அழகு வெள்ளம்
கொழிப்பனவாம் உறுப்புக்கள் யாவும் ஆங்கே.

உருவப் பொருள் நிலை; நின்றதிருக்கோலம், இருந்த திருக்கோலம்; கிடந்த திருக்கோலம் என மூன்றாகக் கூறுவர். கண்ணகி உருவத்தின் நிலை நின்ற திருக்கோலம் ஆகும். நின்றபடி இருப்பதோர் அழகிய நிலை என்றபடி.

உருவத்தைப் பார்த்தபடி நின்றவரின் நெஞ்சம் ஒன்றொன்றும் எது விருப்பமோ அதைப் பெற்றுக் கொண்டுதான் வேறு ஒரு பக்கம் போகுமென்பார் நெஞ்சம் ஒன்றொன்றும் கேட்டதனைப் பெற்று மீளும் என்றார்.

அந்த நெஞ்சங்கள் கேட்டது என்ன? அழகிய கருத்துக்கள்

கண்ணகியின் படிவம் கொடுத்ததும் அது தான். கற்றச்சனின் திறமும் கண்ணகி வரலாற்றுப் பயனும் கூறியபடி.

இன்று பலி முதலியவற்றில் ஒன்றை உதவினால் அதுப்பற்றி நாளைக்கு அந்த உருவம் ஒரு நன்மையைத் தரும் எனும் உருவ வணக்க கொள்கை யாவதோர் மடமை அங்கு எழவே

யில்லை, ஏன்? கண்ணகிக்கு உருவக்கல் நாட்டியதன் நோக்கமும் அதுவல்ல. காணவந்தார் எதிர்பார்ப்பதும் அதுவல்ல. ஆதலின் இன்னென்று......... எழ வில்லை எனப்பட்டது.

பேசிக்கொண் டேயிருக்கும் இரண்டி தழ்கள்!
பீரிட்டுக் கொண்டிருக்கும் அருளைக் கண்கள்!
வீசிக் கொண் டேயிருக்கும் ஒளியை நெற்றி
விளைத்துக்கொண் டேயிருக்கும் நகைம கிழ்வைக்!
கூசிக்கொண் டேயிருக்கும் மகளிர்க் கெல்லாம்
கொடுத்துக் கொண் டேயிருக்கும் புருவம் வீரம்!
ஏசிக்கொண் டேயிருக்கும் ஆரி யர்க்கே
இயம்புவது தமிழறத்தை முழுமைத் தோற்றம்

பேசிக்கொண்டே இருக்கும் இதழ்கள் என்றது இதழ்கள் அசைவதுபோல் இருப்பதை. பேசிக்கொண்டே யிருப்பது போல் இருந்தன இதழ்கள் என்க. பீரிட்டுக் கொண்டிருக்கும்— மிகுதியாய்க் கொண்டிருக்கும் என்றபடி. கல்லுருவத்தின் முழுத்தோற்றம் ஆரியர்க்கு ஒருவனுக்கு ஒருத்தியே என்பது முதலிய தமிழறத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும் என்பார் ஏசிக் கொண்......முழுமைத் தோற்றம் என்றார்.

வில்லவன்கோ தைதன்பால் ஆட்சி நல்கி
வேண்மாளோ டிங்கிருந்து மக்கள் தொண்டைப்
புல்லுகஎன் றருளினள் அன்னை என்று
புதுக்கோயில் மனைவியுடன் வாழ்ந்தான் மன்னன்

செல்லுமுன் மன்னனிடம் இளைய ஐயை
முதலானோர் செப்பினாள் எங்கள் அன்னை
நல்லகத்திற் றுணையிருப்பேன் என்றாள் என்று
நடந்தார்கள் ஊர்நோக்கி மகிழ்ச்சி யோடே

இளைய ஐயை முதலானோர் எங்கள் அன்னை நல்லகத்தில் துணையிருப்பேன் என்றே செப்பினாள் என்று நடந்தார்கள் என்று மொழி மாற்றுக.

கண்ணகியுருவம் தனக்கு உண்டாக்கிய எண்ணத்தை வில்ல.........புல்லுக என்று அருளினாள் என்று கூறினான் மன்னன். மற்றவையும் அவ்வாறே, நல்கி —ஒப்படைத்து, புல்லுக— அடைக. மேற்கொள்க என்றபடி.

ஆட்சி புரிவதும் மக்கள் தொண்டுதான் என்றாலும் ஒழுக்கம், வழக்குத் தண்டம்என்பவற்றில் வழக்கும் தண்டமும் ஆகிய இருதுறைகளையும் வில்லவன் கோதையிடம் விட்டு ஒழுக்கத்துக்கு உழைப்பதை மட்டும் சிறப்பாகக் காட்ட மக்கள் தொண்டு எனப்பட்டது.

ஐயை முதலியோர், "அன்னை எங்கள் நல்ல உள்ளத்தில் துணையிருப்பேன்" என்று கூறினாள் என்றனர். அதாவது, கண்ணகியின் வரலாறு தம் உள்ளம் தீ நெறியிற் செல்லாதபடி செய்யும் என்று அவர்கள் கூறியதாகும்.

## இயல் 91

இலங்கைக் கயவாகு மன்னன் மற்றும ஆரிய மன்னர் முதலியவர்களுடன் அரசனை

வாழ்த்தி வஞ்சி நாட்டில் நீவிர் நிறுவிய படிவ மானது உலக மக்களின் மனத்திலெல்லாம் ஒழுக்க வரலாற்றினைச் செய்தது. எம்நாடுகளும் கற்பரசியாகிய கண்ணகியின் அடியில் வாழ வேண்டும். அதற்கு இதனைச் செய்த கலைவல் லாராகிய கற்றச்சரை அனுப்பி உதவுக என்று கூறி இப்படிவத்தால் நீவிர் பெற்றதென்ன என்று கேட்க அதற்கு கயவாகு நான் அன்னையை நோக்கி எம்பெருமைமிக்க இலங்கை மக்கட்கு உன்னையல்லால் ஏது துணை என் றேன். அன்னை தன் அஞ்சல் என்ற வலக்கை தூக்கி நின்றாள். அதன் பிறகும் நேரில் அங்கு நின்றிருந்தவள் என் நெஞ்சில் எழுந்தருளி நீடூழி வாழ்க என்று வாய்திறந்து கூறினாள், என்றான்.

உடனிருந்த ஆரியமன்னன் "கல்தச்சன் அன்னையின் நெஞ்சத்தைத் தன் நெஞ்சாக்கி, அதன்பின் அவளுருவத்தைக் கல்லில் சேர்த் தான். அன்னையைப் பார்க்கத் திரும்புமுன் அவள் நெஞ்சில் அறிவைச் சேர்க்கின்றாள் அதன்பின் அழகு காட்டுகின்றாள். அப்படிவம் இந்நிலத்துக்கொரு படிவம் எனச் செய்து பண்டுமுதல் இருந்துவரும் தமிழ்க் கலைக்கே மேன்மையைச் செய்து விட்டான்" என்றான்.

என்பன இவ்வியலிற் காண்க.

வஞ்சியிலே ஒருபடிவம் உலக மக்கள்
மனத்திலெலாம் ஒழுக்கவர லாறு வைத்த
எம்சிறந்த தமிழ்வேந்தே வாழ்க நீவிர்
எம்நாடும் கற்பரசி அடியில் வாழத்

தம்சிறந்த துணைவேண்டும் இதனைச் செய்த
தலைசிறந்த கலைவல்லோர் கற்றச் சர்தாம்
வஞ்சியினை அங்கங்கு வைப்பார் நீவிர்
வாழ்ந்தீர்போல் யாமெல்லாம் வாழ்வோம் என்றே
சீரிலங்கைக் கயவாகு செப்பி நின்றான்
சீரியதே அஃதென்றார் உடனி ருந்தோர்.
பாரிலங்கு குட்டுவனும் நன்றே மற்றிப்
படிவத்தால் நீவிர்உற்ற தென்ன என்றான்
ஆரிலங்கைக் கேதுபுகல் என்றேன் அன்னை
அஞ்சலென்ற தன்வலக்கை தூக்கி நின்றாள்
நேரிலங்கு நின்றிருந்தோள் நெஞ்சில் வந்தாள்
நீடூழி வாழ்கஎன வாய்ம லர்ந்தாள்

எம்நாடு கற்பரசி அடியில் வாழ—எங்கள் நாட்டு மக்களும் கற்பரசியின் ஒழுக்கத்தின் அடிப்படையில் வாழ, தம்—தங்களின், வஞ்சியினை அங்கங்கு வைப்பார்—வஞ்சிக் கொடி போன்ற கண்ணகி உருவக்கல்லை அந்தந்த நாட்டில் செய்து வைக்க முடியும் என்றும், கண்ணகி உருவத்தால் சிறப்புற்ற வஞ்சிநாட்டை அந்தந்த நாட்டில் உண்டாக்க முடியும் என்றும் பொருள் கொள்க. நீவிர்—வஞ்சி நாட்டினராகிய நீங்கள், படிவத்தால் உற்ற தென்ன—கண்ணகியின் இந்த உருவக் கல்லால் நீவிர் அடைந்ததென்ன, மற்றிப் படிவம்—மற்று இப்படிவம் எனப்பிரிக்க.

புகல்—உறுதுணை, அஞ்சல் என்ற வலக்கை —அஞ்சற்க என்று காட்டும் வலது கை. வாய் மலர்ந்தாள்—வாய்திறந்து சொன்னாள். வாய்

திறந்து சொன்னது போன்ற ஓர் மனத்தோற்றத்தை வெளியிட்டபடி.

என்றுபல கயவாகு சொல்ல மற்றும்
இருந்திட்ட ஆரியனும் கற்றச் சர் தாம்
அன்னையினுள் நெஞ்சத்தைத் தன்நெஞ்சாக்கி
அதன் பின்னர் அவளழகைக் கல்லில் தேக்கித்
தின்னுமுன்னே சுவையூட்டும் தேன்கு ழல்போல்
திரும்புமுன்னே அறிவூட்டி அழகைக் காட்டும்
இந்நிலத்துக் கொருபடிவம் ஆக்கிப் பண்டே
இருந்த்தமிழ்க் கலைக்குமுடி கவித்தார் என்றான்

தேன்குழல்—முறுக்கினத்தில் ஒருவகைத் தின்பண்டம். பண்டுமுதல் தமிழகத்தில் இருந்து வரும் கற்றச்சுக் கலைக்கு இப்படிவத்தைச் செய்தன் மூலம் முடிசூட்டிவிட்டார் கற்றச்சர் என்பான் "பண்டை " முடிகவித்தான் என்றான்.

## இயல் 92

கண்ணகி விழாவுக்கு வந்தவர்களின் மனமலரில் ஏறிக்கொண்டு கண்ணகி போய்விட்டாள் என்றாலும் வஞ்சியிலும் இருந்தாள். மற்றும் உள்நாட்டினர் தங்கள் வீட்டு வாயில்கள் இந்தாரும் என்று அழைக்க ஏன்காணும் என்று உட்சென்றார்கள்.

விழாக்கண்டு வெளியூர் செல்ல வேண்டிய குடும்பத்தின் ஒருதாய் முந்தாநாள் காணமல் போன குழந்தையை அடைந்து மகிழ்ந்து செல்லுகின்றாள்.

தன்னூர்க்குப் போக வழி தெரியாமல் ஒரு செவிடனை வழி கேட்டுச் சிரிக்கின்றான் ஓர் ஆள்.

தங்குவதற்கு இடந்தந்த ஒருவனின் தங்கையை மனைவியாகக் கொண்டுவிட்டான் ஒருவன்! ஊருக்குப் போகும்போது அவ்விருவரும் தம் கைகூப்பி நின்றுவிடை கேட்க, அண்ணன் இங்கே தானையா மணம் நடக்கவேண்டும் என்று கூற, இருக்கின்றோம் என்றுரைத்துச் சிறிது நேரத்தில் யாருக்கும் தெரியாமல் போகும்போது தங்கையை நோக்கிக் கூடப் பிறந்த தங்கையா இது செய்வாள் என்றான். அதற்குத் தங்கை தங்கு ஐயா என்று கூறித்தான் தனியே தங்காமல் அவனோடு கம்பி நீட்டினாள்.

என்பன இவ்வியலிற் காண்க

வந்தாரின் மனமலரிற் போனா ளேனும்
வஞ்சியினை வஞ்சியா ளாயி ருந்தாள்
இந்தாரும் எனவீடெ லாம்அ ழைக்க
ஏன்காணும் என்றுள்நாட் டாரும் சென்றார்
முந்தாநாள் காணடிந்த சின்ன பிள்ளை
முக்கூட்டுத் தெருவிலொரு வீட்டி னின்று
செந்தாழை தான்பெற்று வீடு சேர்ந்தாள்
செவிடனைப்போய் வழிகேட்டுச் சிரித்தான் ஓர்ஆள்

வஞ்சியினை — வஞ்சிநாட்டை, வஞ்சியாள் ஆய் இருந்தாள்—வஞ்சனை செய்யாதவளாய் இருந்தாள். காணடிதல்—காணாமற்போதல்.

தங்கஇடம் தந்தானின் தங்கை கொண்டான்
தங்கைகள் கூப்பிவிடை கேட்கும் போதில்
இங்கையா மணம்நடக்க வேண்டும் என்ன
இருக்கின்றோம் எனஉரைத்துப் போகும் போதில்

எங்கையா போகின்றீர் என்று கேட்க
ஏங்கையா எங்கள்மணம் ஆங்கென் றூர்கள்
தங்கையா ஒப்பினுள், என்றுன் தங்கை
தங்கையா எனச்சென்றுள் தங்கா ளாகி.

விழாக் கருதி வஞ்சிநகர் வந்த ஒருவன் தங்க இடம் கேட்டான். வீட்டுக்காரன் சரிஎன் ருன். அவள் தங்கைக்கும் அவனுக்கும் மனத் தொடர்பு ஏற்பட்டுவிட்டது என்பது முதல்வரி யின் கருத்து. விழா முடிந்தவுடன் நாங்கள் போய் வருகின்ளும் என்று அந்த இருவரும் தம் கைகள் கூப்பி விடை கேட்கும்போது என் பது அடுத்த வரியின் கருத்து.

இங்கையா—இங்கு ஐயா.

ஏங்குஐயா—ஏங்க ஐயா என்பதன் அகரம் தொகுத்தது. நீவிர் ஏங்கிக் கொண்டிரும், தங் கையா...தங்கஐயா—இங்கே தங்கியிரும் ஐயா.

கருவூரின் ஒருமுதியோள் விருந்திற் பெற்ற
கனிவாழைத் தார்பலாச் சுளைகள் மற்றும்
ஒருநூறு கொய்யாமா முப்பத் தைந்தும்
ஒன்ருகக் கட்டி, அதைப் பேரர்க் கென்றே
இருகையால் தூக்குவாள் முடிய வில்லை
இருக்கவிட்டுப் போகமனம் வரவு மில்லை
பெருங்குரங்கு பத்துவந்து விழுங்கித் தீர்த்தும்
பின்னும் உண்டோ எனக் கேட்கும் கிழக்கு ரங்கை

முதியோள் கருவூரினள் எனினும் விழா விருந்து நடந்த இடத்தினின்று சிறிது தொலை வில்அமைந்த இடத்தினள் என்க. தன் பேர கட்கு ஆகட்டும் என்று நொள நொளத்த

பழங்களையெல்லாம் மூட்டை கட்டி வைத்திருந்தவள் எடுத்துப்போகத் தூக்குவாள் தூக்கமுடியவில்லை. விட்டுப் போகவும் மனமில்லை ஆனல் குரங்குகள் வந்து அவைகளையெல்லாம் விழுங்கித் தீர்த்து இன்னும் மடியில் ஏதாவது வைத்திருக்கின்ருயா என்று அந்த கிழவியாகிய குரங்கை உறுத்திப் பார்த்தன. பின்னும் உண்டா எனக் கேட்கும் கிழக்குரங்கை—பின்னும் உண்டா என்று கேட்பது போலிருந்தன அக்குரங்குகள் பார்த்த பார்வை என்றவாறு.

## இயல் 93

கண்ணகியினை மக்கள் பாடாத நேரமில்லை. கண்ணகியின் புகழ் வாழ்த்தானது மக்களின் காதில் விழா நேரமில்லை. விழாக் காண வந்த எண்ணற்றவர்கள் பல நாட்களாகச் சென்று கொண்டிருக்கின்ருர்கள். அவர்களின் கண்ணகியின் புகழ் வாழ்க என்ற வாழ்த்து மொழியைக் கேட்டுக் கேட்டுப் பறவைகளும் அதையே சொல்லுவன ஆயின.

வானில் பறந்துகொண்டிருக்கும் பருந்துகளும் அதே வாழ்த்தாகிய செந்தமிழ்த் தேனைச் சிந்தும்.

குலாலரும் இல்லத்தவரும் பாவை செய்யுநரும் தேனை முதலில் சிறிது எடுத்து இதழ் செய்து இதழால் சிரிப்பின் முதன்மையைச் செய்து பின் காது,மூக்கு, விழி செய்து கற்புமணியான கண்ணகி உருவை முடித்து அதன்பிறகு தான் தாம் தொட்ட பணி தொடங்குவார்கள்.

உழவு தொழில், தச்சு, வாணிகம் வரைவு கல்வி என ஆறின் வகை வாழும் பழங்குடியாம் தமிழரெலாம் இல்லந்தோறும், பகல்தோறும். இரவுதோறும் தம் ஒழுகலாறுகளில் ஏற்படும் சிறந்த பகுதியிலெல்லாம் ஒண்டொடியாள் கண்ணகியே வந்து நிற்பாள்! மழை, தென்றல், பெண்குழந்தை தமிழ் இவற்றின் நலத்தைத் தம் வாயூறி அடடா கண்ணகிதான் என்று சொல்லு வாரானர்கள்.

என்பன இவ்வியலிற் காண்க.

கண்ணில்விழா நேரமில்லை உருவம்! வாழ்த்துக்
காதில்விழா நேரமில்லை நாள்க டந்தும்!
எண்ணில்விழாக் காணவந்தோர் தம்ஊர் நோக்கி
ஏகுவார் பன்னாளும் வாய்தி றந்து
கண்ணகியின் புகழ்வாழ்க என்று சொல்லக்
காதாரக் கேட்டுக்கேட் டங்கி ருந்த
வண்கிளையிற் பறவைகளும் அதையே சொல்லும்
வான்பருந்தும் செந்தமிழாம் தேனைச் சிந்தும்

உருவம்—கண்ணகி உருவம், எண்ணில் விழாக் காணவந் தோர்—எண்ணில்லாதவராகி விழாக் காண வந்தோர். செந்தமிழாம் தேன் என்றது கண்ணகியின் புகழ்வாழ்க என்பதை.

பானைமுதற் செய்கின்ற குலாலர் தாமும்
பண்ணியங்கள் செய்கின்ற இல்லோர் தாமும்
யானைமுதற் செய்கின்ற வினைவல் லாரும்
இரும்புமுதல் வார்ப்படத்துக் கன்னார்தாமும்

தேனைமுதல் சிறிதெடுத்தே இதழ்கள் செய்தும்
சிரிப்புமுதற் செய்துபின் மூக்கும் காதும்
மானைநிகர் திருவிழியும் செய்து கற்பு
மணிசெய்து பின்தொட்ட பணிசெய் வார்கள்,

உருவம் அமைக்கும் தொழிலில் ஈடுபட்டவர்கள் முதலில் கண்ணகி உருவத்தைச்செய்த பிறகே அத்தொழிலைத் தொடங்குவார்கள் என்பது இப்பாட்டின் கருத்து. குலாலர்—குயவர், பண்ணியம்—உண்பன தின்பனவற்றின் பொதுப் பெயர். இல்லோர்—மனைமார்கள், கற்புமணி—கண்ணகி.

உழவுதொழில் வாணிகமே தச்சுக் கல்வி
உயர்வரையே எனும்ஆறின் வகையின் வாழும்
பழங்குடியாம் தமிழரெல்லாம் இல்லந் தோறும்
பகல்தோறும் இரவுதொறும் காணு கின்ற
ஒழுகலா றுகள்தம்மிற் சிறப்பி லெல்லாம்
ஒண்டொடியாள் கண்ணகியே வந்து நிற்பாள்!
மழைதென்றல் பெண்குழந்தை தமிழ்ந லத்தை
வாயூறி அடடாகண் ணகிதான் என்பார்.

தமிழரின் வாழ்க்கையிற் காணப்படும் ஒழுகலாறுகளில் ஏற்படும் சிறந்த பகுதியில் எல்லாம் கண்ணகியே வந்து தோற்றமளிப்பாள்.

மழை நலத்தை, தென்றல் நலத்தை, பெண் குழந்தையைத் தமிழ் நலத்தைக் காணும்போது அடடா கண்ணகி என்று அந்நலத்தைப் பெயரிட்டு மகிழ்வார். இனிதாக வந்து வீசும் தென்றலை அடடா இன்பம் என்று சொல்வதற்குப் பதிலாக அடடா கண்ணகி என்பார் என்க.

உழவு முதல் வரைவு ஈருக கூறப்பட்டது ஆறும் மக்கள் செயல்களின் ஆறு துறைகள்.

## இயல் 94

தமிழர்க்கு இருந்து வந்த அறம்பொருள் இன்பம் வீடுஎன்ற தமிழ் நான்மறைகள் மறைந்து ஒழிய நாம் ஆரிய நான் மறை செய்தோம். வள்ளுவரை மறைக்க மனுவைச் செய்தோம். எல்லா நூற்களும் தூய தமிழ் நூற்களே என்னும் நிலையை மறைத்தொழிக்க இழிந்த கொள்கைகளைக் கலந்த கலப்படத் தமிழ்நூற்களைச் செய்தோம். கண்ணகியை மறைக்க எந்நூலைச் செய்வது என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள் ஆரியர்கள்.

தமிழின் வேர் இருக்கும் வரைக்கும் தமிழ்க் கிளைகளும் அடி மரமும் இருக்கும். வேர் ஒழிந்தால்தான் தமிழ் ஒழியும் என்பது பற்றிய நம் முயற்சி கைகூடி வரும்போது நான்கு சாதியை ஒப்பிய நெடுஞ்செழியனையும் அவன் நாட்டையும் அழியும்படி செய்தாள். அவளைத் தொலைப்பதெந்நாள்? நாம் தலை எடுப்பது எந்நாள் என்றனர் ஆரியர்கள்.

செம்பில், கல்லில்; மஞ்சட் சாந்தில், சாணியில் சேற்றில் எவன் அமைக்கும் உருவுக்கும் ஆரிய மறைவழியே உயிரேற்ற வேண்டும். இது சட்டம். இதைப் பொய் என்ருக்கிக் கண்ணகிக்கு உயிருண்டாக்கும்படி முடித்துவிட்டான் தமிழ்த் தச்சன்.

நம் பொய்க் கோட்டை தகர்ந்தது. நம் நாளைய நிலை என்ன என்ருர்கள் ஆரியர்கள் என்பன இவ்வியலிற் காண்க.

செந்தமிழ்நான் மறைமறைக்க, வையம் கேட்டால்
சிரிப்பதோர் ஆரியநாம் மறையைச் செய்தோம்,
தந்ததிரு வள்ளுவன்நூல் மறைக்க நான்கு
சாதிசொல்லும் மனுநூலைச் செய்தோம். மற்றும்
எந்நூலும் தமிழ்நூலே எனல் மறைக்க
இழிநூலாற் கலப்படத்தைச் செய்தோம்; இந்தக்
கல்நூலைக் கண்ணகியை மறைக்க இந்நாள்
காணும்நூல் எதுஎன்றார் ஆரி யர்கள்

இழிநூல்—ஆரியரின் இழிந்த கருத்துக்களுடைய நூற்கள். இந்தக்கல்நூல்—இந்தக் கண்ணகியின் உருவமைந்த கல்லாகிய நூல், என்றார்—என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள்.

" தமிழ்ஒழுக்க வேர்இருக்கும்வரைத மிழ்ச்சீர்
தடங்கிளையும் அடிமரமும் இருக்கும். இந்நாள்
தமிழ்ஒழுக்க வேரழிந்தால் தமிழர் வாழ்வு
தலைகவிழும் " எனும்முயற்சி கைகூ டுங்கால்
அமைவுடைய நெடுஞ்செழியன் நான்கு சாதி
அறம் என்றான்; நாட்டோடும் அழியச் செய்தாள்
தமிழரசி கண்ணகியைத் தொலைப்ப தெந்நாள்
தமிற்கூடி ஆரியர்இவ் வாறு ரைத்தார்.

தமிற்கூடி ஆரியர் இவ்வாறுரைத்தார்—தம்மிற்கூடி ஆரியர் இவ்வாறுரைத்தார்.

செம்பிலும், கல்லிலும் மஞ்சள் சாணி,
சேற்றிலும் எவனமைக்கும் உருவினுக்கும்
நம்பெரியோர் ஆரியர்கள் மறையைக் கொண்டே
நல்லுயிர்ஏற் றுதல் வேண்டும் என்ற சட்டம்

பொய்ம்மைஎன் ருக்கியே கண்ண கிக்கும்
பொலிவுறவே உயிரமைத்தான் தமிழத் தச்சன்
நம்பொய்மைக் கற்கோட்டை தூளா யிற்று
நாளைநிலை என்னென்ருர் ஆரி யர்கள்.

செம்பு முதலியவற்றில் எவன் எவ்வகை உருவு அமைப்பதாயினும் அவ்வுருவுக்கு ஆரியர் மறையினல் ஆரியரைக் கொண்டே உயிர் ஏற்ற வேண்டும் என்பது சட்டம். அதைப் பொய்ம்மை யாக்கி இந்தக் கண்ணகி உருவத்தை அமைத்து விட்டான் தமிழத் தச்சன். நம் பொய்க் கோட்டையைத் தூள் தூள் ஆக்கி விட்டான். நாளைக்கு நம் நிலை என்ன என்றனர் ஆரியர் என்பது இப்பாட்டின் கருத்து.

பொலிவு—அழகு, உயிரமைத்தான்—ஆளுவதான உயிரை அமையச் செய்தான். இலக்கணப் படி உடலமைக்க உயிரமையும் என்றவாறு,

## இயல் 95

வாயழிகண் ணகிகற்பு! வைய மெல்லாம்
வாழியசெந் தமிழ்மாண்பு! தமிழ கந்தான்
வாழிய!வா ழியதமிழர்! யாண்டும் நன்று
வாழுகின்ற தமிழரெலாம் தமிழர் ஆட்சி
ஆழ்கடல்சூழ் தமிழ்நிலத்தில் நிலவச் செய்தல்
அறம் என்று திறங்காட்டும் தோள்கள் வெல்க.
வாழியவே புலி, கயல், வில் ஒருங்கி யன்ற
மணிக்கொடிதான்! வாழ்க அறம் வாழ்க நன்றே

வாழிவே புலி, கயல், வில் ஒருங்கியன்ற மணிக் கொடிகள்—சோழனுக்கே உரிய தென இருக்கும் புலியும், பாண்டியனுக்கே உரியதென இருக்கும் மீனும், சேரனுக்கே உரிய தென இருக்கும் வில்லும் ஒன்ருக இயன்றதான ஓர் அழகிய கொடி வாழ்க. அறம் வாழ்க, வாழ்க நன்றே என இயைக்க.